# ஆழ்ந்த அமைதி





ஆசிரியர் :

இராஜா ஹத்தீசிங்

தமிழாக்கியவர் :

பா. சொக்கலிங்கம்










**பழனியப்பா பிரதர்ஸ்**

சேப்பாக்கம், சென்னை-5. : : தெப்பக்குளம், திருச்சி - 2.

## பதிப்புரை

திரு. இராஜா ஹத்தீசிங் குறிப்பிடத் தக்க இந்திய எழுத்தாளர்களுள் ஒருவர் ; பத்திரிகையாளர் ; ஜவகர் லால் நேருவின் தங்கையான கிருஷ்ண ஹத்தீசிங்கின் கணவர். அவர் புதிய பொதுவுடைமைச் செஞ்சீனவைக் காண விரும்பினர் ; தமது நாடான இந்தியாவைப் புத்தம் புதிய முறையில் மாற்றுவதற்குத் துணை புரியக் கூடிய கருத்துக்களையும், முறைகளையும், வழி துறைகளையும் சீனவிலிருந்து தெரிந்துகொள்ள விழைந்தார்; வாய்ப்பு ஏற்பட்டது. ஒரு முறை, இந்தியப் பத்திரிகையாளர் தூதுக் குழுவில் ஒருவராகவும், பிறிதொரு முறை, இந்திய நல்லெண்ணத் தூதுக் குழுவில் ஒருவராகவும் ஆக இரு முறை சீன சென்றார்; செஞ்சீன முழுமையும் நேரில் சுற்றிப் பார்த்தார் ; சீனர்களின் ஆடம்பரமான விளம்பரப் பெருமைகளின் பின்னுள்ள உண்மை நிலைமைகளை அறிந்தார் ; இயங்காத் தொழில் நிலைகளையும், ஒழுங்கற்ற நிலச் சீர்திருத்தத்தால் வீணக்கப்பட்ட பயிர்த்தொழில் முறைகளையும், எப்பொழுதும் பயமுறுத்தல், மதிமயக்கம் ஆகியவற்றல் கட்டுப்பட்டுக் கிடந்த மக்களையும் கண்டார் ; சீனக் குடியரசுத் தலைவர் மா சே-துங்குடனும், மற்றும் பல அரசியல் தலைவர்களுடனும் பேட்டி கண்டு செய்திகளைத் தொகுத்தார் ; ஒரு நூலாக எழுதினர். அதுவே இந்த 'ஆழ்ந்த அமைதி' (The Great Peace) என்னும் நூலாகும்.

பிற நாட்டவரால் அறிந்து கொள்ள இயலாத ஒரு நாட்டைப் பற்றி — செஞ்சீனவைப் பற்றி — இதுகாறும் வெளிவராத முறையில், நல்ல அமைப்பில், உண்மையான புள்ளி நிலவரங்கள், சுவையான கருத்துக்கள், அழகிய நடைச் சித்திரங்கள் ஆகியவற்றுடன் இந்த 'ஆழ்ந்த அமைதி'யைத் திரு. இராஜா ஹத்தீசிங் எழுதியுள்ளார். 'மூங்கில் திரை'யை வேலியாக வுடைய செஞ்சீனவைப் பற்றி அறிந்து கொள்ள இயலாதவர்களுக்கு

இந்த நூல் ஓர் அரும் பெரும் விலைமதிப்பில்லாக் கருவூலம் போன்றதாகும்.

திரு. பா. சொக்கலிங்கம் அவர்கள் நல்ல தமிழ் அறிஞர்; 'லிங்கன்' என்ற செல்லப் பெயராலும், 'பாசொலி' என்ற சுருக்கப் புனை பெயராலும் அழைக்கப் படுபவர்; உயரிய பல தமிழ் நூல்களின் ஆசிரியர்; சென்னை அரசினரால் நடத்தப் பெறும் 'சௌபாக்கியம்' என்னும் தமிழ்த் திங்களிதழின் துணை ஆசிரியர்; கிழமைதொறும் 'சுதேசமித்திரன்' போன்ற பத்திரிகைகளில் விருப்பு வெறுப்பற்ற மதிப்புரைகள் எழுதி வருபவர். அவர்கள் ஆங்கில முதனூலின் சுவை சிறிதும் குறையாமலும், தமிழ் நாட்டவரும் செஞ்சீனவை நேரிற் பார்ப்பது போன்ற நோக்குடனும், இனிய எளிய நல்ல அழகொழுகும் கன்னித் தமிழ் நடையில் இதனை வழி நூலாக மொழிபெயர்த்துதவினர்கள்.

செஞ்சீனவை எழுத்து வழியாகவேனும் காண விழையும் தமிழ்நாட்டவர் முன் இத் தமிழ்ப் பதிப்பாம் 'ஆழ்ந்த அமைதி'யைப் படைக்கின்ரேம்.

—பழனியப்பா பிரதர்ஸ்

சர்வாதிகாரிகள் மக்களை ஒன்று படுத்துகிறோம் என்று கூறி அவர்களைத் தவறான பாதையில் கொண்டு செல்கின்றனர். ஒன்று படுத்துவது என்பது, இயலாத காரியம். சர்வாதிகாரிகள் மக்களைக் கண்ணியமாக ஆட்சி புரிவதில்லை. மாறாக, மக்களின் சுதந்தர உரிமையைக் கவர்வதுடன், அவர்களை அச்சுறுத்தவும் செய்கின்றனர். சர்வாதிகாரத்தில் பெரும் அமைதி நிலவுகின்றது என்றால், அங்கு அழிவிற்கு வித்திடப்பட்டு விட்டது என்று கொள்ளலாம்.

மான்டெஸ்குயு.

# உள்ளுறை




# ஆழ்ந்த அமைதி




## மதில் சூழ்ந்த நகர் செல்லல்

### 1. வகுத்த யாத்திரை

"மொழிந்தவர் அறிந்திலர்
அறிந்தவர் மொழிந்திலர்"
என லயோத்ஸு என்னும் அறிஞர்
கூறிச் சென்றார். அக் கூற்று மெய்யெனில்,
ஐயாயிரம் பதம் அடங்கிய நூல்தாம்
எழுதுவரோ? எண்ணிப் பார்மின்!



***1951-ஆம்*** ஆண்டு, செப்டம்பர் மாதம். இந்தியச் சீன நட்புக் கழகத்தினர் சீனு செல்ல அழைப்பு விடுத்தனர். இந்தியத் தேசியக் காங்கிரசின் கீழ், விடுதலைப் போராட்டத்தில் பணி யாற்றிய பின் அரசியலினின்றும் விலகி, பத்திரிகையாளனுகத் தொண்டு செய்ய முற்பட்டேன். சுதந்தர இந்தியாவில் அடக்கு முறையும், வறுமையும் அகன்று நேரிய ஆட்சி நிலவும் என்று நம்பிய மக்களின் ஏமாற்றம் கண்டேன். தக்க தலைமை

யின்மையால் மக்கள் அறியாமையிலும், வறுமையிலும் உழன்றூர்கள். அங்ஙனம் அல்லற்பட்ட ஆசிய மக்களுக்குச் சீனு புதிய வழி வகுத்தது போல் தோன்றிற்று. ஆகவே, சீன மக்களின் பெரும் பேற்றைக் காண ஆவல் கொண்டேன்.

பல ஆண்டுகளாகவே இதுபோன்ற தருணத்தை எதிர் பார்த்திருந்தேன். 1937-இல் இருந்தே எனக்குச் சீனுவின் தொடர்பு ஏற்பட்டது. இந்தியத் தேசியக் காங்கிரசின் சீன உதவிக் குழுவின் செயலாளராக இருந்தேன். அக் குழுவின் கீழ் ஜப்பான் படையெடுப்பால் அவதிப்பட்ட சீன மக்களுக்கு மருத்துவ உதவி அளிக்கப்பட்டது. அன்று முதல் சீனுவைப் பற்றிக் கிடைத்த நூல்களை யெல்லாம் படித்திருக்கிறேன். எட்கார் ஸ்நோ, ஈப்ஸ்டீன், குந்தர் ஸ்டீன் போன்ற எழுத்தாளர்கள் மாசேதுங்கை யும், ஏனுனில் அவருடைய சாதனைகளையும் மிகவும் புகழ்ந் துள்ளனர். சீனப் பொதுவுடைமைக் கட்சி, தனது தீவிரக் கொள் கையையும் விட்டுக் கொடுத்து, தேசத்தை ஒன்று படுத்துவதில் தாராள மனப்பான்மையுடன் நடந்து, ஒரு முற்போக்கு ஆட்சியை நிறுவியுள்ளது என்று அவர்கள் கூறியுள்ளனர். ஏகாதிபத்தியமும், லஞ்சமும் பல நூற்றுண்டுகளாகச் சீன மக்களை வாட்டியிருக்கின்றன. இன்று அவர்கள் முன்னுள்ள பிரச்சினைகள் எல்லாம், இந்தியாவிலும், அபிவிருத்தியில்லாத பிற நாடுகளிலும் காணப்படுபவையே.

பசி, அறியாமை, தேவை, துன்பம் யாவும் சீனமக்களின் வாழ்வைச் சுவையற்றதாகச் செய்துவிட்டன. எனினும், அவர்கள் முகத்தில் புன்னகை மறையவில்லை; அகத்தின் அமைதி குன்ற வில்லை. இரண்டாயிரம் ஆண்டுகளாக இந்தியாவும் சீனுவும் சமாதான உறவுடன், ஒன்று கலந்து வாழ்ந்து வந்துள்ளன. ஒருவருடைய கலை, சமயம், தத்துவம், இலக்கியம் ஆகியவற்றை மற்றவர் அறிந்திருந்தனர். ஒரு நாட்டின் யாத்திரீகர்கள் இமயப் பனிவரையையும், ஆசியாவின் பாலைவனங்களையும் கடந்து வந்து, மற்ற நாட்டினின்றும், உணர்வும் ஊக்கமும் பெற்றுத் திரும்பினர். அப்போது தக்கசீலம், ஹூங்மென், தாதுங் ஆகிய இடங்களில் தங்களது அடையாளங்களையும் பதித்து விட்டுச் சென்றனர். இன்று, சியாங்கேஷேக் அகற்றப்பட்டு, மாசேதுங் தலைமையின் கீழ் சீனு ஒன்று படுத்தப்பட்டு பல மாறுதல்கள் அடைந்துள்ளது. 'சீன மக்களின் வாழ்க்கைத் தரம் நாள்தோறும் உயர்கிறது; மக்களின் அயராத, உளம்

உவந்த உழைப்பினுல் பல அணைக்கட்டுகள் மிக விரைவில் கட்டப்பட்டன; கல்வி, குடிவீடு, மருத்துவ வசதி யாவும் பெருகு கின்றன; ஆனுல், இந்தியாவோ, உணவிற்கும், உடைக்கும் ஏங்கி நிற்கின்றது' என இந்தியப் பொதுவுடைமைக் கட்சி பறை சாற்றுகின்றது.

மக்கள் ஜனநாயகத்தில்,அடிமைத் தளை இல்லை; அச்சுறுத்தி அவர் மனத்தை ஆட்கொள்வ தில்லை; அவர்தம் சுதந்தரத்தை இழப்பது மில்லை என்று பொதுவுடைமையாளர் வலியுறுத்து கின்றனர். ஜனநாயகம் ஊழலை ஒழிப்பதற்கும், ஏகாதிபத்தியச் சுரண்டலை நீக்குவதற்கும் மக்களுக்குச் சர்வாதிகாரம் அங் குள்ளது என்று கூறுகின்றனர். சீனு இதற்கொரு எடுத்துக் காட்டாகும். தேச விடுதலை, தனி மனித சுதந்தரம், உணவு, உறையுள், உடை, சம சந்தர்ப்பம் ஆகிய உரிமைகள் அங்கே நிலவுகின்றன. இம் மாறுதலைக் கண்டு நான் ஐயுறவில்லை. அவர்களுக்கு எது நல்லதென்று அவர்களே தீர்மானிக்க வேண்டும். நமது அண்டை நாடு, நெடுநாள் தோழன் சீனு, நல்வழி வகுத்து, பல்வளம் பெறுவது காண, இந்தியா மகிழ் கிறது. நான் அங்குச் சென்ருல் பலவற்றைத் தெரிந்து நமது நாட்டையும் மேம்படுத்தலாம் என எண்ணினேன்.

எனவே, இந்தியச் சீன நட்புக் கழகத்தின் அழைப்பை ஏற்றுக் கொண்டேன். ஆறு வாரங்கள் சீனுவின் பல குழு வினரின் விருந்தினனுகச் செல்ல இசைந்தேன். செல்வதற்கு முன் இந்தியச் செய்தி ஸ்தாபனத்தில், எங்கள் செய்திகளை வெளியிடுவதற்கான ஏற்பாடும் செய்து கொண்டேன். எங்களது சுற்றுப் பிரயாணத்தில், 1951 அக்டோபர் 1-ஆம் தேதி பீகிங்கில் நடக்கும் மக்கள் ஜனநாயகத்தின் இரண்டாவது ஆண்டு விழாவில் கலந்து, இரண்டு வாரம் அங்குத் தங்குவதற்கும் வசதி செய்யப்பட் டிருந்தது. பின்னர், சீனுவின் விவசாயம்-தொழில் சாதனைகளைக் காணும் பொருட்டு முக்தென், தியன்ஸ்தீன், நாங்கிங், ஷாங்காய், காண்டன் ஆகிய இடங்களுக்கும் சென்ருேம். நிலச் சீர்திருத்தம் நிலவி யிருக்கும் சில கிராமங்களும், ஆரோக்கிய ஸ்தலமான ஹாங்சௌவும் பிரயாணத்தில் உட்படுத்தப்பட் டிருந்தன.

பல நகரங்களைப் பார்த்தோம்; அங்குள்ள ஸ்தாபனங் களையும், தொழிற்சாலைகளையும் கண்டோம்; எங்களுக்கு அளிக்கப்

பட்ட வரவேற்புகளில் கலந்து கொண்டோம்; விடுதலையின் பின்னர், கம்யூனிஸ்ட் ஆட்சியில் விளைந்த நலன்கள் பற்றிய சொற்பொழிவுகளைக் கேட்டோம். மாவட்ட அதிகாரிகள், தொழில் நிர்வாகிகள், அரசாங்க அதிகாரிகள், அமைச்சர்கள் யாவரும் ஒரே கருத்தைத்தான் தெரிவித்தார்கள். ஆனால், அது உண்மையில் ஒருவகை விளம்பரமே. செய்தித்தாள், பத்திரிகை, நூல்கள் யாவும் ஒரே மாதிரியாகத்தான் கூறின. அங்கே கருத்து வேற்றுமை யில்லை; முரண்பாடு இல்லை; இரு வகையான எண்ணங்களு மில்லை. சாதனைகளை நிறைவேற்றி விட்டதைப் பற்றித்தான் பறை சாற்றப்பட்டது. அதிகாரம் ஒருங்கே குவிந்த ஆட்சியின் சிறப்பைக் காண்பதற்கும் கேட்பதற்கும் என்னை அறியாமல் யான் போய்க்கொண் டிருந்தேன். பொதுவுடைமை என்பது, சீனாவின் புதிய கடவுள். புனித பூதம் என அறிந்தேன்.

நீலக் குளத்தின் ஆழம் தன்னில்
நித்தமும் வாழ்குது நெடும் பூதம்.
யாரும் அதனைக் கண்ணால் காணார்.
ஏரியின் மருங்கில் எழுந்தது ஆலயம்.
நியமப் பூசையும் நடந்தது தினமும்.
ஆனால், அப் பெரும் பூதமும் ஆண்டவ னன்று,
மக்களே அதனை மறைமுதல் என்றனர்.

போ சூ—1.

ஆறு வாரங்களில் பற்பல கருத்துக்கள் என் மனத்தில் நிரம்பின; குழம்பின. இந்தியா திரும்பியதும் அந்தக் குழப்பத்தி லிருந்து விடுவிக்க முயன்றேன்; முடியவில்லை. அக் கருத்துக்களை ஏற்கவோ, அன்றி மறுக்கவோ இந்தியா திரும்ப வேண்டும் என்ற ஆவல் எழுந்தது. இந்தியச் செய்தி ஸ்தாபனத்தார் பீகிங்கில் ஒரு நிருபரை நியமித்து, சீனச் செய்திகளை இந்தியா விற்கு அனுப்ப எண்ணினார்கள். இந்திய சர்க்காரும் சீனாவில் ஒரு சுதந்தரச் செய்தி ஸ்தாபனம் வேண்டுமென விரும்பினர். அதனால், இரு நாடுகளிடையே உள்ள நல்லுறவு வளரும் என நம்பினார்கள். ஆகவே, எனது கருத்துக்களை நான் வெளி யிட்டால், மீண்டும் சீனாவிற்குள் நுழைய முடியாது என எண்ணினேன்.

1952 மார்ச்சு மாதம், மே தின விழாவிற்கு ஒரு கலாச்சாரக் குழுவினரைச் சீனுவிற்கு அனுப்ப இந்திய சர்க்கார் திட்டமிட்டது. இந்தியச் செய்தி ஸ்தாபனம் என்னை ஒரு நிருபராகச் செல்ல முடியுமா எனக் கேட்டது. நான் அத் தருணத்தையும் பயன் படுத்தினேன். முதல் தடவையே, ஹுவாய் அணைத் திட்டம், தாதுங்கின் கலைச் சின்னங்கள், கன்பூஸியஸ் ஆலயம் ஆகியவற்றையும் கண்டேன்.

சீனுவிற்கு மீண்டும் பத்திரிகையாளனுகச் சென்றேன். தனிப் பார்வையாளராகப் பிரயாணம் செய்வது, தங்குமிடங்கள் தேடுவது எல்லாம் சிரமம் என்பது எனக்குத் தெரியும். அடையாளச் சீட்டுடன்தான் செல்ல வேண்டும்; பிரயாணம் செய்வதற்கும், தங்குமிடங்களில் இருப்பதற்கும் அனுமதி பெற வேண்டும்; நாணயம் மாற்றுதற்கு வேண்டிய வசதிகள் வேண்டும். அதற்கான ஏற்பாடுகளைப் பீகிங்கில் இருக்கும் இந்தியத் தூதரான திரு. பணிக்கர் அவர்களிடம் பெறுவதற்கு வெளி நாட்டுறவு இலாகாவின் உதவியை நாடினேன். சீனர்கள் என் வரவை விரும்புவதால், பிரயாணத்திற்குத் தயாராகலாம் என்று கூறப்பட்டது. என்ருலும், அவர்கள் கம்யூனிஸ்ட் நிருபர்களையே விரும்பினுர்கள் என்பது எனக்குத் தெரியும்.

சீனுவின் நிலைமையைக் குறித்த ஓர் அறிக்கையை முதன் மந்திரிக்குத் தனியாக அனுப்பி யிருந்தேன். அதனை ஒரு காரியதரிசி இந்தியத் தூதுக் குழு அங்கத்தினர்களின் சுற்றுப் பார்வைக்கு அனுப்பி விட்டார். மிகுதியான உணவை ஏற்றுமதி செய்வதாகப் பெருமை பேசினுலும், உண்மையில் அங்கே பொருளாதார முன்னேற்றம் மிகக் கொஞ்சமே என்று அவ் அறிக்கையில் குறிப்பிட் டிருந்தேன். அது சீனர்கள் கையில் கிடைத்திருந்தால் எனது நிலை எக்கசக்கமாகப் போயிருக்கும். அவ் அறிக்கையை அரசாங்கத்திட மிருந்து வாபஸ் பெற முயன்றேன். ஆனுல், காலம் தாழ்ந்து விட்டது.

காண்டன் நகரில் இறங்கியதும் நடந்த ஒரு நிகழ்ச்சி மீண்டும் கஷ்டமாக முடிந்தது. ஓர் ஏழைச் சீனக் குழந்தை தன்னிலும் இளைய குழந்தையை முதுகில் சுமந்து சென்றது. தூதுக் குழுவினருள் ஒருவர் அதனைப் படம் பிடிக்க விரும்பினுர். அதற்கு என் உதவியை நாடினுர். முதலில் அவர் படம் பிடித்தார். நானும் ஒரு படம் எடுக்க விரும்பினேன்.

அதற்குள் மொழிபெயர்ப்பாளர் வந்து என் கருவியை மறைத்தார். மறுநாட் காலே தூதுக் குழுவின் காரியதரிசி, நான் 'தடுக்கப்பட்ட பகுதிகளைப்' படம் எடுப்பதாகச் சீனர்கள் முறையிட்டனர் என்ருர். எனக்கு வியப்பாக இருந்தது. காமிராவையே கொடுத்துவிட எண்ணினேன். வெளி நாட்டு நிருபர்கள் படம் எடுப்பதற்கு அனுமதி பெற வேண்டும் என்று கூறப்பட்டது. சீனர்களைப் பொறுத்த வரையிலும் இந்த நிகழ்ச்சி இத்துடன் முடிந்தது என எண்ணினேன்.

பீகிங் எய்தியதும், இந்தியத் தூதராலயத்திற்குச் சென்று எனது அங்கீகாரப் பத்திரங்களைப் பற்றிக் கேட்டேன். சில தாள்களில் கையெழுத்திட்டேன். அரை மணி நேரம் தாமதிக்கச் சொன்னுர்கள். ஏழு நாட்களாயின. ஏனெனில், இந்தியத் தூதரான திரு. பணிக்கர் என்னை 'விரும்பப் படாதவன்' என்று கருதினுர்.

திரு. பணிக்கர் குள்ளமானவர். பருத்த உடல். ஆட்டுக் கடா போன்ற தாடி வைத்திருந்தார். அவருடைய பேச்சில் மகிழ்ந்தவர் போல் கண்களை மூடி மூடித் திறந்தார். சாதுரிய மாகப் பேசினுர். ஆழமான கருத்துக்களை அள்ளித் தெளிப்பதில் வல்லவர் என்று அவரைக் கூறுவர். பல ஆண்டுகள் இந்திய மன்னர்களிடம் வேலே பார்த்தவர். அதிகார வர்க்கத்தைப் புகழ்ந்து பேசிப் பழக்கம் வாய்ந்தவர். இப்பொழுது, தானே அதிகாரத்திற்கு வந்துவிட்டபடியால் தன்னையே மதிப்பவர்.

சீனுவில் சியாங்கேஷேக் ஆட்சிக் காலத்தில், அவர் கோமிண்டாங் படை பலத்தில் நம்பிக்கை கொண்டிருந்தார். சியாங்குடன் ஒரு பாதுகாப்பு ஒப்பந்தம் செய்யுமாறு 1948-இல் நாங்கிங்கிலிருந்து யோசனை கூறினுர். 1951 அக்டோபரில் நான் அவரைப் பீகிங்கில் சந்தித்தபோது சீனுவின் புதிய ஜன நாயகத்தை ஆதரித்துப் பேசியதைக் கேட்டேன்.

இரண்டாம் முறை சீனு சென்ற பொழுது, தேர்தலில் காங்கிரசை எதிர்த்த ஒரு பத்திரிகையாளனுகச் சென்றேன். நான் அனுப்பிய அறிக்கையிலும் திரு. பணிக்கரின் போக்குக்கு மாறுபட்டே எழுதியிருந்தேன். ஆகவே, நான் பத்திரிகை யாளன் என்ற முறையில், எனது பணி செவ்வனே நடைபெருு வண்ணம் தடை செய்வது என்று முடிவு கட்டினுர். ஒரு வார காலம், இந்தியத் தூதர் காரியாலயத்தைச் சார்ந்த ஒரு சிறிய

வீட்டில் ஒரு நண்பருடன் தங்கியிருந்தேன். உணவில்லை; கையில் பணமில்லை; நகரைச் சுற்றி வருவதற்கோ அனுமதி யில்லை. கடைசியாக இந்தியச் செய்தி ஸ்தாபனத்திற்குத் தந்தி யனுப்பி, வெளி நாட்டு இலாகா தலையிட்டதன் பின்னர் எனது அங்கீகாரப் பத்திரங்களைப் பெற்றுக் கொண்டேன்.

இந்தச் 'சிறைவாச'த்தின் போது அத் தொல்லைகளுக்குக் காரணமும் எனக்குத் தெரியாது. 'சீன அரசாங்கத்திற்கு எனது அறிக்கை கிடைத்திருக்கிறது; அதனால்தான் இத் தடை யெல்லாம்' என, திரு. பணிக்கர் கூறினர். இந்தியத் தூதுக் குழுவினருக்குச் சீனு பற்றிய என் கருத்தைக் கூறி, இந்திய சர்க்காரிடமிருந்து என்னைப் பற்றி ஓர் அறிக்கையும் வரவில்லை என்றும் சொல்லியிருக்கிறார். பின்பே எனக்கு இது தெரிய வந்தது. காண்டனில் நடந்த படப்பிடிப்பு நிகழ்ச்சியையும் இந்திய சர்க்காருக்கு அறிவித்திருக்கிறார். இந்திய சர்க்கார் மேலும் விளக்கம் கேட்டபோது, என்னுடைய தனிப்பட்ட அந்தஸ்தை—பத்திரிகையாளன் என்ற முறையில் அன்று—சீனு அங்கீகரிக்க முயற்சிப்பதாகக் கூறினர்.

அங்கீகாரப் பத்திரம் பெற்றதும், என்னைச் சுற்றிப் புதுத் தடைகள் விதித்திருப்பதைக் கண்டேன். சீனுவிற்குப் பாதக மான எந்தச் செய்தியையும் நான் அனுப்பக் கூடாது. ஆகவே, எனது அறிக்கைகள் எல்லாம் இந்தியத் தூதரால் தணிக்கை செய்யப்பட்டே அனுப்பப்படும் எனச் சீனர்களுக்குத் தூதர் ஆலயம் உறுதியளித்திருப்பதாக அறிந்தேன். இந்தியத் தூதுக் குழுவின் நடவடிக்கைகள் பற்றி மட்டுமே நான் அறிக்கை அனுப்ப வேண்டும். ஸ்தாபனங்களை அவர்கள் பார்வையிட்டு வினு விடுக்கும் நேரத்தில் நான் அங்கு இருத்தலாகாது என்றும் அறிவிக்கப்பட்டது. இந் நிபந்தனைகள் எல்லாம் சீனர்களால் ஏற்படுத்தப்பட்டவை அல்ல என்று பின்னர்த் தெரிய வந்தது. பீகிங் நகரை விட்டகன்றதும் என்னிச்சைப்படி நான் நடந்தேன்.

என்னை அனுப்பியவர்களிடம் என்னைத் திரும்ப அழைக்கு மாறு நான் கேட்டிருக்க வேண்டும். அதுதான் முறை. ஆனல், நான் முன்பு பார்த்த இடங்களை மீண்டும் பார்க்க ஆவல் கொண்டேன். முன் போல அதிகாரிகள் வாயிலாக விஷயங்களை அறிந்து கொள்வதை நான் வெறுத்தேன். எனது பார்வையை

எங்கும் செலுத்தி, புதிதாக ஏற்பட்ட மாறுதல்களைக் காண விரும்பினேன்.

முதன் முறை நான் சீனாவில் பிரயாணம் செய்தபோது அவர்கள் வழிப்படுத்தியபடிதான் செல்ல வேண்டும் என அறிந்திருந்தேன். அளவளாவுதல், கூட்டங்கள், அவைகளுடன் தொடர்பு ஏற்படுத்தல் யாவும் மொழிபெயர்ப்பாளர் கண்காணிப்பில்தான் நடைபெற்றன. ஆங்கிலம் தெரிந்த சீனனும் ஆங்கிலத்தில் பேச மறுத்தான். ஆங்கில-அமெரிக்கப் பல்கலைக் கழகத்தில் பயின்ற பேராசிரியர்கள் கூட ஆங்கிலத்தில் பேச மறுத்தனர். எனது வினாக்களை மொழிபெயர்த்த பின்னரே பதில் இறுத்தனர். அப் பதில்களி லிருந்து, எனது வினாக்கள் மொழிபெயர்ப்பாளரால் சரியாகப் புரிந்து கொள்ளப்படவில்லை என்பது தெளிவாயிற்று. அதற்குக் காரணம் அவர்களது மொழி பெயர்ப்பின் தரக் குறைவே யாகும்.

அமெரிக்காவில் கல்வி பயின்ற திருமதி சன்யாட்சன் ஆங்கிலத்தில் பேச மறுத்தார். ஆங்கிலத்தை மறந்து விட்டாராம். திருமதி விஜயலட்சுமி பண்டிட் மொழிபெயர்ப் பாளர் மூலமே அவருடன் பேசினார். நான் முதன் முதலில் அவரை 1951 அக்டோபரில் சந்தித்தேன். உடல், வயதைக் காட்டிற்று. சற்றுப் பருமனாகவும் இருந்தார். ஒரு காலத்தில் அவர் மிகவும் அழகுடைய மங்கையாய் இருந்தார் என்று கேள்விப்பட் டிருக்கிறேன். இன்றும் அவரிடம் அழகும் எடுப்பான தோற்றமும் நிறைந்துள்ளன. சீனப் பொது வுடைமையாளரின் நீல உடையை அவர் அணிய மறுத்துவிட் டார். 1951 அக்டோபரில் நடைபெற்ற பல வரவேற்புகளிலும், 1952 மே மாதம் ஷாங்காயில் கண்டபோதும் அவர் கருப்புடையி லேயே காட்சியளித்தார். கருப்பான கூந்தலைப் பின்புறம் வாரி விட்டு வட்டமாகக் கட்டியிருந்தார். அவரது நடையிலே பல வீனம் காணப்பட்டது. அருகில் நெருங்கியபோது அவர் கண் களில் கவலையின் கோடுகள் தென்பட்டன. பொதுவுடைமைக் கூட்டணியில் அவருக்கிருந்த ஆர்வம் குன்றியிருக்கலாம். கம்யூனிஸ்டுகளும் இடையிடையே சன்யாட்சனைப் புகழ்ந்தா லும், அவருக்கு அத்தனை சிறப்புத்தர இசைந்தா ரில்லை. நான் அவருடன் அதிகமாகப் பேசமுடிய வில்லை. ஏனெனில், அவர் நீர்க் கோவை நோயால் பீடிக்கப்பட்டவர் போன்று பேச்சைக்

குறைத்து வந்தார். எங்களுடைய உரையாடல், ஆரம்பத்தில் மொழிபெயர்ப்பாளர் மூலமே நடைபெற்றது. என்றாலும், போகப் போக அவரும் சுத்தமான ஆங்கிலத்தில் பேசிவந்தார்.

வெளிநாட்டு இலாகாவில், செய்தி, ஆராய்ச்சி அதிகாரியான திருமதி குங்பென் பழுதற்ற ஆங்கிலம் பேசுகின்றார். விஷக்கிருமிப் போர் பொருட்காட்சிப் பத்திரிகை நிருபர் மாநாட்டின் போது, என்னிடம் பத்து நிமிடங்கள் பேசிக்கொண்டிருந்தார். அவர் அப் பொருட்காட்சி பற்றிய எனது கருத்தை அறிய ஆவல் கொண்டார். இந்தியக் கலாசார தூதுக் குழுவினர் இருவர் அவரை அவரது அலுவலகத்தில் சந்தித்துப் பேசும் பொழுது ஆங்கிலத்தில் பேச மறுத்தார்.

அவர்கள் ஆங்கிலத்தில் பேசாதிருந்ததை, ஒரு பத்திரிகையாள நண்பர் அவர்களது தேசப்பெருமை என்று விளக்கினார். ஆனால், வந்த விருந்தினரிடம் அவருக்குத் தெரிந்த மொழியில் பேசுவதே நல்ல பண்பாடு. சீனா சென்ற இந்திய விருந்தினர் நல்ல எண்ணத்தை வேரூன்றவே சென்றனர். வார்த்தைகளை அளந்து பேசும் அரசியல் தந்திரத்திற்காக அன்று. ஒருவர் வெளியிடும் சொற்களை மற்றவர் வடிகட்டிப் பேசுவதுதான் பொதுவுடைமை நாட்டின் கொள்கையாக இருந்து வருகிறது. அவ்வாறு வடிகட்டிப் பேசும்போது, பேச்சுகள், செய்திகள் யாவும் திரும்பத் திரும்ப உரைக்கப்பட்டு, வெளிநாட்டாருக்குக் குறைந்த அளவில்தான் விஷயங்கள் புரிகின்றன. எல்லாச் செய்திகளும், புள்ளி விபரங்களும், விளக்கங்களும் எழுதியே திரும்பத் திரும்பப் படிக்கப்படுகின்றன. ஓர் உண்மையைப் பல முறை சீன மக்கள் எடுத்துச் சொல்லும்போது பார்வையாளர்கட்கு அது மெய்யென்றே பட்டுவிடுகின்றது. ஆகவேதான், பல கண்ணியமான மனிதர்களும் சீனாவிலிருந்து வந்ததும் தாம் கேட்டவற்றைப் பார்த்ததாகவே கூறிவிடுகிறார்கள்.

காதால் கேட்டவற்றை நம்பாதிருக்கலாம். ஆனால், கண்ணால் கண்டவற்றை மறைக்க முடியுமா ? சீனா சென்று வந்தவர்களிடம் அவர்களது அனுபவங்களையே கூறுமாறு கேட்கிறோம். நமக்குக் காட்டியவற்றைத் தவிர வேறு என்ன கண்டோம் ? சீனாவிற்குச் செல்பவர் அங்கு வகுக்கப்பட்ட திட்டப்படியே சென்று வரவேண்டும். எந்த இடத்திற்கும் முன்னறிவிப்பு இன்றிச் செல்ல முடியாது. அவர்கள் வகுத்த திட்டப்

படி செல்ல மறுக்கலாம். ஆனல், நம் இஷ்டம்போல் செல்லு வதற்கு அனுமதி யளிக்க மாட்டார்கள். மொழியினுல் ஏற்படும் தொல்லைமட்டுமன்று.

இந்தியக் குழுவின் உறுப்பினர் ஒருவர் ஒரு நாள் குழுவின ருடன் செல்ல மறுத்துவிட்டு, பீகிங் பல்கலைக் கழகப் பேராசிரியர் ஒருவரைக் காண விரும்பினர். அவருக்கு அறிமுகக் கடிதமும் வைத்திருந்தார். அவருடன் செல்ல வேண்டிய மொழிபெயர்ப்பாளர் தூதுக் குழுவினருடன் சென்றுவிட்டார். பல்கலைக் கழகத்தை அடைந்து, பேராசிரியரின் பெயரைப் பொறித்த ஒரு காகிதத்துடன் அங்கு மிங்கும் அலைந்தார். பலரைக் கேட்டார். யாரும் அவருக்கு வழி காட்டவில்லை. பின்னர், ஆங்கிலம் தெரிந்த ஒருவர் வந்தார். பல்கலைக் கழகத்தையோ, பேராசிரியரையோ முன்னறிவிப்பு இன்றிக் காண முடியாது என்று நினைவு படுத்தினர். தமது நண்பரைக் காண முடியாமல் அப் பிரதிநிதி தான் தங்குமிடம் வந்து சேர்ந்தார். 'பல்கலைக் கழகம் கட்டுப்பாடுள்ள இடம்; அங்கே மொழிபெயர்ப்பாள ரின்றித் தனியாகச் செல்லுதல் தவறு' என்று அவரிடம் கூறப்பட்டது.

சீனவிற்குச் செல்லும் விருந்தினர்களுக்கு எவற்றில் பிரியம், எவற்றைப் பார்க்க வேண்டும் என்று முதலில் கேட்டுத் தெரிந்து கொள்கின்றனர். அதற்கான ஏற்பாடுகளைச் செய்தபின் அவர் கள் அழைத்துச் செல்லப்படுகின்றனர். இல்லையெனில், அவர் களிடம் அத்தகைய ஓர் இடமோ, ஸ்தாபனமோ இல்லையென்று சொல்லிவிடுகின்றனர். நான் நாங்கிங் சென்றபோது, நாங்கிங் பல்கலைக் கழகத்தால் நடத்தப்பட்ட ஒரு பொருட் காட்சியைப் பார்த்தேன். அப் பல்கலைக் கழகம் ஆரம்பிக்க அமெரிக்கச் சங்கத்திற்கு அனுமதியளித்த பத்திரமும் அங்கே வைக்கப்பட் டிருந்தது. இதனல் அமெரிக்க ஏகாதிபத்தியம் சீனக் கலாசாரத்தை இழிவுபடுத்தக் கருதியதாகக் காட்டப்பட் டிருந்தது. ஆங்கிலத்தில் அரசியல், பொருளாதாரப் புத்த கங்கள் வைக்கப்பட்டு, அவற்றின் பல பகுதிகள் சிவப்புப் பென்சிலால் அடையாளம் இடப்பட் டிருந்தன. சீன மாணவர் களின் தேசிய உணர்ச்சியை அழிக்கத் திட்டமிடப்பட் டிருந்தது என்று பார்ப்பவர்களுக்குத் தோன்றுமாறு வைக்கப்பட் டிருந்தது. அப் பல்கலைக் கழகத்திற்காகப் பல கோடி டாலர்கள்

அமெரிக்கர்கள் கொட்டி யிருக்கின்றனர். இந்தியத் தூதுக் குழுவினரில் சில ஆசிரியர்களும் இருந்தார்கள். அவர்களிடம் நான் அந்தப் பல்கலைக் கழகத்தையும் பார்க்குமாறு கூறினேன். தூதுக் குழுவின் செயலாளர் அங்குச் செல்வதற்கு அனுமதி கேட்டார். நாங்கிங்கில் அத்தகைய பல்கலைக் கழகமே இல்லை யென்று சொல்லி விட்டார்கள். ஞாபக மறதி போலும்! கடைசியாக ஒருவருக்கு மட்டும் போக அனுமதி கிடைத்தது. அவர் சென்று ஓரிரு பேராசிரியர்களைக் கண்டார்; சில மாணவர் களையும் சந்தித்தார்.

இது போன்ற நிகழ்ச்சிகள் பல. மற்றவர்கள் கூருத வற்றை நான் கூறுகின்றேன் என என் மீது குறை காண் பார்கள். நாங்கள் பார்க்க விரும்பியவற்றை எல்லாம் காண வசதி செய்யப்படவில்லை யென்று கூறி, விருந்தோம்புவோரை இழிவு படுத்தல் இழுக்கு என்று, அவர்கள் எண்ணி யிருக்கலாம். நம் நாட்டினருக்கு உண்மையைக் கூற நாம் கடமைப்பட் டிருக்கிறோம். பண்பாட்டை யொட்டி நாம் அவர்களைப் புகழ்வதை, அவர்கள் பொதுவுடைமை ஆட்சியைப் புகழ்வதாகக் கூறி, நமது சுதந்தரத்தையும், ஜனநாயகத்தையும் பழிக்கின்றனர்.

சிலவற்றையே காண்பதற்கு நாம் அனுமதிக்கப்பட்டாலும், அவற்றுள்ளும் சில நமக்கு உண்மைகளைக் காட்டி விடுகின்றன. அவ் வுண்மைகளைச் சீனுவின் கழிந்த காலப் பொருளாதார தொழில் வளர்ச்சியுடன் இணைத்துப் பார்த்தால், இன்று அங்கே என்ன நடக்கிறது என்பது தெளிவாகும். அங்குள்ள பிரச்சாரத்தில் மனத்தைப் பறி கொடுக்காமல், தக்க காரணமின்றி எதையும் கொள்ளவோ, தள்ளவோ செய்யாமல், நடுநிலை நின்று உண்மை காணல் வேண்டும்.

சீனுவில் அங்ஙனம் உண்மையைக் காணல் எளிது. ஏனெனில், அவர்கள் கம்யூனிஸத் தந்திரங்களில் இன்னும் திறமை யடையவில்லை. பெருவாரியான மக்கள் உணவு தேடுவதில் ஈடுபட்டுள்ளனர். தேச முழுவதையும் ஒன்று சேர்த்து ஒற்றுமைப்படுத்த வேண்டும். சீனு, சட்டப்படி ஒன்று சேர்க்கப்பட்டிருந்தாலும், மக்களுடைய வாழ்வை அதிகாரம் குவிந்த ஆட்சியின் கீழ் ஒன்றுபடுத்த இன்னும் வழி காணப்பட வில்லை. அதற்கு 'விமோசனம்' அண்மையில் கிடைத்தது.

ஆனால், அதன் பிரச்சினைகள் பழையவை; மலை போன்றவை. நான் குரலை உயர்த்தியும் தாழ்த்தியும், வார்த்தைகளின் ஒலியைச் சற்று மாற்றியும் எனது வினாக்களைத் திரும்பத் திரும்ப விடுத்தேன். பார்வையாளர்க்கு வழி காட்டிய அதிகாரிகளிட மிருந்து முறைப்பும், அவமதிப்பும் பதிலாகக் கிடைத்தன. என்றாலும், "ருஷ்யர்கள் மஞ்சூரியாவிலிருந்து எங்கள் யந்திரங்களை எடுத்துக் கொண்டு பதிலுக்கு ஒன்றும் கொடுக்க வில்லை", "வட கொரியர்கள் ஆத்திரமிக்கவர்கள்" என்பன போன்ற வார்த்தைகளும் வெளி வந்தன.

சிறிது காலத்திற்குப் பின் மீண்டும் நான் அங்கே சென்ற படியால், அங்குள்ள முன்னேற்றத்தையும், வேறு வேறு காலங் களிலுள்ள நிலைகளையும் ஒத்து நோக்க முடிந்தது. எனது அரசியல் அனுபவமும், 1939-42-இல் இந்திய தேசியத் திட்டக் குழுவிற்குச் செயலாளனாக இருந்து பெற்ற பொருளாதாரப் பயிற்சியும், அபிவிருத்தி யற்ற நாடுகளில் பொருளாதார முன் னேற்றம் எவ்வாறிருக்கும் என்றறிய உதவின. அடக்கு முறைக்கு ஆட்பட்டு வறுமையில் உழலும் மக்களின் அடிப்படைத் தேவைகள் : தேசிய, தனி விடுதலை; உணவு, வீடு, உடையுடன் கூடிய வாழும் உரிமை இரண்டுமே. ஆசியாவிலும், ஆப்பிரிக்கா விலும் வாழும் உள்ளமுடைந்த மக்கள், இத் தேவைகளை நிறைவேற்றுவதற்காகவே பொதுவுடைமையை நாடுகிறார்கள்.

சீன மக்களை நான் பெரிதும் மதிக்கிறேன். சீன மக்களின் விடுதலைப் போராட்டம், நமது போராட்டமே என்றும், நம் மிடையே நிலவும் நட்பு, நமது லட்சியங்களை எளிதில் அடை வதற்கு உதவியாக இருக்கும் என்றும் கருதுகிறேன். ஆனால், ஓரிடத்தில் குவிந்த அதிகாரத்தால் அமைதி குன்றும்; முன்னேற்றம் தடைப்படும். சீன மக்கள் பொதுவுடைமையைத் தழுவி வாழ்ந்தால் நாம் அதைப்பற்றிக் கவலையடைய வேண்டிய தில்லை. நாமும் நட்புடனும் ஒத்துழைப்புடனும் ஒன்றுபட்டு வாழ முடியும். ஆனால், சர்வதேசக் கம்யூனிசம், சீனாவைப் பற்றிப் பொய்யான பிரச்சாரம் செய்து, ஆசிய நாடுகளின் அமைதியைக் குலைக்க முயல்கிறது. உணவுக்கும், வீட்டுக்கும் திண்டாடும் மக்களைத் தூண்டி விடுகிறது. ஆகவேதான், நான் சீனாவில் பார்த்தவற்றை அப்படியே எழுத முயல்கின்றேன்.

இந்தியாவில் தேர்தலின் போது கம்யூனிஸ்ட் கட்சி எவ்வாறு வாக்காளர்களை ஈர்த்தது என்பதைக் கண்டேன். முதன் முறை என்னுடன் சீனாவிற்கு வந்த பல தோழர்கள், இன்று கம்யூனிஸ்ட் நண்பர்களாகிச் சீனாவைப் புகழ்கின்றார்கள். சீனாவிற்கும் இந்தியாவிற்கும் இருந்த பண்டைத் தொடர்பு, பிரச்சாரத்தை வலியுறுத்தி மக்களைக் கவர்ந்தது. கலாச்சாரக் குழுவின் பல நண்பர்கள் மரியாதைக்காக மௌனம் சாதித்தார்கள். இவ் விளம்பரம் ஆசிய மக்களைப் பெரிதும் கவர்ந்தது. சுதந்தரம், சமாதானம், முன்னேற்றம் என்பவற்றின் பேரால், அவர்கள் ஒருங்கு குவிந்த அதிகாரம் என்ற சர்வாதிகாரப் பாதையில் தள்ளப்படுகிறோம் என்பதை உணரவில்லை. அப் பாதையினால் அவர்கள் லட்சியத்தை அடைய முடியாது.

நான் சீனாவில் கண்டதெல்லாம் மிகக் கொஞ்சமே. பார்ப்பதற்கென அனுமதிக்கப்பட்டவற்றையே கண்டேன். எனது அபிப்பிராயம் மிகையாகவும்,நேர்மை யற்றதாகவும் இருக்கலாம். ஆனால், நான் கண்டவற்றை ஆர்வமுள்ளவர்களுக்குச் சொல்லியாக வேண்டும். ஏனெனில், அவர்கள் நம் மக்களுக்கு நன்மை செய்கிறோம் என்ற எண்ணத்தில், நமது தேச சுதந்தரத்திற்கும், ஜனநாயகத்திற்கும் மாசு ஏற்படுத்தி விடக் கூடாது.

காந்தியின் கீழ் நான் நல்வழிகளின் முக்கியத்துவத்தை அறிந்திருக்கிறேன். ஆனால், அதன் தத்துவத்தை ஒப்புக் கொள்ளவில்லை. பசியால் வாடும் மக்களிடம், நல்லகாலம் வரும் வரை காத்திருங்கள் என்று கூறுவது அறிவுடைமையாகாது. தீய வழிகளால் வெற்றிபெற முடியும் என்பதைச் சீனாவில் நான் கண்டவை வலியுறுத்தின. என்றாலும், நமது லட்சியத்தையே அழித்துவிடும் கனல் அத் தீய வழியில் அடங்கியுள்ளது.

மாசேதுங்கின் புதிய ஜனநாயக சர்வாதிகாரத்தின் கீழ், சீன மக்கள் சுதந்தரம் பெற்று ஜனநாயகத்தில் வாழ்வதைக் காணலாம் என்று நான் அங்கே சென்றேன். ஆனால், கொடிய வர்க்கப் போராட்டத்தை நடத்திவரும் ஆட்சியையே கண்டேன்.

பொதுவுடைமை ஆட்சியில் எவ்வாறு முன்னேற்றம் ஏற்படுகிறது என்பதைக் காண சீனா சென்றேன். 'கம்யூனிஸம் என்பது ஒரு கொள்கை; அதுவே உண்மையான அறிவு; அதில்

சந்தேகம் கொள்வோர் அறிவிலிகள்' என்ற சித்தாந்தத்தை யெல்லாம் நான் அறிவேன். அற்புதத்தைக் காணும்போது நமக்குப் பக்தி, நம்பிக்கை ஏற்படுகின்றன. கம்யூனிஸ்ட்டுகள் பொருளாதார, கலாசார, விஞ்ஞான முன்னேற்றங்களை அற்புத மாகக் காட்டுகின்றனர். ஆனால், முன்னேற்றம் எப்போது காண முடியும்? மக்கள் மனம், இச்சைப்படி கேள்வி கேட்கவும், அச்ச மின்றிச் செயலாற்றவும், சிந்திக்கவும் செய்யும்போது தான்!

சீனாவில் நுணுக்க அறிவு இன்மையால் தொழில் மந்தம் ஏற்பட் டிருப்பதைக் கண்டேன். தொழில் நுணுக்கம் தெரிந்த சிலர் தண்டனை பெற்றுக் கொடுமைப்படுத்தப்படுகின்றனர்.

நிலச் சீர்திருத்தம் விவசாயிகட்குத் திருப்தி யளித் திருப்பதைக் கண்டேன். போருக்குப் பின் விளைச்சலும் உயர்ந் திருக்கிறது. ஆனால், விவசாயிகளின் ஆர்வமெல்லாம் கம்யூனிஸ சர்வாதிகார அமைப்பிற்குப் பயன் படுத்தப்படு கின்றது.

ஒரு பண்டைக் கால வழக்கு இன்று படிப்பினையாக இருக் கிறது:

ஹ்யூத்ஸு சுவாங்ஸுவிடம் கேட்டார்: "மனிதன் உண்மையில் உணர்ச்சியை அழித்துவிட முடியுமா?"

சுவாங்ஸு: "முடியும்."

ஹ்யூத்ஸு: "உணர்ச்சி இழந்த மனிதனை மனிதனென்று கூறலாமா?"

சுவாங்ஸு: "தவோ அவனுக்குச் சக்தியைக் கொடுத்தார். கடவுள் உருவத்தைக் கொடுத்தார். அவனை மனிதனென்று ஏன் கூறக் கூடாது?"

ஹ்யூத்ஸு: "அவனை மனித னென்று வைத்துக் கொண்டா லும், அவனுக்கு உணர்ச்சி எவ்வாறு இல்லாதிருக்க முடியும்?"

சுவாங்ஸு: "நான் சொல்வதை நீங்கள் புரிந்துகொள்ள வில்லை. உணர்ச்சியற்றவன் என்று நான் கூறுவது மனிதன் விருப்பு வெறுப்புக்களால் தன்னைக் கெடுத்துக் கொள்வதில்லை என்ற பொருளில்தான். வாழ்க்கையைத்

தனக்கென அமைத்துக் கொள்ளாது, அதன் போக்கிலேயே விட்டுவிடுதல்தான்."

ஹ்யூத்ஸு: "வாழ்க்கையைத் தனக்கென அமைத்துக் கொள்ளாவிடில் இவ் வுடலால் யாது பயன்?"

பல மக்கள் புது நம்பிக்கை கொண்டு எழுச்சி பெறுகிருர்கள், ஆனுல், அதுவும் சிறிது காலத்திற்கே. பின்னர் அறியாமைச் சூழலில் அகப்பட்டு, மக்கள்-தன்மை, கண்ணியம், பொறுமை, அறிவு ஆகிய உணர்ச்சிகளை இழந்து விடுகின்றனர். சீனுவின் நாற்பது கோடி மக்களும் உணவிற்காகத் தங்கள் மனிதத் தன்மையை இழந்து விட்டனர். சர்வாதிகார சேவைக்காகத் தங்களை உணர்ச்சியற்ற பிண்டங்களாக ஆக்கிவிட்டனர்.

# 2. பீகிங்

அரசாங்க விருந்தினனுகச் சீனுவில் பிரயாணம் செய்வது ஓர் இன்பமான அனுபவம். விருந்தினர்க்கெனப் போர்ப்படையைச் சேர்ந்த ஆகாய விமானம் ஒன்றை அரசாங்கம் கொடுத்தாலன்றி விமான யாத்திரை செய்ய முடியாது. ரயில் வண்டிகள் அழகாகவும், காலம் தவருமலும் செல்கின்றன. விருந்தினர்க்கெனத் தனி ரயில் வண்டிகள் விடப்பட்டுள்ளன. ஜனநாயக நாடுகளில் இருக்கும் கூட்டமும் குழப்பமும் ரயில் நிலேயங்களில் இல்லே. பிரயாணம் செய்ய அனுமதிக்கப் பட்டவர்கள் அமைதியாகவும், ஒழுங்காகவும் செல்கின்றனர்.

முதன் முறை சென்றபோது ஹாங்காங்கிலிருந்து காண்டனுக்குச் சென்று சீனுவிற்குள் நுழைந்தேன். நேரடியான ரயில் தொடர்பு இல்லே. சுங்கப் பிரதேசத்தில் சுமார் ஒரு பர்லாங்கு தூரம் நடக்கவேண்டும்; எல்லேகள் எல்லாம் மிக்க கவனத்துடன் பாதுகாக்கப்பட் டிருந்தன. சீனப் பிரயாணிகள் நன்கு பரிசோதிக்கப்பட்டே உள்ளே அனுமதிக்கப்படுகின்றனர். கையில் துப்பாக்கி யேந்திய படைவீரர்கள் பல முறை ரயிலில் சாமான்களேச் சோதனே செய்கின்றனர். ரயிலில் இளேஞர்கள் பிரச்சாரம் செய்கின்றனர்; பிரசுரங்களும் விற்கின்றனர். ஒவ்வொரு ரயில் நிலேயத்திலும் ஆயுதம் தாங்கிய படை வீரர்கள் காவல் புரிகின்றனர்.

காண்டன் நகரில் இறங்கியதும் எங்களேப் பல சிறுவர் சிறுமியர் கையில் மலர்களுடன் அணியாக நின்று வரவேற்றனர். அவர்களுக்குப் பின்னுல் பல ஸ்தாபனங்களின் பிரதிநிதிகள் நின்ருர்கள். அவர்களுடன் கை குலுக்கிவிட்டு, காரில் ஏறி விருந்தினர் மாளிகைக்கு அழைத்துச் செல்லப்பட்டோம். உள்ளூர் மக்கள் எங்களே வரவேற்றனர். ஒவ்வொருவராக அறிமுகம் செய்து வைக்கப்பட்டோம். எங்களுக்குத் தேயிலேயும் பழங்களும் வழங்கப்பட்டன. பின்னர்த் தங்கும் அறைகள் கொடுக்கப்பட்டன. மாலேயில் விருந்து நடைபெற்றது. வரவேற்புரைகள் நிகழ்த்தப்பட்டன. நாங்களும் அவற்றிற்கு மறுமொழி கூறினேம். இந்திய மக்கள் சீன மக்களிடம் கொண்டுள்ள நல்லெண்ணத்தையும், நல்லுறவையும் எடுத்துச் சொன்னேம். இதே போன்ற நிகழ்ச்சிகள் நாங்கள் சென்ற விடங்களில் எல்லாம் நடைபெற்றன.

அன்று மாலை நான் போரை வெறுக்கும் சீனவில் இருப்ப தாக நினைவூட்டப்பட்டேன். இரவு உணவிற்காக நான் தயாராகிக்கொண்டிருக்கையில் அபாய அறிவிப்புச் சங்கு ஒலித் தது. நகர் முழுதும் இருள் சூழ்ந்தது. ஏன் இத்தகைய அபாய அறிவிப்பு என்று எனக்கு விளங்கவில்லை. "பர்மோஸா அருகி லிருக்கிறது; சியாங்கின் ஆட்கள் தெற்கே சுறுசுறுப்பாக இருக்கிறார்கள்" என்பதைத் தவிர வேறு ஒன்றும் அவர்கள் கூறவில்லை. காண்டன் நகரிலிருந்த நான்கு நாட்களும் இத் தகைய விழிப்பு நடவடிக்கைகள் மூன்று முறை நிகழ்ந்தன. அது சாதாரண நடவடிக்கைபோல் தோன்றியது.

காண்டன் நகர் ஒரு பெரிய வியாபார ஸ்தலம். ஒவ்வொரு வீதியிலும் தொடர்ந்தாற்போல் கடைகள். அவற்றில் ஏராள மான சாமான்கள். சாமான்கள் எல்லாம் நெடுநாட்களுக்கு முன்பே சேமித்து வைக்கப்பட்டவை போல் தோற்றமளித்தன. ஒரு சில கடைகளைத் தவிர மற்றவை எல்லாம் அரசாங்க விற்பனை நிலையங்களே. தெருக்களெல்லாம் மிக அசுத்தமாகக் காணப்பட்டன. ஆனால், கடைகளின் பெயர்கள் சீன எழுத்துக் களில் பெரிதாக எழுதி வைக்கப்பட் டிருந்தன. அது ஒன்று தான் அழகா யிருந்தது. சைக்கிள் ரிக்ஷாக்களைத் தவிர, வேறு வண்டிகள் நடமாடவில்லை. நூற்றுக்கணக்கான சைக்கிள் ரிக்ஷாக்கள் மங்கிய சிவப்பு உறைகளுடன் வாடிக்கைக்காக வீதி ஓரத்தில் நிறுத்தி வைக்கப்பட் டிருந்தன. எங்களது கார்கள் அச் சாலைகளின் வழியே மிக்க வேகத்துடன் மின்சார ஒலிக் கருவி முழங்கச் சென்றன.

பவழ ஆற்றிலும், கால்வாய்களிலும் ஆயிரக்கணக்கான குடும்பங்கள் படகுகளில் வசித்து வந்தனர். ஒரு நாள் காலை ஆற்றின் கரை வழியாகச் சென்றுகொண் டிருந்தேன். அக் குடும்பங்கள் மறைவிடம் இன்றி வாழ்வதைக் கண்டேன். அது பார்க்கத் தக்க காட்சி! பவழ நதியின் சிறு படகுகளில், சீனவின் வேறு எப் பகுதியிலும் காண முடியாத எழில் வாய்ந்த மங்கை யரும் குழந்தைகளும் இருந்தார்கள். உடம்பை இறுக்கி மூடி யிருந்த நீலம் அல்லது கருப்பு உடை, வாரி விடப்பட்ட நீண்ட கருங் கூந்தல், நாணம் மேலிடும் வழவழப்பான முகங்கள் யாவும் என் மனம்விட்டு அகலா ஓவியங்கள்! அவர்கள் இன் முகங்களிலிருந்து புன்னகை மறையத் தொடங்கிவிட்டது; சோர்வும் கடுகடுப்பும் தோன்ற ஆரம்பித்து விட்டன. குட்டை

யாக வெட்டப்பட்ட தலை மயிருடனும், சுருக்கம் விழுந்த சன்யாட்ஸென் உடையுடனும் அவர்கள் காட்சி யளித்து வரு கின்றனர்.

நகரத்தின் நடுவே ஒரு பழைய மாளிகை பாழடைந்து நிற்கின்றது. பொருட் காட்சி மைதானத்தில் வரிசையாக அமைந்த தூண்களுடன் குட்டிச் சுவராக அது காணப்படுகிறது. ஜப்பானுடன் நடந்த பெரும் போராட்டத்தையும், அதனால் சீனர்கள் அடைந்த பெரும் துயரையும் அம் மாளிகை நினை வூட்டுகின்றது. பாலத்திற்கு அப்பால் மற்றொரு மூலையில் 'ஷேக்கிப் படுகொலை'யின் ஒரு நினைவுச் சின்னம், பிரெஞ்சுக் காரரும் பிரிட்டிஷ்காரரும் சேர்ந்து ஆர்ப்பாட்டக்காரர் மீது சுட்டதைக் காட்டுகின்றது.

மக்கள் விடுதலைப் படையினர் இன்று பாலத்தைக் காவல் புரிகின்றனர். ஒரு சீனக் கூலி தலையில் ஒரு சுமையுடன் பாலத்தின் மீது போவதைக் கண்டேன். படை வீரன் ஒருவன் தோளில் துப்பாக்கியை மாட்டிக்கொண்டு அக் கூலியாளைக் கவனித்துக்கொண் டிருந்தான். தன்னருகே அவன் நெருங்கி யதும் படை வீரன் துப்பாக்கியால் வழியை மறித்து, "எங்கே உன் அடையாளச் சீட்டு?" என்று கேட்டான். பொறுமை யுடன் அக் கூலியாள் தன் சுமையைக் கீழே வைத்துவிட்டு, சட்டைப் பையிலிருந்து ஒரு சிவப்பு அடையாளச் சீட்டைக் காட்டினான். இதுதான் புதிய சீனா!

காண்டனிலிருந்து ஹாங்கோ வழியாகப் பீகிங்கிற்குப் பறந்து சென்றோம். அது ஒரு டெக்கோட்டா விமானம். செல்ல வேண்டிய இடத்தை அடைய எட்டு மணி நேரம் பிடித்தது. காண்டனிலும், ஹாங்கோவிலும் உள்ள விமான நிலையங்கள் மோசமான நிலையில் இருந்தன. விமானம் ஊர்ந்து செல்லும் பாதை குண்டுங் குழியுமாக இருந்தது. பிரயாணிகள் அமரு வதற்கென ஓர் இடமில்லை. யாங்த்ஸி நதி தீரத்தின் மேல் பறந்து செல்லும் போது அற்புதக் காட்சியாக இருந்தது. இரு கரையும் வழிந்தோடும் நீர்ப் பரப்பும், காணுமிட மெங்கும் வயல் வெளியும் களிப்பூட்டுவன. மலைச் சரிவில் நிலந் திருத்திப் பயிரிடும் முறை சீனர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை. சீனக் குடியானவர்கள் தளராது உழைக்கும் பண்பினர். சீன உழவன் தன்னை மண்ணையும் விண்ணையும் இணைப்பவனாகக் கருது கின்றான். சீனர் வானம் பொழிதலையும் பொய்த்தலையும் அன்றாட

நிகழ்ச்சியாகக் கருதும் நீர்மையர். நிலத்தை உயிரினும் மேலாகக் கருதி, உலேவின்றி உழைத்தனர்.

பீகிங், புராதன மதில் சூழ்ந்த நகர். மஞ்சுக்களின் மஞ்சள் ஓடு வேய்ந்த வீடுகள், அழகான மாளிகைகள். பல அரச குடும்பங்கள் அரசு செலுத்திய நகரம். காவல் மிக்க நகரின் கீழ்ச் சுவர் அருகே, மஞ்சள் மலர் பூத்த மாவீதி, 'சுவர்க்க அமைதியின் நுழை வாயில்' எனப் பெறும் தியன்அன்மான், செஞ்சதுக்கமாகச் செய்யப்பட் டிருப்பது போல் தோன்றியது. விண் முட்டும் கீழ் வாயில், செம்பொன் நிறத் தூண்கள், மஞ்சள் ஓடு வேய்ந்த கூரைகள், செம்பட்டினுல் மறைக்கப்பட்ட சீன விளக்குகள் ஆகியவற்றுடன் புதிய சீனுவின் வாழ்க்கை நிலவுகின்றது. இரண்டு ஆண்டுகட்கு முன்னுல், இதே சவுக்கத்தில், காவல் நகருக்குச் செல்லும் ஆறு சலவைக் கல் பாலங்களின் வாயில் மேல் தளத்தில் நின்றுகொண்டு மாசேதுங், "சீன மக்களின் குடியரசு பீகிங்கில் இன்று ஆட்சிக்கு வருகின்றது" என்று அறிவித்தார். இரண்டு ஆண்டுகட்குப் பின்னர், 1951 அக்டோபர் முதல் நாளில், சீன விடுதலேப் படையினர், கோமிண்டாங் வீரர்களிடமிருந்து கைப்பற்றிய அமெரிக்கப் படைக்கலன்களுடன் அணி வகுத்து அச் சவுக்கத்தில் செல்வதைக் கண்டேன். அவ் வணிவகுப்பு ஆறு மணி நேரம் நடந்தது. கொடிகள், பெரிய படங்கள், பூக்கள், நடனங்கள் ஆகிய பரிவாரங்களுடன் மாஸ்கோவில் நடப்பது போன்று அவ் வணிவகுப்பு நடைபெற்றது.

எட்கார் ஸ்னே என்ற ஆசிரியர் பீகிங் நகரின் வருங் காலத்தை வரைந்துள்ளார். 'ஆசியாவிற்காகப் போர்' என்ற நூலில் அவர் எழுதியுள்ளது கீழ் வருமாறு:

> பீகிங் ஒழுங்கற்ற ஒரு நகரம். இடைக் காலத்தில் சிறப்புடன் மக்கள் வாழ்ந்தனர். அதன் மதிலினுள்ளே பல நூற்ருண்டுகள் கழிந்து இருக்கின்றன. ஓய்வு பெற்ற அரசவைப் பெருமக்கள், படைவீரர்கள், புலவர்கள், நிலங்களேப் பயிரிடாத நிலப் பிரபுக்கள், சந்நியாசிகள், வணிகர்கள், பண்பட்ட மொழி பேசும் ரிக்ஷாக் கூலிகள் ஆகியோர் நிரம்பிய நகரமே பீகிங். உயர்ந்த நோக்குடன் சிறப்பாக அமைக்கப்பட்ட நகரம். கலேக் களஞ்சியம், பண்புடையோர் பிறந்து வாழ்ந்த இடம். அறுசுவை உண்டு, ஆராய்ச்சி நிலவும்

இடம். பண்பினும் அழகே மேலெனக் கருதப்பட்ட இடம். கொடுமையைவிடத் தீய ஒழுக்கமே மிகுந்த இடம். அங்கே பனிக் காலத்தில் உலறந்த நீர் நிலைகள் மீதும், மரங்கள் மீதும் படிந்துள்ள பனிக் கட்டிகளில் பட்டுத் தெறிக்கும் கதிரவனும், வசந்த காலத் தென்றலும், முதுவேனிற் பருவ எழிலும் பவனி வரும்; அமைதியும் புன்னகையும் கொலுவிருக்கும். மக்களுக்கு ஓய்வு மிகவுண்டு; பாசம் பிணிக்கின்ற குடும்பங்க ளுண்டு; வறுமையும், துயரமும், அசுத்தமும் உண்டு. என்றாலும், எதிர்பாராத முறையில் பலாத்காரப் போர் மூளும். அப்போது இளம் மாணவர்கள் தேசியப் போர்க் கீதங்களை எழுப்புவார்கள். கோபிப் பாலைவனத்திலிருந்து வெம்புயல் எழுந்து, எழில் மிக்க ஆலயங்கள்மீதும், பொன் மாளிகைகளின் கூரை மீதும் தூசியை நிரப்பிவிடும்.

ஆனால், அவர் கூறியது போல் நடக்கவில்லை. இன்று தூசி துடைக்கப் பெற்றுவிட்டது. ஆலயங்கள் எழிலுடன் விளங்குகின்றன; அரண்மனைக் கூரைகள் ஒளிவிடுகின்றன. ஆனால், அன்று நிலவிய களிப்பு இல்லை; கலையும் கண்ணியமான வாழ்வும் இல்லை. அதற்குப் பதிலாக, ஆண்களும் பெண்களும் நீல நிறப் பஞ்சுடை அணிந்து, ஒரே மாதிரியான சுவையிலா வாழ்க்கையைக் கொண்டுள்ளனர். அறிஞர்கள் அருகி விட்டனர். பதிலாக ஆரவாரிக்கும் உழவர்கள் நிறைந்துள்ளனர். கோட்டை மதிலுக்குள்ளேயே காவல் நகரங்கள் எழுப்பப்பட் டுள்ளன. வாடிக்கைக்காரர்களை எதிர்நோக்கும் ரிக்ஷாக் கூலிகளே புகை பிடித்துக்கொண் டிருக்கின்றனர்.

பீகிங் சுத்தமாகவும், சுறுசுறுப்பாகவும், ஒழுங்காகவும் மாறியிருக்கின்றது. மலர்ச்சியுள்ள மாணவர்கள் இல்லை. ஆனால், இளைஞர்களின் அறிவு திருப்பி விடப்பட்டு, மறுமலர்ச்சி யடைந்துள்ளது. சுவையறிந்தவர்கள் இல்லையாதலால், உணவு விடுதிகளும் மறைந்து விட்டன. குடியரசு விழாவின்போது நடைபெற்ற அரசாங்க விருந்தில் அளிக்கப்பட்ட உணவைப் போன்று சுவையற்ற பண்டத்தை நான் என்றும் உண்டதில்லை. ஆங்குக் கட்டுண்ட வாழ்க்கையையும், தியாகத்தையும், பசியையும் நான் கண்டேன்.

வேனிற்கால மாளிகையிலும், பனிக்கால மாளிகையிலும் அவற்றின் இடை வழிகளில் சாதாரண உடையணிந்த குடி

யானவர்களும், பீகிங் அணிவகுப்பைக் காண வந்த மாவட்ட வாசிகளும் நிரம்பியிருந்தனர். ஆடம்பரமான அணிகளும் உடைகளும் இல்லை. பாமர மக்கள் எளிய உடையில் இருக்கின்றனர். அவர்கள் ஒருவேளை விடுதலைப் படையைச் சேர்ந்தவர்களா யிருக்கலாம். நாள்தோறும் மாலையில் அப் படையினர் தியன்அன்மான் சதுக்கத்தில் நெடுநேரம் ஆடிக் களித்து மகிழ்வார்கள். காவல் நகரின் உள்ளே அமைந்த பூங்காவில் மஞ்சளும் சிவப்பும் கலந்த பூஞ்செடிகள் வளர்க்கப்பட்டுள்ளன. அவற்றின் அழகும் மணமும் உலகில் வேறெங்கும் காணல் அரிது. சுவர்க்க ஆலயம், நீர்ப் பொய்கைகள், யாளிச் சுவர்கள் யாவும் கதிரவன் ஒளியில் பொலிவுற்று விளங்கின.

ஓர் இரவில் நானும், சீனமொழி தெரிந்த பிரெஞ்சுக்காரரும் அவரது மனைவியும் விருந்துண்டு திரும்பிச் சென்றுகொண்டிருந்தோம். நான் ஒரு வண்டியில் சென்றேன். அது ஒரு வசந்த கால இரவு. வண்டியோட்டி பேசிக்கொண்டே இருந்தான். வெளிநாட்டுத் தூதுவர் வீதி வழி வண்டி சென்றுகொண்டிருந்தது. பீகிங்கின் பழைய கதைகளைக் கூறிக்கொண்டே வந்தான். ஒரு மாளிகையைச் சுட்டிக் காட்டி முன்னாளில் அதில் வெளிநாட்டார் எங்ஙனம் வாழ்ந்தனர் என்பதை விவரித்தான். இன்று அம் மாளிகைகளில் அரசாங்க அலுவலகங்கள் இருக்கின்றன என்று ஏக்கத்தோடு கூறினான். அப்போது நடந்த விருந்து பற்றியும், பரிமாறப்பட்ட உணவு வகைகள் பற்றியும் பேசிக்கொண்டே வந்தான். அவன் என்னைக் கீழே இறக்கிய பொழுது அவனுக்குக் கொடுப்பதற்கு என்னிடம் சில்லறை இல்லை. ஆகவே, இருபதினாயிரம் யுவானுக்குள்ள நோட்டு ஒன்றை வழங்கினேன். "நான் மிச்சம் சில்லறை திரும்பத் தந்தால் தங்களுக்கு அதனால் என்ன பயன்?" என்று சிரித்துக்கொண்டே கேட்டான். நானும் அதைப் பெறாது விட்டுவிட்டேன்.

பீகிங்தான் சீனா. அதன் வருங்காலத்தை உருவாக்கும் மக்கள் எல்லாம் அங்குத்தான் இருந்தனர். ஆனால், எனக்கு அது பொருத்தமற்ற விருந்துகள் நிரம்பிய நகரமாக இருந்தது. விருந்துகளின் போதும், உபசரிப்போரும் விருந்துண்போரும் ஒரே பேச்சைத்தான் மீண்டும் மீண்டும் பேசினர். நல்லெண்ணம், நட்பு, இரண்டாயிரம் மைல் நீளமுள்ள ஒரே எல்லை,

இரு நாட்டிற்கும் இரண்டாயிரம் ஆண்டுகளாக இருந்த கலா சாரத் தொடர்பு, உலக சமாதானம், ஆசிய ஒற்றுமை இவைதாம் முக்கியமாகப் பேசப்பட்ட விஷயங்கள். வேறு ஏதேனும் பேச எண்ணினுல், அதற்கென ஒரு சீனனைத் தனியாகப் பார்க்க முடியாது. ஏனெனில், அவன் எப்பொழுதும் வேலையில் ஈடு பட்டுள்ளான். எங்களில் ஒருவர் சூஎன்லாயிடம் நிலச் சீர்த் திருத்தம் பற்றிச் சில வினுக்கள் கேட்க முற்பட்டார். முதலில் அவர் கிராமங்களைப் பார்க்க வேண்டும்; பின்னர், சூவோடு அது பற்றிப் பேசவேண்டும் என்று அறிவிக்கப்பட்டது. அத்தகைய வாய்ப்பு மீண்டும் கிட்டவே யில்லை. பார்வையாளர்கட்குப் பீகிங் ஒரு காட்சிப்பொருள்தான்! அங்குள்ள புராதனச் சின்னங்களைப் பற்றிய விவரங்கள் அரசாங்க அறிக்கைகளாகவே கூறப்படும்.

நான் சென்ற இரு முறைகளிலும் பீகிங்கில் இரண்டு வாரம் தங்கினேன். விருந்தினர்க்கென நடைபெற்ற சீன நாட்டிய நாடகத்தைப் பார்த்தேன்.ருஷ்யப் புரட்சிக் கீதங்களைப் போன்று அமைக்கப் பெற்ற இசையைக் கேட்டேன். சிறுபான்மையின ரின் கிராமிய நடனங்களையும் பார்த்தேன். மெய்லான்பாங் என்ற புகழ்பெற்ற சீன நடிகர், பெண் வேடம் பூண்டு நடிப்பதில் திறமை மிக்கவர். தனது ஓய்வுக் காலத்தின்போதும் அவர் எங்கள் முன் நடித்து எங்களை மகிழ்வித்தார். சீனத்துப் பட்டின் கவர்ச்சியும்; அழகும் நாடக அரங்கில் மட்டுமே காணப்படு கின்றன. எல்லாம் உழைப்பு! வீரர் நிரம்பிய நாட்டைத் தோற்றுவிப்பதற்குப் பாடுபடுகின்றனர். ஆனுல், இத்தகைய மிக்க உழைப்பினுல் அவர்கள் பெறும் பயன் எவ்வாறு இருக்குமோ ?

நான் பல்கலைக் கழகங்களில் சென்று, நிலச் சீர்த்திருத்தம் பற்றியும், பணப் பெருக்கம் பற்றியும் நிகழ்ந்த சொற்பொழிவு களைக் கேட்டேன். பீகிங்கின் எல்லையிலுள்ள கிராமத்தார்க ளுடனும் ஒரு நாள் இருந்து பழகினேன். வெளிநாட்டுத் தூதர்களுடனும் பேசினேன். ஆனுல், சிபேஷியின் ஓவிய நிலை யத்தில் கழித்த சில மணி நேரங்களை என்னுல் மறக்கவே முடிய வில்லை. சிபேஷி என்னுடைய வேண்டுகோளின்படி ஓவியம் ஒன்று வரைந்தார். சீனுவில் நாங்கள் பார்த்த வீடுகளில் அது ஒன்றே சாதாரணமான சீன வீடு. குவோமோஜாவின் வீட்டிற் குச் சென்றிருந்தேன். திருமதி சன்யாட்சன் வீட்டில் தேநீர்

அருந்தியிருக்கிறேன். அவை யெல்லாம் அலுவல் முறையில் யான் சென்றவை. எங்களைச் சுற்றி யிருக்கும் மக்களைப் பற்றி அங்குள்ள செய்தித் தாள்கள் எதுவும் அறிவிக்கவில்லை. ஆகவே, பீகிங் மக்களோடு இருந்த தொடர்பு அறுந்துவிட்டதாகவே எண்ணினேம். சீன மக்கள் அறிவு வளர்ச்சி பெறவேண்டிய தன் இன்றியமையாமையை நான் உணர்ந்தேன். அறிவு விதைகளை ஊன்றுவதற்கு ஏற்ற வளமான மண்தான் அது. ஆனல், மக்கள் மனம், வலிந்து ஊட்டப் பெறும்பொழுது ஏற்க மறுக்கிறது. கிடைத்தவற்றை ஏற்றுக்கொள்ளும் சிந்தனையைக் கட்டவிழ்த்துவிட வேண்டும்.

1951 அக்டோபரில் நான் பீகிங் சென்றபோது எனது இரு வார நிகழ்ச்சிகளும் முன்னரே முடிவுசெய்யப்பட் டிருந்தன. முக்கியமான இடங்களுக்குத் தினமும் சென்ருேம். அதற்கான அதிகாரி ஒருவர் எங்களைச் சந்திப்பார். கை குலுக்குதல், கை தட்டுதலுக்குப் பின், பழங்களும் தேநீரும் வைக்கப்பட்ட ஓர் அறைக்கு அழைத்துச் செல்லப்படுவோம். பின்னர், தலைவர் எழுந்து அந்த ஸ்தாபனத்தைப் பற்றியும், விடுதலைக்கு முன்னிருந்த நிலை பற்றியும், பின்னர் ஏற்பட்ட வளர்ச்சி பற்றியும் புள்ளி விவரங்களுடன் விளக்குவார். சில சமயங்களில் கேள்விகள் கேட்க அனுமதிக்கப்படும். அல்லது அந்த ஸ்தாபனத்தைப் பார்த்த பின்னர் கேள்வி கேட்கலாம் என்று கூறப்படும். பிரயாணம் முடிந்ததும் பழங்களும் தேநீரும் வழங்கப்படும். பின்னர், கேள்விகள் கேட்கலாம். பல்கலைக் கழகங்களில் நாங்கள் மாணவர்களைப் பார்க்கவோ, சந்திக்கவோ இல்லை. எங்களுக்கு நூல் நிலையமோ, விஞ்ஞானக் கண்காட்சியோ, வரலாற்றுக் கண்காட்சியோதாம் காட்டப்பட்டன.

எங்களுடைய நிகழ்ச்சியில் பல மக்கள் ஸ்தாபனங்களும் உட்படுத்தப்பட் டிருந்தன. இங்கும் வழக்கமான மரியாதைகளுக்குப் பின்னர், அந்த ஸ்தாபனங்களின் செயல் திறன் விளக்கப்படும். இவ்வாறே, நிலச் சீர்திருத்தம், பணப் பெருக்கம், சமாதானக் கழகம், தொழிலாளர் சங்கம் ஆகியவை பற்றியும் அறிந்து கொண்டோம். எதைப் பற்றியும் விவாதித்துத் தெரிந்து கொள்ள வில்லை. சொற்பொழிவு, சில வினக்கள் அவற்றுடன் நின்றுவிடும். மாலை வேளைகளில் விருந்துகள், சொற்பொழிவுகள், அல்லது நாட்டிய நாடகம், இசையரங்கம்,

சலனப்படங்கள் ஆகிய நிகழ்ச்சிகள் நாங்கள் தங்கியிருந்த விடுதி யில் அல்லது அரசாங்க விருந்து மண்டபத்தில் நடைபெறும். நாங்கள் விரும்பியபடி செல்வதற்கு நேரமிராது. எனினும், நான் பல்முறை அந் நிகழ்ச்சிகளி லிருந்து நழுவிப் பல வெளிநாட்டு மக்கள் தங்கும் இடங்களுக்குச் சென்று வந்தேன்.

சீனுவில் தினமும் என்ன நடக்கின்றது என்பதை அவர்கள் வாயிலாக அறிந்து கொள்ளவே அவ்வாறு சென்றேன். இந்தி யத் தூதரையும், வேறு பல தூதராலய அதிகாரிகளையும் அறி முகப்படுத்திக் கொண்டேன். அவர்கள் மூலமாகவே பிரிட்டிஷ் தூதராலய அதிகாரி திரு. லாம்ப், ஸ்விஸ் தூதர் திரு. ரெஸ்ஸோ னிக்கோ, மாஹ்தி என்ற இந்தோனேஷ்ய அதிகாரி ஆகியவர் களையும், இன்னும் சில அதிகாரிகளையும் சந்தித்தேன். அவர்கள் அரசாங்கத் தூதர் என்ற முறையிலேயே பேசினுர்கள். சீனு வின் சாதனைகள் பற்றி அவர்கள் மூலம் அறிந்து கொள்ள மிகவும் விரும்பினேன். இரண்டாம் முறை நான் சீனு சென்ற பொழுது இவர்களின் தொடர்பு மிகவும் பயன்பட்டது . நான் என் இச்சைப்படி சென்றேன். முன் போல் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளவில்லை. சில நாட்களில் மாலையில் அவர்களுடன் சென்றேன். பின்னர், எனது எண்ணத்தை உறுதிப்படுத்திக் கொண்டேன். மனித மனத்தைச் சிறைப்படுத்தும் கட்டுப் பட்ட சூழ்நிலையை நான் வெறுத்தேன். தனித்துச் செல்வதே அந் நிகழ்ச்சிகளி லிருந்து தப்பிச் செல்வதற் குள்ள வழி.

அக்டோபரில் ஒரு சம்பவம் நடந்தது. நான் பீகிங் சேர்ந்த இரண்டாம் நாள், இந்திய நல்லெண்ணத் தூதுக் குழு உறுப் பினன் என்ற முறையில், என் கையில் இருபது லட்சம் யுவான் கள் (சுமார் 90 டாலர்கள்) அடங்கிய கட்டு ஒன்று தரப்பட்டது. நான் சற்று ஆச்சரியமுற்றேன். இது ஏன் என்று என்னிலும் விஷயம் தெரிந்த என் நண்பர்களைக் கேட்டேன். முதலாளித் துவ நாடுகளிலிருந்து வரும் நண்பர்கள் ஏழைகளாகவே இருப் பார்கள் என்று சீனக் குடியரசு கருதுகின்றது என்று தெரிந்து கொண்டேன். ஆகவே, தங்கள் நாடு திரும்பும்பொழுது தங்கள் நண்பர்களுக்குக் கொடுப்பதற்குப் பரிசுப் பொருட்கள் வாங்கிச் செல்லவே அவ்வாறு பணம் தரப்பட்டது. நான் அதைப் பெற மறுத்தால் அது அவர்களை அவமானப் படுத்துவதாகக் கருதப் பட்டது. ஆனல், அங்ஙனம் பணம் பெறுவது வாங்குபவர்

களுக்கு அவமானம் என உணர்ந்தேன். எதுவும் செய்வதற்கு முன் தூதராலய அதிகாரியையும் கலந்து கொண்டேன். அவரும் திருப்பிக் கொடுத்துவிடுமாறே கூறினர். நானும் அவ்வாறே செய்தேன்.

மே மாதம் நான் சென்ற பொழுது என் விருப்பப்படி செல்ல அனுமதிக்கப்பட்டேன். நிகழ்ச்சித் திட்டம் என ஒன்றில்லை. அங்கீகாரப் பத்திரத்திற்காகக் காத்திருந்த ஒரு வாரம் நான் படிப்பதில் ஈடுபட்டிருந்தேன். அபூர்வப் பொருள் விற்பனையாளர்கள் பல பொருட்களுடன் என்னிடம் வந்தனர். பழைய சீனுவின் அழகை அனுபவிப்பதில் என் நாட்களைப் போக்கினேன்.

அனுமதி கிடைத்ததும், இந்தியக் குழுவோடு முன் சென்ற இடங்களுக்குப் போகத் தொடங்கினேன். என்னைத் தனியாகச் செல்ல விடுவார்கள் என்று நான் நினைக்கவில்லை. மாலை வேளைகளில் நான் தனியாகவே விடப்பட்டேன். பழைய நண்பர்களைச் சந்தித்தேன். அவர்கள் முன்னிலும் நன்ருகப் பேசினுர்கள்.

திரு. ரெஸ்ஸோனிக்கோ இனிமையாகப் பேசுபவர். காஸாநோவா என்ற பரம்பரையிலிருந்தும், போப் பரம்பரையிலிருந்தும் தாம் தோன்றியதாகக் கூறிக் கொள்வார். அழகான வீட்டில் தங்கியிருந்தார். சுவையாகப் பேசினுர். அவருடைய பணி சற்று சிரமமானது. கடந்த முப்பது மாத காலமாகப் பல இன்னலை அனுபவித்த ரோம கத்தோலிக்கச் சங்கங்களைப் பாதுகாப்பது அவர் வேலை. பிரிட்டிஷ் தூதர் திரு. லாம்பும், அவரது மெய்காப்பாளர் திரு. கில்லட்டும், அவர்களது மனைவிமார்களும் எப்பொழுதும் தனித்தே இருந்தனர். அவர்கள் முன்பே சீனுவில் இருந்தவர்கள். மக்களிடமிருந்து தொடர்பற்று இருந்தாலும், சீனுவின் நிலை குறித்து நன்கு தெரிந்தவர்கள். பிரிட்டிஷ் தூதரின் அழகிய மனையே அவர்களுக்குச் சிறையாக இருந்தது.

பீகிங் நகரம் நிசப்தமாகவும், களிப்பின்றியும் காணப்பட்டது. அங்கேதான் சீனுவின் முக்கிய மக்கள் வாழ்ந்தனர். அவர்கள் ஆசியாவின் கதியை மாற்றியமைக்க முயன்றுகொண்டிருக்கின்றனர். அவர்களிடம் சிறிது பேசினுலே போதும்-நம் மீது விழுவதற்கு எத்தகைய பேரிடி காத்திருக்கின்றது என்பது விளங்கிவிடும்! நாம் அவர்களைப்பற்றி அதிகம் தெரிய முடியாது. ஆனுல், அவர்களை அலட்சியப்படுத்துவது எத்தனை அபாயகரமானது!

# 3. மா சே-துங்

பீகிங்கில் இருக்கும்பொழுது மாசேதுங்கின் புகழ் பற்றிக் கேட்டும் படித்தும் இருந்தேன். பாதுகாக்கும் வான்கதிர், தந்தை, கம்யூனிஸ்ட்டுகட்கு வெற்றி தேடித் தந்த அறிஞன் என்று அவர் கருதப்படுகின்றார். மாயிஸம் என்பது ஒரு புதிய சமயக் கோட்பாடு. அதைப் பற்றிப் பேசவோ, மறுக்கவோ கூடாது. ஒரு சமயம் மா பத்திரிகை நிருபர்களுடன் களிப்புடன் பேசிக்கொண் டிருந்தார்; குடியானவர்களுடனும் தொழிலாளர் களுடனும் நெருங்கிப் பழகினார்; அவர்களது உணர்ச்சிகளை நேரடியாகத் தெரிந்திருந்தார்; ஏனானில் இருக்கும் அவரது சிறிய வீட்டில் நூற்றுக் கணக்கில் மக்களை வரவேற்றுப் பேசி யுள்ளார்; ஆயிரக் கணக்கில் கடிதங்கட்குத் தாமே பதில் எழுதி யுள்ளார். ஆனால், இன்று ஆட்சி கிடைத்து விட்டது. அவர் பாதுகாவல் நகரில் இருக்கின்றாரா, அன்றி மேற்குக் குன்றக் கோயிலில் தங்குகின்றாரா என்பது யாருக்கும் தெரியாது. மக்களோடு இப்பொழுது பழகுவதில்லை. விளக்கம் நாடும் குடி யானவர்-தொழிலாளர்களைச் சந்திக்கவோ, கடிதங்கட்குப் பதில் எழுதவோ நேரம் இல்லை. மே தினம், அக்டோபர் முதல் தேதி அணி வகுப்புகள், அதோடு நடைபெறும் அரசாங்க விருந்துகள் தவிர, வேறு எந்தப் பொது விழாவிலும் அவர் கலந்து கொள்வ தில்லை. அப்போதுங் கூட அவர் வருகை, அவர் வருவதற்குச் சில நிமிடங்கட்கு முன்னரே அறிவிக்கப்படும். மா ஒரு மறை; புதிய கடவுள் என்று எண்ணப்படுகின்றார்.

வீடுகள், அலுவலகங்கள், வீதிகள், ரயில் நிலையங்கள் முத லிய எல்லா இடங்களிலும் கம்பீரமும், இளமையும், புன்னகை யும் தவழும் அவருடைய படம் வைக்கப்பட்டுள்ளது. "மக்கள் ஆள வேண்டும்; மக்கள் இன்றி ஆட்சி யில்லை" என்று அவர் கூறியுள்ளார். இப்பொழுது அங்கு மக்கள் இல்லை. மக்கள் தலைவரே இருந்தார். மா தம் போதனைகளை, 'மாவின் சிந்தனை கள்' என்ற நூலில் கொடுத்துள்ளார். மார்க்ஸ், எங்கல்ஸ், லெனின் ஆகியோரது தத்துவங்களின் தொகுப்புரைகளே அவரது கொள்கை. என் போன்ற ஏழை எங்ஙனம் அவர் முன் செல்ல இயலும்? அதுவும் அவரோடு அளவளாவ எங்ஙனம் முடியும்? இரு முறை அவரைக் கண்டேன். அதுவே போதும்!

1951 செப்டம்பர் 30-ஆம் நாள் அரசாங்க விருந்தின் போது அவர் முன்னால் சில அடி தூரத்தில் புதிய சீனாவின் நலம் விழையப் பிரார்த்தித்தோம். அப்போது அவர் இந்தியக் குழுவினரை வரவேற்றுச் சில வார்த்தைகள் பேசினார். 'பருத்த திண் தோள், சிங்கம் போன்ற சிரம், கருநீலத் தலைமயிர், அகன்ற நெற்றி, கீற்றுப் போன்ற வாயிதழ், விரிந்த கண்கள்' என ராபர்ட் பெயின் அவரை வருணித்துள்ளார். சூடே, சூஎன்லாய் மற்றும் பலர் சூழ, அரசாங்க விருந்தின்போது அவரை அவருடைய நெகிழ்ந்த நீலச் சன்யாட்சன் உடையில் பார்த்தேன். அவர் படங்களில் இருப்பதை விடப் பருமனானவர் போல் தோன்றினார். விழாவின்போது குழந்தைகளைப் புன்னகையுடன் வரவேற்கும் ஓர் அன்பான தந்தை போன்று அவர் காட்சி யளித்தார். அவருடைய அகன்ற கண்கள் வந்திருந்தோரை ஊடுருவிப் பார்த்தன. சிறிய கரங்களையும், தடித்த கைகளையும் மிக்க அன்புடன் இறுக்கிப் பிடித்துக் குலுக்கினார். ஆரம்ப உபசாரம் முடிந்ததும், ஒவ்வொரு மேஜையின் அருகிலும் சென்று நலம் வினவி, மீண்டும் கை குலுக்கினார். அந்த விருந்து மண்டபத்தில் ஆயிரத்து எழுநூறு குடியானவர்களும், தொழிலாளர்களும் நிரம்பியிருந்தனர். அவர்களின் பாதுகாவலர் யாவருடனும் நெருங்கிப் பழகுவதைக் கண்ட அம் மக்கள் பலத்த ஆரவாரம் செய்தனர். தேசத்தின் எல்லாப் பகுதியிலும் உள்ள மக்களும் அக்டோபர் முதல் தேதி அணிவகுப்பில் கலந்து கொள்ள அனுமதிக்கப்பட் டிருந்தனர். மா மண்டபத்தைச் சுற்றி வந்ததும் மக்கள் பாட ஆரம்பித்தனர்:

"செங்கதிரோன் கீழ்த்திசையில் எழுந்தது காணீர் !
சீனாவும் மாசேதுங் தந்தது காணீர் !
அவனும்நம் நலம்பேண உழைக்கின்றான் !
அவனேநம் இன்னுயிரின் ஆற்றல்மிகு காவலன்!
மாசேதுங் பல்லாண்டு வாழ்க! வாழ்க!"

மீண்டும் மறுநாள், தியன்அன்மான் சவுக்கத்தில் அணிவகுப்பைப் பார்வையிடும்போது நான் அவரைப் பார்த்தேன். அவர், அவரது கட்சி அங்கத்தினர் புடை சூழ ஒரு மேடை மீது நின்றுகொண் டிருந்தார். அடர்த்தியான புருவங்களுடன், அழகாக-கம்பீரமாகச் சூஎன்லாய் இருந்தார். அவர் அருகில் கட்சியின் மூளை எனப்படும் லியுஷேசி நின்றார். மாயிசத்தை ஸ்டாலினிசமாகவும், ஸ்டாலினிசத்தை மாயிசமாகவும் பெயர்த்து எழுதும்

பணி அவருடையது. அத்தகைய அரிய காட்சிக்கு அழகுதரும் வகையில் திருமதி சன் இருந்தார். அப்போதுதான் அவரைக் கௌரவமான பதவியில், தேசியத் தலைவர்களுடன் மக்களால் பார்க்க முடியும். அரசாங்கத்தின் பல அதிகாரிகளும் அங்கே வீற்றிருந்தனர். மா அசையாமல் கவனித்துக்கொண் டிருந்தார். கட்சியின் தூணை சூடே, களம் பல கண்ட கடின முகத்துடன், ஜீப் வண்டியில் அணி வகுப்பின் முன்னுல் சென்ருர். அவர் பின்னுல் சீனுவின் படைபலம் சென்றது.

அப்பொழுதும் மா நீல உடையும், குவிந்த குல்லாவும் அணிந்திருந்தார். அவர் நின்ற மேடையின் கீழே கம்பீரமான தோற்றங் கொண்ட அவரது உருவப் படம் கிழக்கு நோக்கி மாட்டப்பட் டிருந்தது. காலை பத்து மணி முதல் மாலை மூன்று மணி வரை அவ்வாறே நின்றுகொண் டிருந்தார். வணங்கும் அடியார்களை வாழ்த்தும் முனிவர் போன்று, இடையிடையே கைதூக்கி வணக்கம் செலுத்தினுர். அப்பொழுது, "மாசேதுங் பல்லாண்டு வாழ்க !" என்ற முழக்கம் எழுந்தது. அவருடைய எளிய வதனத்தில் புன்னகை அரும்பியது. அந்தச் சவுக்கத் தில் அவர் இருந்த காட்சி மக்களுடைய மனத்தையும் உணர்ச்சியையும் ஒன்ருகப் பிணித்தது. அவர் வாயினின்றும் வெளிப்படும் சொல் சட்டம் மட்டுமன்று; அறிவுரை, உண்மை யாவும் சேர்ந்த ஒன்று என்று போற்றப்பட்டது. அச் சொல்லை மறுப்பது இழிவு என்று எண்ணப்பட்டது.

இன்று மாவுக்கு அறுபது வயதாகின்றது. கடுமையான நீண்ட வாழ்க்கை அவருடைய உடல் நலத்தைப் பாதித் திருந்தது. அவரது நான்காம் மனைவியுடன் வாழ்ந்த வாழ்க்கை இரகசியமாகவே இருக்கின்றது. அவர் உடலில் இளமை தோன்றினுலும், கரிய மயிரை இளமை தோன்ற வாரி விடப்பட் டிருந்தாலும், அவ் வணிவகுப்பின் போது பல மணி நேரங்கள் தொடர்ந்தாற் போல் அவரால் நிற்க முடியாது என்று கூறப்படு கின்றது. ஆகவேதான், மே தின அணி வகுப்பு ஆறு மணி நேரத்திலிருந்து மூன்று மணி நேரமாக் குறைக்கப்பட்டுள்ளது.

இந்தியக் குழுவினர் இந்தியாவின் சார்பில் அளித்த விலை யுயர்ந்த பரிசுகளை அவர் கண்ணெடுத்தும் பாராது ஒதுக்கித் தள்ளிவிட்டார். அப் பரிசுகள் அவரது பாராட்டுதலைப் பெருதது, இந்தியக் குழுவினருக்கு வருத்தத்தைக் கொடுத்தது. பின்னர் இந்தியத் தூதுக் குழுவினருள் ஒருவர் இந்திய நடனம் ஆடினுர்.

மா நடுவரிசையில் இருந்து பார்த்துக்கொண் டிருந்தார். அவரது முகத்தைக் கூர்ந்து கவனித்த இந்தியக் குழுவினருள் ஒருவர், அவர் அந் நடனத்தை ரசிக்கவில்லை யென்று கூறினர். முக்டன் விடுதியில் மக்கள் அமரும் அறையில் அவரது உருவப் படம் வைக்கப்பட் டிருந்தது. கிரம்லின் மாளிகையின் தூண்கள் நிரம்பிய இடை வழியில், மாலடோவும், சூஎன்லாயும் தொடர்ந்து வர, மாவும் ஸ்டாலினும் நடந்து செல்லும் பெரிய ஓவியம் அது. முன்பு அந்த இடத்தில் ஸ்டாலினின் முழு உருவப் படம் வைக்கப்பட் டிருந்தது. சோவியத் ருஷ்யா மஞ்சூரியாவை ஆண்டு வந்த காலத்தில் அப் படம் கொண்டுவரப் பட்டிருக்கவேண்டும். 1952 மே மாதம் நான் சென்றபொழுது முக்டன் விடுதியில் அப் படம் அகற்றப்பட் டிருந்தது. அதே இடத்தில் சீன-சோவியத் உறவைக் காட்டும் இப் படம் வைக்கப்பட் டிருந்தது. அப் படத்தில் சோவியத் தலைவர்களைவிட, சீனத் தலைவர்களின் உருவங்கள் உயரமாக வரையப்பட் டிருந்தன. எனக்கு அது வியப்பைக் கொடுத்தது. ஏனெனில், அதே போன்ற ருஷ்யப் படத்தில், ருஷ்யத் தலைவர்கள் சீனத் தலைவர்களைவிட உயரமாக இருந்தார்கள். ஒவ்வொரு படத்திலும், மக்களுக்கு யார் பெரியர் என்று காட்டும் முயற்சி வெளிப் பட்டது.

ஸ்டாலின் இறக்குமுன், மாவுக்கும் ஸ்டாலினுக்கும் மிக்க அன்பு இருந்ததாக நான் கருதவில்லை. சீனுவின் போராட்டத்தின் போது சோவியத் ருஷ்யா மாவிடம் அலட்சியமாகவே நடந்து வந்தது. போர் முடியும் தறுவாயிலுங்கூட, அது அவ்வளவு விரைவில் சியாங்கை வென்றுவிடும் என்று ருஷ்யா எதிர்பார்க்கவில்லை. 1927-இல் இருந்தே மாசேதுங் கோமிண்டாங் கட்சியையும், ஸ்டாலினையும் வெறுப்புடன் நோக்கி வந்தார். ஒரு வரையறைக் குட்பட்ட நிலங்களைக் கைப்பற்ற வேண்டுமென்றும், நகரங்களில் ஆயுதமேந்திய தொழிலாளர்கள் புரட்சி செய்ய வேண்டுமென்றும் ஸ்டாலின் யோசனை கூறிவந்தார். போரோடினும், ராயும் சென்ற பின்னர், மாஸ்கோவில் பயிற்சி பெற்ற லீலிசென் அந்த யோசனைப்படி நடந்தார். மாஸ்கோவிற்கு 1949-இல் சென்றது தவிர நாட்டைவிட்டு வெளிச்சென்று அறியாத மாசேதுங் குடியானவர்களிடமிருந்து தனக்குப் பலம் தேடினர். உழவர்களுக்கு நிலம் தேவை என்பது அவருக்குத் தெரியும். கம்யூனிஸ்டுகள் உழவர்களின் உதவியைக் கொண்டே

போராட முடியும் என்பதையும் உணர்ந்தார். "போராட்டம் என்பது உண்மையில் உழவர்கள் போராட்டமே" எனப் பின்னர் எழுதினுர்.

'சீனப் புரட்சியும் சீனக் கம்யூனிஸ்ட்டுக் கட்சியும்' என்ற நூலில் 1939-இல் மா சீனப் புரட்சியை விளக்கியுள்ளார்:

> இத்தகைய பகைவர்கள் முன்னிலேயில், புதிய புரட்சித் தளம் பற்றிய கேள்விகள் எழுகின்றன. சீனுவில் ஏகாதிபத்திய அரசாங்கமும், அதற்குத் துணையாக இருக்கும் நேசப் படையினரும் முக்கிய நகரங்களிலேயே இருக்கின்றனர். புரட்சிப் படையினர் தமது பலத்தை ஒன்று திரட்டி, பெருக்கி, நாம் அறியாத படை பலம் கொண்ட பகைவருடன் இறுதிப் போராட்டத்தில் இறங்க வேண்டுமானுல், அவர்கள் கவனிப்பாரின்றி ஒதுக்கப்பட்ட பகுதிகளே, படை, அரசியல், பொருளாதாரம், கலாசாரம் ஆகிய புரட்சிப் பாசறைகளாக்கிக் கொள்ளவேண்டும். இப் பாசறைகளில் இருந்துதான் புரட்சிப் படையினர், நகரங்களேப் பிடித்துக் கொண்டு கிராமங்களேக் கைப்பற்ற வரும் தீய பகைவருடன் போரிடமுடியும். இப் பாசறைகளில் இருந்தே புரட்சிப் படையினர் நீண்ட போர் புரிந்து, படிப் படியாக முழு வெற்றி யெய்துவர். சீனுவின் பொருளாதார வளர்ச்சி நிலேயற்ற தன்மையது. (கிராமியப் பொருளாதாரம் நகரப் பொருளாதாரத்தை முழுதும் சார்ந்து நிற்பதன்று.) சீனு பரந்த பிரதேசத்தை யுடையது; (புரட்சிப் படையினருக்குச் சாதகமாகப் பல பகுதிகள் உள்ளன.) புரட்சிப் படையின் பகைவர்களிடையே முரண்பாடும் வேற்றுமையும் நிறைந்துள்ளது; சீனக் குடியானவர்கள் மிகுந்துள்ள புரட்சிப் படை கம்யூனிஸ்ட் கட்சித் தலேமையில் உள்ளது; இந்த நிலேயில் சீனப் புரட்சி, முதலில் நாட்டுப் புறத்தில் வெற்றி பெறும் என்பதில் ஐயமில்லே. இவ்வாருக புரட்சி ஒரு நிலேயற்ற சூழ்நிலேயில் தனது முடிவை நோக்கித் தள்ளப்பட்டது. அதனுல்தான் நமக்கு மிக்க தொல்லே ஏற்பட்டு புரட்சியும் நீடித்தது.

இது புரட்சித் தத்துவத்திற்கு முற்றிலும் முரண்பட்ட முறை. கோமிண்டாங் கட்சியால் எதுவும் செய்ய முடியவில்லே. சீன மக்கள் தாங்களே தங்கள் விதியை நிர்ணயிக்குமாறு கைவிடப்படனர். கம்யூனிஸ்ட்டுகளே வேருடன் அறுப்பதற்குச்

சியாங் கையாண்ட ஐந்து கடுமையான திட்டங்களை அழித்ததி லிருந்து மாசேதுங்கின் கருத்து செம்மையானது என்று சீனக் கம்யூனிஸ்ட்டுகள் அறிந்து கொண்டார்கள். சீனக் கம்யூனிஸம், மார்க்ஸ், எங்கல்ஸ், லெனின் ஆகிய தத்துவ ஞானிகளிடமிருந்து நேராக மாசேதுங்கிடம் வந்து விட்டது. கம்யூனிஸத்தின் மேற்குக் கிளை ருஷ்யாவில் படர்ந்துள்ளது. கிழக்கில் மாயிஸம் பரவுகின்றது. ருஷ்யாவும் மாவும் ஒருவரை ஒருவர் சந்தேகிக்கும் நண்பர்கள். ஆனால், மாவும் கம்யூனிஸ்ட் சீனாவும் மேற்கு வல்லரசுகளுடன் தொடர்பின்றி இருப்பதால் படைபலம், தொழில் நுணுக்க உதவி, பொருளாதார உதவி ஆகியவற்றிற்கு ருஷ்யாவையே நாடுகின்றது. ருஷ்யாவின் ஆதிக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்கு மா இந்தியாவின் நட்பை விரும்புகின்றார். இந்த எண்ணத்தோடுதான் சீனா இந்தியாவுடன் உறவு கொண்டாடுகின்றது.

மீண்டும் நான் மாவைப் பார்க்கவில்லை. இந்தியக் கலா சாரத் தூதுக் குழு அவரைச் சந்திக்கச் சென்றபொழுது நான் பீகிங்கி லிருந்தேன். முதலில் குழுத் தலைவர் திருமதி பண்டிட் உள்ளே சென்றார். சில நிமிடங்கள் கழிந்ததும் ஏனையோர் அவர் இருக்குமிடம் சென்றனர். இருவரும் இந்தியச் சீன நலம் விழைந்து மது வருந்தினர். அப்பொழுது திருமதி பண்டிட்டுக்கு மாவுடன் பேச வாய்ப்புக் கிட்டவில்லை. அவர்கள் இருவரும் கை குலுக்கியபொழுது, குழுவினருள் ஒருவர்,'அவர்கள் சீனாவில் இருப்பதில் மகிழ்கின்றார்கள்' என முணுமுணுத்தாராம். மா அதற்குப் பதில் அளித்தாராம்: "சமாதானத்திற்காக நாம் பணியாற்றுவோம். ஆக்க வேலைக்கு நாம் சேர்ந்து உழைப்போம்" என்று. இதை அவரது 'ஆசிய உணர்ச்சி' என்று சிலர் விளக்கினார்கள். ஆசியா சீனாவின் செல்வாக்கிற் குட்பட்டது என்பதைத் தவிர, இதற்கு வேறு பொருள் எனக்குத் தெரியவில்லை!

கழிந்த சில ஆண்டுகளாக மா இந்தியாவை நோக்கும் விதத்தில் சில மாறுதல்கள் காணப்படுகின்றன. அம் மாறுதல் களில் அவரது கொள்கையும் வெளிப்படுகின்றது. முன்பெல் லாம், 'சோவியத் ருஷ்யாவின் உதவியின்றிச் சீனாவில் இறுதி வெற்றி காண்பது இயலாது' எனப் பலமுறை கூறியிருக்கிறார். மக்கள் அரசியல் ஆலோசனை மாநாட்டின் முதல் தேசியக்

குழுவின் மூன்ருவது கூட்டத்தில் அவர் உறுதியாகக் கூறு கின்ருர்: "சர்வதேசத் துறையில் நாம் சோவியத் யூனியன் தலைமையில் சமாதானத்திற்கும் குடியரசிற்கும் பாடுபட் டிருக் கிருேம். அதற்கு உலக முழுதுள்ள மக்களின் நல்லெண்ணமும் துணை நின்றது." ஆனல், மூன்ருண்டுகள் சோவியத் ருஷ்யா வின் தோழனுக இருந்ததன் பயனுக, ருஷ்யா தனது ஆதிக்கத் தைச் சீன மீதும் செலுத்துகின்றது என்ற பயமும் எழுந் துள்ளது. 1951 அக்டோபரில், இந்திய மக்களுக்கும் 'சீன பண் படுத்த வேண்டும்' என்ற சுற்றறிக்கை அனுப்பப்பட்டது. 'ஆசிய மக்களின் ஒற்றுமை வாழ்க!' என்று அணிவகுப்பின்போது முழங்கப்பட்டது. இந்தியத் தூதுக் குழுவினர் பெரும் ஆரவாரத் துடன் வரவேற்கப்பட்டனர். அவர்கட்கு விருந்தும் இந்திய மக்களின் பிரதிநிதிகள் என்ற முறையிலேயே அளிக்கப்பட்டது. ஆனல், இந்திய அரசாங்கம் பற்றியோ, முதல் அமைச்சரைப் பற்றியோ எதுவும் கூறவில்லை. இது எதைக் குறிக்கின்றது? இன்று மா, மக்கள் மத்திய அரசாங்கத்தின் தலைவர்; மக்கள் புரட்சிப் படைக் குழுத் தலைவர். அதனல் அளவற்ற அதிகாரம் உள்ளவர். வெற்றி அவரைச் சர்வாதிகாரி ஆக்கியுள்ளது. அவர் இட்டதே சட்டம். அதிகார வேட்கை முன்பே அவரை உந்தித் தள்ளியது. ஆனல், அப்பொழுது அவர் கட்சியின் நிலைக்குட் பட்ட ஒரு குடியானவன். இன்று அவர் பாதுகாப்புத் தாரகை. அவர் செலுத்தும் வரம்பற்ற அதிகாரம், ஆசிய அரசுகளின் உறவால்தான் வளர்ச்சிபெறும் - சோவியத் ருஷ்யாவிற்கு அடி பணிவதால் அன்று.

தொலைவிலுள்ள மக்களின் வாழ்க்கையில் அவரது செல் வாக்கு நிலவுதலை நான் காண நேர்ந்தது. கயோகாங் என்ற ஒரு வடகிழக்குக் கிராமத்தில் பெண்கள் எங்களுடன் கை குலுக்க ஓடிவந்தார்கள். ஏனெனில், மா எங்களுடன் கைகுலுக்கினர் என்று அவர்கள் கேட்டிருந்தனர்! உழவர்கள் தங்கள் துயரங் களைக் கடிதங்கள் மூலம் அவருக்கு எழுதியதையும், அவற்றிற்குக் கிடைத்த பதில்கள் பற்றியும் கூறினர். பேசத் தெரிந்த குழந்தைகள் எல்லாம், 'செங்கதிரோன் கீழ்த்திசையில்' என்ற பாட்டைத் தெரிந்திருந்தனர். ஷாங்காயில் ஒரு கிழவி எங்களைக் காண வந்தார். ஏனெனில், அக்டோபர் அணிவகுப்பிற்கு அவள் பீகிங் சென்றிருந்தபொழுது மா, "இந்தியா நமது அண்டை நாடுகளுள் முக்கியமானது. நாம் அதைப் பற்றி நன்ருகத்

தெரிந்துகொள்ள வேண்டும்'' என்று கூறினராம். அவள் வேறு யாருமல்லள்; கோமிண்டாங் வீரர்களால் இறந்தவர் குவியலில் விடப்பட்ட, பெண்கள் எதிர்ப்புச் சங்கத்தின் தலைவர் சாங் மாமாவேதான்!

இதற்கு முன்னுல் சீனுவில் யாரும் செலுத்தாத அதிகாரங்களை மாசேதுங் கொண்டுள்ளார். தம்முடைய உயர்வுக் கற்பனையில் தாமே அமிழ்ந்து விடுவாரோ என்னவோ ?

## 4. சூ யென்-லாய்

பல இடங்களைப் பார்வையிடுவதைவிட, அங்குள்ள மக்களையும், அவர்கள் வாழும் வகையையும் அறிவதிலே நான் மிக்க ஆவலுடையவன். ஆனால், பார்வையாளர்களுக்குச் சீனாவில் மக்களைப் பற்றி அதிகமாக அறிந்து கொள்ள முடியவில்லை. தங்கள் புதிய ஜனநாயகத்தை வெற்றிகரமாகச் செய்வதற்கு அவர்கள் உழைக்கின்றனர். ஒவ்வொன்றும் திட்டப்படியே தான் நடந்தது. திட்டங்கள் முன்பே தீட்டப்பட்டு, நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டன. திட்டத்தின் லட்சியங்கள் தூண்டப்பட்டன. மக்களின் வீரர்கள் நூற்றுக்கணக்கில் புதிய நுணுக்கங்களைக் கையாண்டு பழைய கருத்துக்களை வென்று விட்டார்கள். வரவேற்பு வைபவங்களில் நல்ல உறவுநிலை நிலவிற்று என்ற அறிக்கையும், மந்திரிகள் அவ் வைபவத்தின் போது ஆற்றிய சொற்பொழிவுகளுமே செய்தித் தாள்களில் முக்கியமாக வெளியிடப்படும். கொரியாவில் நடைபெற்ற சமாதானப் பேச்சு வார்த்தைகள் பல முறை வெளியிடப்பட்டன. நகரங்களில் வாழும் மக்களுக்கு வெளியுலகத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது. எனக்குக் காட்டப்பட்டவைகளையே நான் பார்க்க விரும்பியிருந்தால், நான் சீனாவிற்குச் செல்லவேண்டிய அவசியமில்லை. எனக்குத் தரப்பட்ட அறிகைகளிலிருந்தும், புகைப்படங்கள் மூலமாகவும் நான் அவற்றை அறிந்துகொள்ள முடியும்.

வாழும் மக்களைப் பார்ப்பதற்கும், அவர்களைப் பற்றிக் கேட்டு அறிந்து கொள்வதற்குமே நான் அங்குச் சென்றது; தலையாட்டும் பொம்மைகளைப் பார்ப்பதற்கல்ல. நான் முன் சென்று மக்களுடன் பேசி, அவர்களது கருத்துக்களை அறிய அவாவினேன். இதோ, பீகிங்கில் வரலாற்றின் போக்கையே மாற்றிய எழுச்சிகொண்ட மக்கள்! ஆனால், நான் அவர்களிடம் எத்தகைய வினாவும் விடுக்கமுடியாது. நான் பொறுமை யிழந்து ஊக்கம் குன்றி விட்டேன். குழுவினருக்கு மொழிபெயர்ப்பாளராக இருந்த பெண்ணிடம் நான் பல முறை சென்று, மாசேதுங், சூஎன்லாய், லியுஷோசி முதலியவர்களைக் கேள்விகள் கேட்க விரும்பியதாகக் கூறினேன். "உங்களது வேண்டுகோள் அனுப்பப்பட் டிருக்கிறது" என்ற ஒரே பதில்தான் கிடைத்தது. விருந்துக் குழுவின் தேவைகளைக் கவனிக்கும் அதிகாரியிடம்

என்னை அழைத்துச் செல்லுமாறு கேட்டேன். அவரிடம் என்னுடைய வேண்டுகோள் சாதாரணமானது என்று விளக்கினேன். இந்தியப் பத்திரிகையாளரின் சார்பில் நான் பேசினேன். சீனத் தலைவர்கள் கூறுவதை இந்தியப் பத்திரிகைகள் புகழ்ந்து வெளியிடும் என்று உறுதி கூறினேன். நாங்கள் பார்த்தவற்றை மட்டும் வெளியிட்டால் போதாது; புதிய சீனாவின் பேராற்றலைச் சீனத் தலைவர்கள் வாயிலாக அறிந்து வெளியிட வேண்டும் என்று கூறினேன். நான் மிகவும் வற்புறுத்தியதால் பயன் கிட்டியது. எனது வினாக்களை எழுதித் தந்தால் அவற்றை வெளிநாட்டு இலாகாவிற்கு அனுப்புவதாக அவர் கூறினார். அதற்குமேல் அவரால் ஒன்றும் சொல்ல முடியவில்லை.

பல நாட்கள் சென்றன. நேரில் சந்திக்க விரும்பிய விண்ணப்பத்திற்குப் பதிலே இல்லை. பீகிங்கில் நாங்கள் இருக்க வேண்டிய காலமும் முடியலாயிற்று. எனக்கு ஒரே ஏமாற்றமாகி விட்டது. ஒரு நாள் தலைமை மொழிபெயர்ப்பாளரான திருமதி லியு என்னை யழைத்து, புதிய சீனா, பத்திரிகை நிருபர்களுக்குப் பேட்டியளிப்பதில் நம்பிக்கை கொள்ளவில்லை என்றார். என்றாலும், ஒரு விருந்தின்போது முதலமைச்சர் சூயென்லாயைச் சந்திக்கலாம் என்று அவர் நம்பினார். அத்தகைய பெருங் கூட்டங்களில் பத்திரிகை நிருபர்களைச் சந்திப்பதால் பயனில்லை; எனது வினாக்களுக்கு விடையளித்தற் பொருட்டு என்னை மட்டும் சந்திக்காமற் போனாலும், ஒரு பத்திரிகை நிருபர் கூட்டம் ஒன்றில் எங்களைச் சந்திக்கலாம் என்று நான் யோசனை கூறினேன். ஆனால், எனது வேண்டுகோள் காற்றில் பறக்கவிடப்பட்டது போல் தோன்றிற்று.

நல்லெண்ணத் தூதுக் குழு புறப்படுவதற்கு இரண்டு மூன்று நாட்களுக்கு முன் இந்தியத் தூதர் எங்களை அவர் வீட்டிற்கு விருந்துண்ண அழைத்தார். சீன வெளிநாட்டுறவு அலுவலகத்தில் பீகிங்கிலுள்ள எல்லாத் தூதுக் குழுக்களுக்கும் ஒரு வரவேற்பு ஏற்பாடு செய்யப்பட் டிருந்தமையால், நாங்கள் அவ் விருந்தை இரவு ஒன்பது மணிக்கு முன்னர் முடிக்க வேண்டும் என்று அன்றைய பிற்பகலே அறிவிக்கப்பட்டது. அவ் வரவேற்பின்போது எனக்கு முதலமைச்சரைச் சந்திக்க வாய்ப்பு ஏற்படும் என்று கூறப்பட்டது. அதைப் பற்றி நான் அவ்வளவு ஆர்வம் கொள்ளவில்லை. ஆனால், முன் கருதலுடன்

முன்பு அனுப்பியிருந்த வினாத்தாளின் நகலை எடுத்துச் சென்றேன்.

சரியாக இரவு ஒன்பதரை மணிக்கு அரசாங்க வரவேற்பிற்குச் சென்றோம். கிழக்கு ஐரோப்பா, ருஷ்யா, இந்தோனேஷ்யா, பர்மா, பாகிஸ்தான், இந்தியா ஆகிய நாடுகளின் தூதுக் குழுக்கள் அங்கே குழுமி இருந்தன. வழக்கம்போல் கை குலுக்கிவிட்டு, நாங்கள் சென்ற விருந்துகளின்போது வழங்கப்படும் சொற்பொழிவுகளுக்காகக் காத்திருந்தோம். சில நிமிடங்கட்குப் பின் திருமதி லியு முதலமைச்சருடன் வந்து, எங்களை அவருக்கு அறிமுகப்படுத்தினார். வாயிலில் எங்களை வரவேற்ற முதலமைச்சரே அங்கு வந்தது கண்டு நாங்கள் ஆச்சரியப்பட்டோம். அது எங்களுக்கு முற்றிலும் புதிய முறை. உணவருந்தும் அறைக்குள் சென்று எங்கள் விருப்பப்படி இருக்கைகளில் அமர்ந்தோம். தலைவரின் மேஜையை நான் கடந்து செல்கையில், என் கையால் எழுதப்பட்ட கேள்வித்தாள் முதலமைச்சரின் ஆசனத்தின் முன் மேஜை மேல் இருப்பதைக் கண்டேன். இருநூறு பேர் கொண்ட அவ் விருந்தின் போது நான் எனது வினாக்களை எங்ஙனம் விடுக்க முடியும் என்று கலக்கமும் ஐயமும் கொண்டேன். விருந்தினரில் பலர் அக் கேள்விகளில் ஆர்வம் காட்டாமல் இருக்கலாம். மற்றவர்கள் தங்கள் ஐயப்பாடுகளை வெளியிடுதற்கும் வாய்ப்புத் தராமல் நான் எனது வினாக்களைக் கேட்டு விடுவது என்று தீர்மானித்திருந்தேன்.

அவ் வரவேற்பு யந்திரம் போல் நடந்தது. சூயென்லாய் எழுந்து விருந்தினரை வரவேற்றார். எங்களை வரவேற்று, பின் சீனாவில் பார்க்க விரும்பியவற்றைப் பார்த்திருக்கலாம் எனத் தாம் நம்புவதாகக் குறிப்பிட்டார். மேலும் தொடர்ந்தார்: “உங்களுக்குப் பல குறைகள் ஏற்பட்டிருக்கலாம். என்றாலும், புதிய சீனா இரண்டாண்டுக் குழந்தை. என்னிடமிருந்து நீங்கள் பல விஷயங்களை அறிய விரும்பலாம். உங்களது கேள்விகட்கெல்லாம் பதில் சொல்லச் சித்தமாக இருக்கின்றேன்.” இவ்வாறாக ஐந்து நிமிடங்களில் தனது பேச்சைச் சுருக்கிக் கொண்டார். அப் பேச்சு ஆங்கிலத்திலும், ருஷ்ய மொழியிலும் மொழிபெயர்க்கப்பட்டது. மொழிபெயர்ப்பு முடிந்ததும், சில நிமிடம் கேள்விகளை எதிர்பார்ப்பது போல் நின்று, பின்னர் என்னை நோக்கித் திரும்பினார். நான் எழுந்திருந்து வினாக்களைக் கேட்க வேண்டுமென்று அவர் எதிர்பார்த்தார்.

சூவை மிகவும் அண்மையில் பார்ப்பது அதுவே முதல் தடவை. இந்தியாவின் நேருவைப்போல் அவர் அழகான தோற்றமுள்ளவர். சன்யாட்சன் உடையில் கவர்ச்சிகரமாகத் தோன்றினர். அவரது உடை பொருத்தமாகத் தைக்கப்பட்டிருந்தது. அவரது எழிலும், முகப் பொலிவும், தனது சிறப்பை வெளிக்காட்டாத அடக்கமான தன்மையும் பாமர நாட்டுப்புற மக்களைப் பெரிதும் கவர்ந்தன. இனிமையான குரல்; கலை மிளிரும் அங்க அசைவுகள்; குழந்தைச் சிரிப்பு; மூடி மூடித் திறக்கும் கண்கள்—யாவும் காண்போரை மயங்கச் செய்வன. அவர் நன்கு கற்றவர்; பிரஞ்சு, ஜெர்மன் மொழிகளை நன்கு பேசுகின்றார். பிரான்ஸில் படித்துக்கொண்டிருந்தபோது லிலிசான், லோமான் என்பவர்களுடன் சேர்ந்து சீனக் கம்யூனிஸ்ட் கட்சியைத் தோற்றுவித்தார். கோமிண்டாங்குடன் ஒத்துழைத்த காலத்தில் சுங்கிங்கில் ஏனன் பிரதிநிதியாக இருந்தார். பேசுவதற்குத் தகுந்த கம்யூனிஸ்ட்டு அவர் ஒருவரே எனச் சியாங்கேஷேக் கருதி வந்ததாகக் கூறப்படுகிறது.

ஏனனிலும், பின்னர்ச் சுங்கிங்கிலும் இன்னல் நிறைந்த வாழ்க்கை நடத்திய போதிலும், அவரது உடலில் இளமை தோன்றுகிறது. கை குலுக்கும்போது கெட்டியாகப் பிடித்துக் குலுக்குகின்றார்; மிக்க சுறுசுறுப்பாக அங்குமிங்கும் செல்கின்றார். அவரது மயிர் நிரம்பிய கரிய புருவங்கள் லட்சியத்தின் மீது அவருக்குள்ள ஆர்வத்தையும், உணர்ச்சிமிக்க பற்றுதலையும் காட்டுகின்றன. பேசும்பொழுது களிப்புடன் பேசுகின்றார். ஆழ்ந்த சிந்தனையுடனும், அறிவுக் கூர்மையுடனும் பேசுகின்ற கருத்துக்கள் கேட்போரின் மனத்தைப் பிணிப்பதைத் தெரிந்து பேசுகின்றார். இந்தியக் கலைக் கண்காட்சியை 1952-இல் திறந்து வைக்கும் பொழுதும் அவரை நான் பார்த்தேன். வண்ண ஓவியங்களை மிகவும் ஆவலுடன் நோக்குவது கண்டு நான் வியந்தேன். கண்காட்சியைச் சுற்றிப் பொறுமைமாகப் பார்த்து வந்தார். அவ்வப்போது ஓவியங்கள் பற்றித் தன் கருத்துக்களையும் வெளியிட்டார். அவர் வெளியிட்ட கருத்துக்கள், அவருக்கு அக் கலையின் மீது அத்தனை புலமையில்லை யென்பதைத் தெரிவித்தன. படங்களின் பொருட்களைக் கவனித்தாரே யன்றி, ஓவியனின் திறத்தைக் கவனிக்க வில்லை. கலைகளை அறிந்து கொள்வதற்கு அவர் முயல்கிறார் என்றே எனக்குப் பட்டது. ஏனெனில், அவர் தன்னைக் கலைப் பண்பு நிறைந்தவனாகக் கருதுகின்றார்.

அவர் கட்சியின் மத்தியக் குழுவில் ஓர் உறுப்பினராயினும் கட்சியிடம் அவருக்கு அவ்வளவு தொடர்பு கிடையாது. தனது சொந்தச் செல்வாக்கின் மூலமே அவர் தனது பதவியை வகிக்கின்றார். தங்களது பண்பாலும், அழகிய தோற்றத்தாலும், தனித்து வாழ்தலாலும், கீழ்நாட்டுத் தலைவர்கள், தாங்கள் திறமையோ, உயர்ந்த அறிவோ இல்லாதிருப்பினும், மக்களிடையே மிக்க செல்வாக்குப் பெற்றிருத்தல் அரிதல்ல. இந்தியாவில் நேருவும், பாகிஸ்தானில் ஜின்னாவும் மக்களின் நன்மதிப்பைப் பெறுதற்கு அவர்களது அறிவுத் திறனுடன், சமூக நிலையும், தோற்றப் பொலிவுமே காரணம். அழியாத துயர், அழகின்மை இவற்றினிடையே, அன்னவர் மக்களுக்குத் தங்கள் தோற்றத்தால் ஓர் ஆறுதல் அளிக்கின்றனர்.

எனது முக்கியமான கருத்தைத் தெளிவுபடுத்தும் விடைகளைப்பெறும் முறையில், நான் பதினாறு வினாக்கள் ஒன்றன் பின் ஒன்றாகக் கோத்திருந்தேன். அங்கே கூடியிருந்த பல மக்களிடையே விடைகளைத் தெரிதல் இயலாததாகும். பல நாடுகளிலிருந்தும் வந்திருந்த நூற்றைம்பது பிரதிநிதிகள் தவிர, உதவிப் பிரதமர்கள் துங்பிவு, குவோமோஜோ, மத்திய சர்க்கார் பொதுச் செயலாளர் லின்போசு, வெளிநாட்டுத் துணை மந்திரி வாங்சியசியாங் ஆகியோரும் வந்திருந்தனர். கொரியப் போர் பற்றியும், சமாதானப் பேச்சு வார்த்தை பற்றியும், நான் கேட்டால், அது அவர்களை அவமானப் படுத்துவ தாகும் என நான் உணர்ந்தேன். எனது வினாக்களை எடுத்துக்கொள்ளு முன் கூட்டத்தின் போக்கு எவ்வாறு செல்லுகின்றது என்றறியக் காத்திருந்தேன்.

எனக்கு அளிக்கப்பட்ட வாய்ப்பை நழுவ விடாமல், நான் எழுந்தேன். உடனே மொழிபெயர்ப்பாளர் என்னருகே விரைந்து வந்தார். மக்களிடையே தப்பான எண்ணங்கள் நிலவி வருவதால், சில கேள்விகள் கேட்க அனுமதி வேண்டும் என்று ஆரம்பித்தேன். 'நாங்கள் இந்தியாவில் சமாதானத்தைப் பற்றி அதிகம் கேட்டிருக்கிறோம். ஆனால், உண்மையில் உலகம் குழப்பத்திலேயே உழல்கின்றது. சமாதானம் பற்றிச் சீனாவின் கருத்தென்ன என்பதைப் பிரதமர் விளக்குவாரா? உலகத்தில் முரண்பட்ட தத்துவங்கள் எங்ஙனம் ஒன்றுபட்டு வாழ்தல்கூடும் என்பதை அவர் தெளிவுபடுத்துவாரா?' என்று நான் கேட்டேன்.

சூ தனது பேச்சை முடித்ததும் நிலவிய அமைதியை எனது பேச்சுக் குலைத்தது. பலர் என்னை உற்று நோக்கினர்: ஏனெனில், கம்யூனிஸ்ட்டுகளின் சமாதான மாநாடுகள், சமாதான ஒப்பந்தங்கள் இவற்றில் நம்பிக்கை இல்லை யென்பதை என் கேள்வி மறைமுகமாகக் காட்டியது. கம்யூனிஸக் கருத்துக் களில் மூழ்கிய மக்களிடையே நான் இருந்தேன். ஆனால், சூயென்லாய் என்னை நோக்கிச் சிரித்தார். எனது ஆங்கிலத்தை அவர் புரிந்து கொண்டதாகப் பட்டது. ஆனால், சீன மொழி யிலும், ருஷ்ய மொழியிலும் மொழிபெயர்ப்பு முடியுமட்டும் காத் திருந்தார். பின்னர்ப் பதிலளித்தார்: "நீங்கள் அழகான வினா ஒன்றை விடுத்தீர்கள். இன்று உலகில் சமாதானம் ஒரு முக்கிய நிலையை எய்தியுள்ளது. சீன மக்கள் சமாதானத்தை விரும்பு கிறவர்கள். பெற்ற சுதந்தரம் போனாலும், தேசத்தின் ஒழுக்கம் ஓம்புதலும், அதன் உரிமையை நிலைநாட்டுதலும், எல்லா நாட்டி னருடனும் நட்புடன் ஒத்துழைத்தலும், குலையாத உலகஅமைதி யைக் காத்தலும்,ஏகாதிபத்தியப் படையெடுப்பையும், போரையும் எதிர்த்தலுமே சீன மக்கள் குடியரசின் வெளிநாட்டுறவுக் கொள்கை யாகும். சீனக் குடியாட்சி நிறுவப்பட்ட அன்று தலைவர் மாசேதுங் உலகத்திற்கு உறுதியாகக் கூறினார்: 'நாட் டிற்கும், அதன் உரிமைக்கும் சமத்துவம் அளித்து, ஒருவருக் கொருவர் நலம் பேணி, மதிப்பளித்து வாழும் கொள்கையை ஆதரிக்கும் வெளிநாட்டாருடன் சீன மக்கள் அரசு அரசியல் உறவு ஏற்படுத்திக்கொள்ளும்' என்று. உலகிலுள்ள நாடுகள், சோஷலிஸ்ட்டானாலும், ஜனநாயகமானாலும், முதலாளித்துவ மானாலும் சமாதானமாக உடன்வாழ முடியும் என நாங்கள் நம்புகின்றோம். ஆனால், ஏகாதிபத்திய நாடுகள், அங்ஙனம் சமாதானமாக உடன் உறைய ஒப்பவில்லை. அவை சமாதானப் போட்டியைக் கண்டு நடுங்குகின்றன. அந் நாடுகள், நாட்டைப் பெருக்கும் படையெடுப்புக் கொள்கையையும், போர்க் கொள்கை யையும் கைவிட மறுக்கின்றன. நாம் அவற்றை எதிர்க்க வேண்டும். உலக மக்களின் நன்மைக்காகவே நாம் நிரந்தரச் சமாதானத்தை விரும்புகின்றோம். ஆகவே, அதனை அடைய முடியும்; ஏகாதிபத்தியத்தின் போர்க்கொள்கையை முறியடிக்க முடியும். அதாவது, உலக மக்கள் உலக சமாதானத்திற்காகப் போராடினால், எதிர்த்து வரும் போரை யொழித்து, நிரந்தர அமைதியை நிலைநிறுத்துவோம்."

சூயென்லாயின் பேச்சு அவரது செயலாளர் பூஷௌ சாங்கால் மொழிபெயர்க்கப்பட்டது. பூ, சூவிற்கு ஒரு பிரியாத நண்பராக இருந்தார். 1952 மேயில் பிரதமரை நான் சந்தித்த பொழுது பூ அவருடனேயே காணப்பட்டார். அவர் நன்ருக ஆங்கிலம் பேசுகின்ருர். ஹார்வேடு பல்கலைக் கழகத்தில் பொருளாதார மாணவனுகப் பயின்ருர். சீனு விடுதலை பெற்ற பின் தாயகம் திரும்பியவர்களில் அவர் ஒருவர். பின்னர் நாட்டின் சேவைக்காகக் கம்யூனிஸத்தைத் தழுவியவராகக்காணப்பட்டார். பழைய சீனுவில் சீரிய வாழ்க்கை நடத்தியவர். இந் நாளில் சீனக் கம்யூனிஸ வாழ்க்கையில் ஏற்படும் இன்னல்களை இனி தாக ஏற்றுக் கொண்டவர். இன்றைய ஆட்சியில் நாட்டுக்கு உழைத்தலால் ஆத்ம திருப்தி பெறுவதாக, பல ஆண் பெண் இளைஞர்கள் அடிக்கடி கூறுவார்கள். இவரும் அவ்வாறே என்னிடம் சொல்லி யிருக்கிருர். சூவின் குணங்களில் பல இவரிடமும் காணப்படுகின்றன. இவர் தனது தலைவனிடம் காட்டும் பற்றுதல் மிகவும் சிறப்புடைத்து.

சூ தந்த பதில் நான் எதிர்பார்த்ததுதான். வழக்கமாகக் கம்யூனிஸ்டுகள் கூறும், 'ஏகாதிபத்தியமும், சமாதானத்தை விரும்பும் கம்யூனிஸ்டு நாட்டு மக்களும் என்பதைக் குறித்து விளக்கமாகப் பேசுவார் என்று நான் நம்பினேன். சமாதானம் என்பதன் மூலக் கருத்து என்ன, பல்வேறு கொள்கைகளை யுடைய மக்கள் ஒத்து வாழ்தல் அக் கருத்துப்படி இயலுமா என்றறிய விரும்பினேன். அமைதியுடனிருந்து வாழுங் கலையை யறிந்த சீன மக்கள் பரம்பரையில் வந்த சூயென்லாய், கன்பூசியஸின் அறிவுரையும், புத்தரின் போதனையும் நிறைந்த பொன் மொழிகளை எடுத்து வழங்குவார் என எதிர்பார்த்தேன். ஆனுல், ஏமாந்தேன்! சுதந்தரம், அகிம்சை இவற்றிடையே தோன்ருத சமாதானம் வெற்றி பெறமுடியாது என்பது என் கருத்து. பிறரை வாழ விடுகின்ற சுதந்தரத்தைச் சமாதானம் ஒப்புக் கொள்கின்றது. ஆகவே, அது நிலைபெற்று நிற்கின்றது. படை பலத்தினுல் அது நிலை பெற்று நிற்கவில்லை. நேர்மை யற்ற ஆசைகளை அது எதிர்க்கின்றது. தங்கள் கருத்துக்களைப் பலாத்காரமாகத் திணிப்பதற்குப் பதிலாக, மக்கள் தங்களைத் தியாகம் செய்யத் தயாராக இருக்கவேண்டும். பல்லாயிரம் இந்தியர்களின் துயரத்தில் தோன்றிய இந்திய விடுதலை, இறுதியில் இந்தியர்க்கும் ஆங்கிலேயர்க்கு மிடையே நட்பை ஈந்தது. சுதந்

தரத்திற்காகவும், சமாதானத்திற்காகவும் நடத்தப்பட்ட இரு போராட்டங்கள், தேசங்களிடையே அமைதியை ஏற்படுத்த வில்லை.

சூவின் பதில் திருப்தியளிக்க வில்லை யாதலின், என்னுடைய ஐயத்தைப் போக்க வேறு வினக்களை விரைவில் சிந்திக்க வேண்டியதாயிற்று. இந் நிலையில் மொழிபெயர்ப்பாளர் வேருெரு நண்பரிடம் சென்றுவிட்டார். அந் நண்பர், 'ஆசிய நாடுகளி டையே நட்பை வளர்க்க, ஆசிய உறவு மாநாடு ஒன்றைச் சீன கூட்டவேண்டும்' என யோசனை கூறினர். அவருடைய யோசனை எனக்கு ஒரு கேள்வி கேட்க வாய்ப்பளித்தது. ஆசிய மக்களின் ஒற்றுமை அமைதிக்கு வழிகாட்டுமா? தம்மைப் பிற ருடைய ஆக்கிரமிப்பிலிருந்து காப்பாற்றிக் கொள்ளுமா ? அத் தகைய ஒற்றுமை, பிராந்திய சேனைபலம் எனத் திரித்துக் கூறப் பட்டு, அதனல் அமைதிக்குப் பங்கம் விளைப்பதாகும் எனக் கருதப்படுமோ?—இக் கேள்விகளைக் கேட்கும்பொழுது, அக் டோபர் முதல் நாள் அணிவகுப்பின் போது ஒலிக்கப்பட்ட வார்த்தைகள் என் மனக்கண் முன் நின்றன. பிரதமர் பதி லளித்தார்:

"சீன, இந்தியா, பர்மா, இந்தோனேஷ்யா, பாகிஸ்தான், ஜப்பான் முதலான ஆசிய நாடுகளின் மக்கள் ஒற்றுமையைப் பலப்படுத்திச் சமாதானத்திற்காகப் போராடினல், அமெரிக்கத் தாக்குதலையும், பிற ஏகாதிபத்திய நாடுகளின் ஆக்கிரமிப்பையும் உறுதியாக எதிர்த்து நிற்க முடியும் என நாங்கள் நம்புகிருேம். அத்தகைய ஒற்றுமைப் பலம், உலக மக்களிடையே ஒற்றுமை வளர உதவியாக இருக்குமேயன்றி ஊறு தேடுவதாக இருக்காது என்றும் கருதுகின்ருேம். உலக அமைதியை நிலைநாட்டவும் ஆதிக்கப் போரை ஒழிக்கவும், ஆசிய நாடுகள் ஒன்றுசேரல் வேண்டும் என்பதனல் உலக அமைதி குன்ருது. ஆசிய நாடு கள் ஒன்றுபடுதலால் உலக அமைதிக்குப் பங்கம் விளைகின்றது எனக் கூறுவதெல்லாம் அமெரிக்கர்களும், பிற ஏகாதிபத்திய நாடுகளுமே. அவர்கள்தாம் ஆசியாவில் படைத்தளங்கள் நிறுவி, ஆசிய அமைதியைக் குலைக்கின்றனர்; ஜப்பானுக்கு ஆயுத பலம் அளித்துப் போர் மூள வழி செய்கின்றனர்." கம்யூ னிஸ்டுக் கருத்துப்படி, ஒற்றுமையென்ருல், மேற்கு நாடுகளுக்கு எதிராக ஒன்றுபடுவது. சமாதானம் என்ருல், கம்யூனிஸ்டுச் சமா தானம். ஆசியாவின் புதிய நாடுகள் இன்னும் சுதந்தர அரசு

களாக அங்கீகரிக்கப்படவில்லை. ஆனால், அவற்றின் மக்களுக்கு வேண்டுகோள் விடுக்கப்படுகின்றது. இந்தோ-சீனா, தாய்லாந்து, மலேயா ஆகிய நாடுகள் ஒதுக்கப்பட்டுள்ளன.

பின்னர், பொருளாதார நிபுணர் எனக் கருதப்பட்ட ஒரு நண்பர் பேசும் முறை வந்தது. அவர் கேள்வி கேட்பதற்குப் பதில், சீனச் சமுதாயத்தின் பல வகைப் பிரிவுகள் பற்றியும், தொழிலாளர் தலைவரிடையே பல கட்சிகள் இருப்பது பற்றியும் ஒரு சொற்பொழிவு ஆற்றினார். மக்கள் ஜனநாயக ஆட்சியைச் சமதர்ம ஆட்சியாக மாற்ற இன்னும் எத்தனை காலம் ஆகும்? நிதி, வாணிபம், தொழில் நுணுக்க வேலையாட்கள், மக்கள் தொகை ஆகியவற்றின் பொருளாதாரத் திட்டம் என்ன? என்று இரு வினாக்களைக் கேட்டுவிட்டு அமர்ந்தார். சூ சொன்னார்: "சீனப் பொருளாதாரம் ஒரு கூட்டுப் பொருளாதாரம் அன்று. சீனாவின் பொருளாதார வளர்ச்சிப்படி தொழிற்சாலைகள் அரச உடைமையாக்கப்படும்; சமதர்மக் கூட்டு விவசாயம் ஏற்படுத்தப்படும். இதற்கு நாட்கள் பல செல்லும். சீன மக்களின் விருப்பப்படியும், யோசனைப்படியுமே, நாங்கள் உறுதியுடன் சோஷலிஸத்தைக் கடைப் பிடிப்போம்."

சூவின் இந்தப் பதில் எனக்கு இன்னொரு கேள்வி கேட்கும் வாய்ப்பை அளித்தது: 'சீனாவிலிருக்கும் ஏற்றத் தாழ்வான பொருளாதாரத்தால், அது வெளி நாடுகளின் உதவியையும், தொழில் நுணுக்கத்தையும் வரவேற்குமா?' சூ சொன்னார்: "எங்கள் நாட்டைத் தொழில் மயமாகச் செய்வதில் சில இடையூறுகள் உள. எங்களது வலிமையாலேயே அவ் விடையூறுகளைத் தாண்டிவிட முடியும் என்று நம்புகின்றோம். நட்புடைய நாடுகளிட மிருந்தும், எங்களது கொள்கையில் அனுதாபம் காட்டும் உலகத்தின் பிறநாடுகளிட மிருந்தும் கிடைக்கும் உதவியை வரவேற்கிறோம். தொழிற் சாதனங்கள், நுணுக்கங்கள்- இவற்றைப் பொறுத்தவரை, சோவியத் யூனியன், கிழக்கு ஜர்மனி, கிழக்கு ஐரோப்பா ஆகிய நாடுகளிடமிருந்து உதவி பெற்றிருக்கின்றோம். தென் கிழக்கு ஆசிய நாடுகளும் கழிந்த இரண்டு ஆண்டுகளில், கச்சாப் பொருள்கள் மாற்றித் தந்து உதவியளித்துள்ளன. சான்றாக, ரயில்வே நிர்வாகத்தைச் சோவியத்திட மிருந்தே கற்றுக் கொண்டோம்."

மக்கள் தொகையைப் பற்றிச் சூ குறிப்பிடுகையில், வழக்க மான மார்க்ஸியப் பதிலேயே தந்தார். எழுத்தாளராக இருந்து அச் சமயம் பொருளாதாரப் புலமையாளராக மாறிய குமோஜா 1949-இல் கூறியுள்ளார்: 'சீனுவில் உணவுப் பிரச்னை மக்கள் தொகை மிகுதியால் ஏற்பட்டதன்று; பிற நாட்டு முதலாளித்து வம், சீனுவின் தாழ்ந்த நிலையைப் பயன்படுத்திக் கொண்டு, புரிந்த பொருளாதாரச் சுரண்டலால் வந்த வினையாகும். இப் பொழுது சீன மக்கள் சுரண்டுபவர்களுக்கு எதிராகக் கிளம்பிவிட் டார்கள். மக்கள் தொகை பெருகியிருந்தாலும், வருங்காலத்தில் சீனுவில் உணவுப் பிரச்னை இருக்காது.' சூ அப்போது கூறினுர்: "எங்களுக்குப் பரந்த நிலமுண்டு; பயிரிடப்படாத பகுதியுமுண்டு. எங்களது ஆற்றுப் பள்ளத்தாக்கும், நீர்ப்பாசனத் திட்டங்களும் மிக்க உழைப்பை நாடுகின்றன. மக்கள்தொகைப் பிரச்னைக்கு இடமில்லை." குறைந்த செலவில் உழைப்பாளர்கள் இருப்பது, அபிவிருத்தியடையாத நாடுகளின் மூலதனமாகும். அந்த மூலதனத்தை உருவாக்குவதில் மார்க்ஸியத் தத்துவம் அங்குப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றதே யன்றி, மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்வதற்குப் பயன்படுத்தப் படவில்லை.

கொரியப் போர் பற்றியும், சமாதானப் பேச்சுவார்த்தை பற்றியும் கேட்க வாய்ப்பை எதிர்நோக்கி இருந்தேன். நேரம் போய்க்கொண்டிருந்தது. அதனைக் கேட்காது விட்டுவிட்டால் அந்தச் சந்திப்பின் முக்கியத்துவமே போய்விடும். அக் கருத்தை மனத்தில் கொண்டு, கேள்வியைத் திடீரெனக் கேட்காமல், பேச்சை வளைத்து விஷயத்திற்குக் கொண்டுவர எண்ணினேன். ஆகவே, எனது அடுத்த கேள்வி: ஜனநாயகம் என்ருல், ஒரு வனுக்கு எது நல்லது எனப்படுகின்றதோ, அதைப் பெற்றுக் கொள்ளும் உரிமை. பலருக்கு எது நல்லது எனப்படுகின்றதோ, அதனை ஒரு கட்சியோ அல்லது தனி மனிதனே தேர்ந்தெடுக்கும் உரிமை சர்வாதிகாரம். இவ்வாருக, ஜன நாயகச் சர்வாதிகாரம் என்ற பெயரில் சீனுவில் நடைபெற்று வருவது போல், இவ் விரு முரண்பட்ட கொள்கைளைக் கலத்தல் எங்ஙனம் முடியும்? அப் பெயரே ஒரு முரண்பட்ட பொருள் கொண்டதல்லவா?

எனது கேள்வி தத்துவ ரீதியானது. அதற்குச் சூ என்ன பதிலளிப்பார் என நான் யோசித்தேன். ஒரு பொதுவுடைமை நாட்டில் ஜனநாயகம் பற்றிப் பேசப்படுவதை நான் ஏற்றுக்

கொள்ளவில்லை யென்பதைக் காட்டவே நான் அவ்வாறு கேட்டேன். அவர் மறுமொழிகள் என் நினைவில் இல்லை. எனினும், நான் எடுத்த குறிப்புக்களிலிருந்து இயன்றவரை அவரது வார்த்தைகளைச் சுருக்கமாகக் கூறுகின்றேன். சூ சொன்னார்: "சீனாவில் அரச அதிகாரத்தின் இரு மருங்கிலும் ஜனநாயகமும் சர்வாதிகாரமும் இருக்கின்றன. உழவர்கள், தொழிலாளர்கள், சிறு முதலாளிகள், தேசிய முதலாளிகள் யாவரும் கம்யூனிஸ்ட்டுக் கட்சியின் கீழ் உள்ளனர். இவ் வகுப் பினர்க்கு ஜனநாயக உரிமைகள் உள. அவர்கட்குச் சுதந்தரம், பேச்சுச் சுதந்தரம், பத்திரிகைச் சுதந்தரம், சபை கூட்டும் சுதந்தரம், சமயக் கொள்கைச் சுதந்தரம் யாவும் உண்டு. தங்களது அரசாங்கத்தைத் தாங்களே தேர்ந்தெடுத்துக் கொள்வர். மக்கள் ஜனநாயக மென்பது இதுதான். வீழ்த்தப் பட்ட வகுப்பினரான நிலப் பிரபுக்கள், அதிகார மிக்க முதலாளி கள், கோமிண்டாங் ஆகியோர் மீது சீன மக்கள் சர்வாதிகார ஆதிக்கம் செலுத்துகின்றனர். இவ் வகுப்பினரின் தனி மனிதர் களுக்குச் சீர்திருந்தும் வாய்ப்புக்களும் அளிக்கப்படுகின்றன. ஆகவே, மக்களிடையே ஜனநாயகம் இருக்கின்றது; மற்றவர்கள் மீது சர்வாதிகாரம் நிலவுகின்றது. இவை இரண்டும் முரண் பட்டதல்ல. அவை ஒன்றுபட்டுச் செயலாற்றுகின்றன."

கம்யூனிஸ்டுக் கட்சியின் தலைமையின் கீழ் தேர்ந்தெடுக்கும் உரிமை இல்லையென வாதாட நான் விரும்பவில்லை. ஆனால், சூ பதிலளிக்கும்போது, கொரியா பற்றிய எனது வினாவைக் குறித்துச் சிந்தித்து, மிகப் பணிவாக அதை உருவாக்கினேன். நான் எழுதி அனுப்பியிருந்த வினாத்தாளில் கொரியா பற்றியே சரி பகுதிக் கேள்விகள் கேட்டிருந்தேன். பல மக்கள் முன்னால் பேச்சு இடையிடையே தடைப்படலாம். ஆகவே அக் கேள்வியை ஒரே ஒரு முறைதான் எழுப்ப முடியும். எனது கேள்வியாவது: கொரியாவில் சீனா எதை நிலைநிறுத்த எண்ணு கின்றது? 38-வது ரேகைக்கு ஐக்கிய நாடுகள் படை திரும்பி னால்தான் அங்கு அமைதி ஏற்படுமா? அப்படிச் செய்தால் கொரியா முழுவதையும் அமைதியாக - ஒன்றாக இணைக்கப்படும் வரையிலும், 38-வது ரேகை தென் கொரியாவிற்கும் வட கொரியாவிற்கும் எல்லையாக இருப்பதைச் சீனா உறுதியுடன் ஒத்துக் கொள்ளுமா? கொரிய மக்களுக்கு விரைவில் ஆறுதல்

அளிப்பதற்கு, கொரியப் பிரச்னையைக் கிழக்கு ஆசியப் பிரச்சினை யிலிருந்து வேறுபடுத்திப் பரிகாரம் காண முடியாதா ?

இது நடந்தது 1951 அக்டோபரில். சமாதானப் பேச்சு வார்த்தைகள் ஒரு முடிவு காணுமல் இன்னும் நடந்துகொண் டிருக்கின்றன. சூயென்லாய் மனப்பூர்வமாய் அக் கேள்விக்கு விடையளித்திருந்தால், அதற்கு ஒரு முக்கியத்துவம் உண்டு. வழக்கம் போல் அமெரிக்க ஆதிக்கம் எனக் குற்றம் சொல்லி, சீனுவின் சமாதானக் கொள்கையையும் காட்டிவிட்டுப் பின் இவ் வாறு முடித்தார்: "கொரியச் சமாதானப் பேச்சு வார்த்தைகள் நேர்மையாக விரைவில் முடிவடையும் எனச் சீன மக்கள் நம்பு கின்றனர். போர் நிறுத்தலும், அமைதி நிறுவலுமே, கொரியப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு அடிப்படையானவை. இதை முடித்த பின்னரே கொரியாவில் சமாதானத்தை ஏற்படுத்த முடியும்; பின்னர், கிழக்கு ஆசியப் பிரச்னைகளையும் தீர்க்க முடியும். ஆனுல், அமெரிக்க ஏகாதிபத்தியம் இம் முறையைக் கையாள விரும்பவில்லை. சீன மக்கள், உலக மக்கள் ஆகியோரது உலை யாத - ஒன்று பட்ட முயற்சியால் அங்ஙனம் செயலாற்றலாம்."

அப்போது இரவு மணி இரண்டு. எனவே, எனது வினுக்களை நிறுத்துவது என எண்ணினேன். சூ மற்றவர்களை நோக்கிக் கேள்விகள் ஏதேனும் உண்டா எனக் கேட்டார். அது வரையிலும் அமைதியாக இருந்த இந்தோனேஷ்யப் பிரதிநிதி, பத்து நிமிடங்கள் தனது மொழியில் பேசினுர். அவர் நல்ல சொற்பொழிவாளர். அம் மொழியில் அழுத்தமும் கம்பீரமும் இருந்தன. அப் பேச்சு மொழிபெயர்க்கப்பட்டதும் ஏதோ நடந்தது போன்று நாங்கள் உணர்ந்தோம். அமைதி நிலவியது. இந்தோனேஷ்யர் கேட்டார்: "தென்கிழக்கு ஆசியாவின் பல நாடுகளில் வசிக்கும் சீன மக்களிடம் சீனு கொண்டுள்ள கொள்கை யாது? அவர்கள் வாழும் நாட்டின் தேசியத்தை ஏற்றுக் கொள்வார்களா, அன்றிச் சீன ஏகாதி பத்தியத்தின் ஆதிக்கத்தை ஆசியாவில் பெருக்குவதற்கு உதவி யாக இருப்பார்களா ?"

ஆசியாவிலும் கிழக்கு ஐரோப்பாவிலும் உண்மையில் நடைபெறுவதெல்லாம் ஒன்றுபட்ட ஏகாதிபத்தியமும் கம்யூனிஸ முமே. அக் கேள்வி கடினமாகவும், குத்தலாகவும் இருந்தது. சூவும் சற்றுக் கோபமாகக் காணப்பட்டார். ஆனுல், விருந்தினர்

முன்னுல் அவர் நடந்து கொண்டதை மறக்க முடியாது. திடீரென எழுந்த கோபத்தில் குரலை உயர்த்திக் கைகளையும் ஆட்டிப் பேசினுர். விரைவில் தணிந்து விட்டார். அந்த உணர்ச்சியில் நான் முன்பு எழுதியனுப்பிய ஒரு கேள்விக்கு இரு விடைகள் வெளிப்பட்டன. நிருபர் கூட்ட அறிக்கைகள் பத்திரமாகச் சேர்க்கப்படும் எனச் சூ கூறியிருந்தார். அதற்கு முன் அவர் அக் குறிப்புகளின் நகலை அனுப்பி, மொழிபெயர்த்த லில் ஏற்பட்ட பிழைகளைத் திருத்த வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார். அவ் விரு குறிப்புகளிலு முள்ள வேறுபாடுகள் சீனக் கொள்கையை விளக்கின. எனது குறிப்பு :

தேசிய இனப் பிரச்சினை அண்மையில் தோன்றியது. தென் கிழக்கு ஆசியாவிலுள்ள சில நாடுகள் தங்கள் தேசிய இனச் சட்டங்களை ஏற்படுத்திக் கொண்டன. இப் பிரச்சினை பற்றி ஆராய்வதற்கான பேச்சுவார்த்தைகளில் கலந்து கொள்ள விரும்புகிறோம். விடுதலைக்காகப் போராடும் மக்கள் எளிதில் வெளி நாட்டு வலையில் விழுந்து விடுகின்றனர். ஆனுல், நாம் உண்மையை நம்ப வேண்டும். சீனுவில் மூன்று வாரங்கள் இருந்து இங்குள்ள ஏற்றத் தாழ்வுகளைக் கண்டிருக்கிறீர்கள். நாம் பார்த்தவற்றை அறிந்திருக்கிறோம். இந்தோனேஷ்யப் போராட்டத்திற்கு அனுதாபம் காட்டுகின்றோம். அமெரிக்க ஏகாதிபத்தியத்திற்கு எதிராக அவர்கள் நடத்தும் போராட் டத்தை ஆதரிக்கின்றோம். ஜப்பானியத் தாக்குதலால் இந்தோ னேஷ்யர் இன்னலுக் காளாயினர். சீனர்களும் அதே தாக்குத லால் துயருற்றனர். வெளி நாட்டு ஏகாதிபத்தியத்தின் கொடுமையால் வாடிய தேசத்தினர் நாம். ஆகவே, நாம் ஒருவரை ஒருவர் அறிந்திருத்தல் வேண்டும். நீங்கள் சீன மக்களைத் தெரிந்திருக்க வேண்டும். கொரியாவையும் வியட் நாமையும் தாக்கிய நமது முன்னோர்களை நாம் உயர்வாகக் கருத வேண்டாம். அதை நாம் மறுக்க வேண்டும். அத்தகைய தவறுகளை நாம் செய்யாமலிருக்க உறுதி கொள்ள வேண்டும். சீன மக்கள் ஏகாதிபத்தியவாதிகளாக மாட்டார்கள். பிறரைத் தாக்குதலை நாம் எதிர்க்கின்றோம். ஆகவே, பிறரைத் தாக்க மாட்டோம். ஏகாதிபத்தியவாதிகள் அவர்களது ஆதிக்கத்தை எளிதாக்க நமக்கு எதிரான வதந்திகளைக் கிளப்பி நமது ஒற்றுமையைக் குலைக்கின்றனர்.

அவர்களது அதிகாரபூர்வமான அறிக்கையாவது:

ஏகாதிபத்தியத் தாக்குதலால் அல்லற்பட்ட-படுகின்ற-நாம், ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ளவேண்டும். சீன மக்கள் எவ்வளவு ஆழ்ந்த அனுதாபம் கொண்டவர்கள், நெடுங்காலமாகப் பல இன்னலுக் காளானவர்கள், உலக மக்களின் - குறிப்பாக - ஆசிய மக்களின் துயர் துடைக்க முன்வந்துள்ளனர் என்பதை இந்தோனேஷியப் பிரதிநிதியான மகம்மது தாப்ரானி உணர வேண்டும். கொரியா, வியட்நாம் போன்ற ஆசிய சகோதர நாடுகளை நமது முன்னோர்கள் தாக்கினார்கள் என்பதை நாம் மறைக்கவில்லை. நமது முன்னோர்கள் செய்த தவறு அது; அவர்கள் இழைத்த கொடுமை அது. அவற்றை யெல்லாம் நாம் இப்போது ஒதுக்கிவிட்டோம்; ஏகாதிபத்தியவாதிகளை நாம் துரத்திவிட்டோம்; பிரபுக்கள் ஆட்சியை ஒழித்துவிட்டோம். இன்றையப் புதிய மக்கள் சீனா அத்தகைய செயல்களைப் புரியாது. இந்தோனேஷ்ய நண்பர்களும், இங்கே குழுமியுள்ள மற்றவர்களும் விருந்தினர்களை வரவேற்பதில் சீன மக்கள், எத்தனை ஆர்வம் இந்தப் பீகிங்கில் காட்டினார்கள், நீங்கள் இனிச் செல்லுமிடங்களில் காட்டுவார்கள் என்பதை உணர்வீர்கள். புதிய சீனா ஆதிக்க வெறியை எதிர்க்கின்றது. பிறரைத் தாக்கும் நோக்கமும் அதற்கில்லை. கடைசியாக, ஏகாதிபத்தியவாதிகள் சீனா பிற நாடுகளைத் தாக்கத் தொடங்கும் என்ற வதந்திகளைப் பரப்புகின்றனர் என்பதை நினைவூட்டுகின்றேன். அவர்களின் நோக்கம் நம்மிடையேயுள்ள ஒற்றுமையைக் குலைப்பதுதான். நீங்கள் அவர்களை நம்ப முடியுமா? அவர்களது தாக்குதலை எளிதாக்க, அவர்கள் நம்மிடையே வேற்றுமையையும், ஐயங்களையும் தூண்டிவிடுகின்றனர். சமாதானத்தை விரும்பும் மக்களாகிய நாம் ஒன்றுபட்டு, விழிப்போடிருப்போமாக!

மறு நாள் நான் எனது குறிப்புக்களைத் திருத்தத்திற்காக அனுப்பினேன். மூன்று தினங்கள் கழித்து, அங்கீகரிக்கப்பட்ட அறிக்கையுடன் எனது குறிப்புக்களும் வந்தன. எனது குறிப்புக்களில் பல இடங்களில் சிவப்புக் கோடுகள் கிழிக்கப்பட்டிருந்தன. அதிகாரபூர்வமான அறிக்கையிலிருந்து நான் எதையும் பயன்படுத்த வேண்டும் எனக் கூறப்பட்டது. அக்

குறிப்புக்கள் திரும்பக் கிடைக்குமுன் எனக்கு முன்ன யாரேனும் அந்த அறிக்கையைப் பயன்படுத்துவார்களோ எனக் கலவரமடைந்தேன். பாப்லோ நெருடாவும், இலியா இரன் பர்க்கும் சிறப்பு விருந்தினர்களாக வந்திருந்தார்கள். இரன்பர்க் பிரதமருக்கு அருகில் தனி இருக்கையில் இருந்தார். வந்திருந்த பிற நிருபர்கள் எல்லாரும் கம்யூனிஸ்டுகளே.

எனது குறிப்புக்களில் மாற்றப்பட்டவை யெல்லாம் வெறும் வார்த்தைகள்தாம். பிரதமர் எனது வினக்களைப் பல நாட்களாகத் தன்னுடன் வைத்திருந்தார். அவருடைய மேஜை மேல் அவற்றிற்கான விடைகள் தயாராக இருப்பதைப் பார்த்தேன். எனது வினக்களிற் பல கேட்கப்படாம லிருந்தன. சிலவற்றிற்கு அவர் பதில் கூறவில்லை. சான்ருக, 38-வது ரேகை எல்லையை நிறுவச் சீனு உறுதியளிக்குமா என்ற கேள்விக்கு விடையளிக்கப் படவில்லை. இந்தோனேஷ்யப் பிரதிநிதி கேட்ட கேள்வி திடீரென, நேரடியாகக் கேட்கப்பட்டது. அது விரிந்த கருத்துக் களைக் கொண்டது. தென் கிழக்கு ஆசிய நாடுகள் சுதந்தரத் தையும் நிலையையும் பாதிக்கும் முக்கியமான செயல்களில் அங்கு வாழும் சீனர்கள் ஈடுபட் டிருக்கின்றனர். திடீர்க் கோபத்தில் சூ அப் பழிச் சொல்லை மறுத்துவிட்டு, அமைதியுடன் அப் பிரச்னைக்குப் பரிகாரம் காணச் சீனு விரும்புகிறது என்ருர். அதை நன்ருகச் சிந்தித்த பின்னர், சீனு செயல்படுத்த விரும் பாத ஒன்றை அவர் தவருகக் குறிப்பிட்டார் என்று விளங்கிற்று. இந்தோனேஷ்யா இன்னும் விடுதலை பெறவில்லை யென்றும், அமெரிக்க ஏகாதிபத்தியத்திட மிருந்து அது விடுதலை பெற வேண்டுமென்றும், சீனுவில் கண்டவற்றை அவர் நன்ருகப் புரிந்து கொள்ளவில்லை யென்றும் அவர் இந்தோனேஷ்யர்க்கு இடித்துக் காட்டினுர். ஆதிக்க எதிர்ப்பைக் காட்டியது உணர்ச்சி கரமாகவும் அழுத்தமாகவும் இருந்தது. அதிகாரபூர்வமான அறிக்கையில் அவற்றை இதமாகக் கூற வேண்டி யிருந்தது.

ஐந்து மணி நேர விவாதம் சிறிது பயன் விளைத்தது. நான் சூவின் அழகையும், திறமையையும், தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளும் ஆற்றலையும் கண்டேன். நான் நேருவின் கோபக் கனலைப் பார்த்திருக்கின்றேன். அக் கோபத்தில் அவர் தன் வயமிழந்து விடுவார்; பின்னர்ச் சிரிப்புடன் மன்னிப்புக் கோருவார். சூவின் சினம் யாரும் அறியா வண்ணம் அவரது நட்பு அரவணைப்பில் மாய்ந்துவிடுகின்றது. அவரது கோபங்

கண்டு வருந்தியவர்கள் சிறிது நேரத்தில் தங்கள் தவற்றை உணர்ந்து விடுகின்றனர்.

அதன் பிறகு பல வரவேற்புகளிலும் விருந்துகளிலும் நான் அவரைச் சந்தித்தேன். ஆனால், அவரைக் கேள்வி கேட்கும் வாய்ப்புக் கிட்டவில்லை. இரண்டாம் முறை சென்ற போது, இந்தோனேஷியா பற்றி அவர் அறிவித்த கருத்துக்கள் மீது சில வினாக்களை எழுதி, இணைப்பு அலுவலகம் மூலம் அவருக்கு அனுப்பினேன். சில நாட்களுக்குப் பின், அவர் என்னிடம் நேராகப் பதிலளிப்பார் அல்லது எழுதியனுப்புவார் என்று கூறப்பட்டது. நான் சீனாவிலிருந்து திரும்பும் வரை எதுவும் நடக்கவில்லை!

இந்தியக் கலைக் கண்காட்சியைத் திறந்து வைக்கும்பொழுது நான் அவரைக் கவனித்தேன். ஓவியங்களைப் பற்றித் தம் கருத்தை வெளியிட்டுக் கொண்டு அவர் பொருட்களைப் பார்த்து வரும்போது நான் அவரைப் பின் தொடர்ந்தேன். அவர் பல கேள்விகளைக் கேட்டார். இந்தியக் காட்சியில் சீனச் சாயல் இருப்பதைக் குறிப்பிட்டார். தமது கருத்துக்களைக் கடைசியில் அதற்கென வைக்கப்பட்டிருந்த புத்தகத்தில் எழுதினார். தன்னை விட குவோமோஜோவால் அதைப் பற்றிக் கூறமுடியும் என்று தெரிவித்தார். தங்களது கம்யூனிஸ உணர்ச்சி முறுக்கை மறந்து நகைச்சுவையில் சீனத் தலைவர்கள் ஈடுபட முடியும் என்பதை அப்போதுதான் நான் கண்டேன்!

## 5. சி பெய்-ஷி

பீகிங்கிற்கு நான் முதல் தடவை சென்றது இன்னும் என் மனத்தை விட்டு அகலவில்லை. ஏனெனில், அங்கு நடந்த வரவேற்பின்போது நீண்ட நேரம் பிரதமருடன் கழித்ததுதான். இரண்டாம் முறை சென்றபோது சிபெய்ஷியுடன் அவரது கலை இல்லத்தில் கழித்த காலையை நான் மறக்க முடியாது. சீன 'விடுதலை'க்கு முன்னர் அவர் உலகத்தோரால் பல ஆண்டுகள் சிறப்பிக்கப்பட்ட ஓவியர். அவர் புரட்சியின்போது மதிப்பிழந்து விட்டார். இலியா இரன்பர்க் சிபார்சு செய்ததன் பேரில் மீண்டும் புகழப்பட்டார். சூவுடன் பேசுவதற்குப் பல நாட்களுக்கு முன்னரே ஏற்பாடுகள் செய்யவேண்டி யிருந்தது. சீன மொழிப் புலவரான பிரஞ்சுக்காரருடனும், அவரது மனைவியுடனும் எதிர் பாராவண்ணம் சிபெய்ஷியைக் காணச் சென்றேன். சீனு சென்று பின் எனது அனுமதிப் பத்திரங்கட்காகக் காத்திருந்த நாட்களில், அற்புதப் பொருள் விற்போர் கொணர்ந்த கலைக் களஞ்சியத்தைப் பார்த்து மகிழ்ந்திருந்தேன். அவற்றில் சிபெய்ஷியின் ஓவியங்கள் பல இருந்தன. ஒரு நாள் மாலை எனது பிரஞ்சு நண்பரிடத்தில் அவ் வோவியங்களைப் பார்த்து நான் களித்ததைக் கூறினேன். அவர் ஓரிரு நாட்களில் ஓவிய நிலையத்திற்குச் செல்வதாகக் கூறினர். என்னையும் உடனழைத்துச் செல்லுமாறு அவரைக் கெஞ்சினேன். ஒரு நாள் காலை பீகிங்கின் தென் மேற்காகப் பழைய நாகரிகப் பகுதியினின்றும் வெகு தூரம் தள்ளி, ஒரு வண்டியில் சென்றேன். அப் பிரஞ்சுத் தம்பதிகள் மோட்டார் சைக்கிளில் என்னோடு வந்தார்கள்.

அது ஒரு வசந்த காலக் காலை. தியன்அன்மான் வாயிலைத் தாண்டி அகன்ற சாலை வழியே செல்கையில், மலர் மணம் தென்றலில் கலந்து வீசிற்று. பழைய பீகிங்கின் மூச்சு தனது இளஞ் சூட்டினல் என்னைத் தழுவிற்று. பல குறுகலான வழிகளைக் கடந்து சென்றபின் சிபெய்ஷியின் வீட்டைஅடைந்தோம். வெளியிலிருந்து பார்ப்பதற்கு வீடு சிறியதாகவும், இடிந்தும் காணப்பட்டது. வெளியிலிருந்து அதைப் பற்றி அதிகமாக ஒன்றும் கூற முடியாது. அலி ஒருவன் கதவைத் திறந்தான். அவனது பெண் குரல் புதிய சீனவில் வியப்பாக இருந்தது. நாங்கள் நுழைந்ததும் கதவு மூடப்பட்டது. நான் இருப்பதுதான் உண்மையான சீனு என உணர்ந்தேன். சீனுவின் கவர்ச்சிகர

மான சுவரொட்டிகளும், உரத்த குரல்களும் அவ் வீட்டை மாற்றி யமைக்க முடியவில்லை. இங்கே வறுமையும், தேவையும், பிணி யும் நிலவி யுள்ளன !

முற்றத்தைத் தாண்டி உள்ளே சென்ருல் ஒரே அறை. அது தங்கும் அறை, ஓவிய நிலையம் இரண்டும் கலந்த ஒன்று. பார்வை யாளர்கள் ஏன் அதிகாரபூர்வமாய் இங்கு அழைத்து வரப்படுவ தில்லை என்று தெரிந்து கொண்டேன். கம்யூனிஸம் தனது வதனத்தின் ஒரு பக்கத்தைத்தான் காட்டுகின்றது. ஏனெனில், கம்யூனிஸப் பற்று உள்ளவரை மறு பக்கத்தின் அழகின்மை மன முடையச் செய்யும். கம்யூனிஸத்திலும் முதலாளித்துவத்திலும், மனிதத் துயரிலிருந்துதான் அழகு படைக்கப் படுகின்றது. இந்த அழுக்குப் படிந்த கலை மன்றத்தில் புதிய சீனுவின் ஒப் பற்ற ஓவியங்கள் காலத்தின் தூசியுடன் சுருட்டப்பட்டுக் கிடக் கின்றன. உடைந்த நாற்காலிகள் நான்கும், தேயிலைப் பாண் டமும் அறையின் மூலையை அலங்கரித்தன. மற்ருெரு பக்கத் தில் பச்சைக் கம்பளியால் மூடப்பட்ட ஒரு நீண்ட உயர்ந்த மேஜை கிடந்தது. இதுதான் அந்த ஓவியரின் படம் வரை யும் சட்டம்.

நிறம் மங்கிய கருஞ்சிவப்புச் சீன உடை யணிந்து ஒரு பழைய நாற்காலியில் அவர் உட்கார்ந்திருந்தார். நாங்கள் அவரைச் சுற்றி உட்கார்ந்தோம். அவருக்குத் தொண்ணூற் றிரண்டு வயதாகின்றது. ஆனுல், முதுமை படைப்புத் திறனை அழித்து விடவில்லை. தனது கன்பூசியஸ் போன்ற முகத்துட னும், கூர்ந்து நோக்கும் கண்களுடனும் அசையாமல் இருந்தார். அவருடைய தாடி ஒன்றுதான் அவரோடு வாழும் பொருள். அவருடைய நீண்ட - மெலிந்த கரங்கள் நாற்காலியின் இரு கைகள் மீது இருந்தன. அவரை எழுப்பி அவருடன் பேசுவது கடினமாக இருந்தது. அவர் ஹுனை மொழியில் பேசினுர். எனது பிரஞ்சு நண்பர் ஒரு சீனக் கலையாசிரியரையும் அழைத்து வந்திருந்தார். அவர் மஞ்சு அரச பரம்பரையைச் சார்ந்தவர். அவருக்கு ஆங்கிலம் தெரியாது. ஆகவே, எனக்கு இரு மொழிபெயர்ப்பாளர்கள் பேச்சும் கஷ்டமாகவே இருந் தது.

சிபெய்ஷியை முதன் முறை சீனு சென்ற போது ஒரு விருந்தில் முதலாவதாகச் சந்தித்தேன். நீண்ட கரும்பட்டுஉடை

உடுத்து உயர்ந்த மிருதுவான தொப்பி அணிந்து, தனது வீட்டுக் காரியஸ்தர் மீது சாய்ந்து கொண்டு மெதுவாகப் படியேறி வந்தார். அந்த முதுமைப் பருவத்திலும் அவ் வீட்டுச் செயலாளரை மணந்து கொள்ள விரும்பினுர். மற்ருெரு கையில் நீண்ட சிவப்பு அரக்குக் கம்பு வைத்திருந்தார். நீல உடையணிந்த ஆண் பெண்களிடையே அவர் பொருத்தமற்றவராகத் தோன்றினுர். பழங்காலக் கன்பூசியப் பரம்பரையிலிருந்து வருவது போல், மக்களுக்கு முதியோர் பக்தியையும் பழங்காலத் தொழுகையையும் எடுத்துக் காட்டும் முனிவர் போல் அவர் தோன்றினுர். மக்களின் ஆத்மாவிற்கான போராட்டத்தில் தோற்றவர் போல் இன்று வாழ்கின்ருர். ஓய்வைத் தவிர வேறு எதையும் அவர் விரும்பவில்லை போலும்!

சிபெய்ஷி புதிய சீனுவின் தலை சிறந்த ஓவியர். ஆனுல், அவர் பழங்காலச் சீன ஓவியம் பயின்றவர். அதை இப்பொழுது கலையாக யாரும் எண்ணுவதில்லை. கலை கலைக்காகவே என்பதைக் கம்யூனிஸம் ஒப்புக் கொள்வதில்லை. ஷி மலர்களையும், பறவைகளையும், தண்டுகளையும்தாம் படமாகத் தீட்டுவார். அரசியல் சித்திரங்களை வரைய மாட்டார். புரட்சியுடன் மறைந்து போன அந்த ஓவியரை இரன்பர்க் மீண்டும் உயர்த்த எண்ணினுலும், அவ் வுயர்வினுல் அவருக்குச் சிறப்புக் கிடைத்ததே யன்றிச் சுதந்தரம் கிடைக்கவில்லை. அவருடைய மென்மையான சித்திரங்களை யாரும் விரும்பவில்லை. ஆகவே, அவர் ஏராளமான சித்திரங்கள் வரைந்து, சுருட்டி மூலையில் எறிந்து வந்தார். விருந்தினர்க்குப் பரிசாக அளிக்க, மக்கள் அரசாங்கம் மிகுந்த செலவுடன் பல படப் புத்தகங்களை வெளியிட்டது. அவற்றின் மூலப் படங்களைக் குறைந்த விலைக்குக் கலைப் பொருட் கடைகளில் வாங்கலாம்.

நான் எனக்காகச் ஷியிடம் ஒரு படம் எழுதித்தருமாறு கேட்டேன். ஏனெனில், அவர் எழுதும்போது பார்க்க விரும்பினேன். கேட்பதும் சிரமமாகவே இருந்தது. இரு மொழி பெயர்ப்புகளும் உரையாடலைக் கஷ்டமாக்கி விட்டன. நாங்கள் அமைதியுடன் இருக்கும்போது அம் முதியவரின் துணைவன் எங்களுக்கு வழக்கம் போல் தேயிலை கொடுத்தான். எங்களது கோப்பைகளில் வெந்நீரும், கலைஞரது கோப்பையில் தேயிலையும் இருக்கக் கண்டு நான் ஆச்சரியமுற்றேன். விருந்தினர்களுக்குத் தேயிலை வழங்கும் சக்தி அவருக்கு இல்லை யென்பதை நான்

உணர்ந்தேன். நான் எனது வேண்டுகோளை விடுத்தேன். நான் அவர் வரைதலைக் காண விரும்புவதாக அறிந்ததும், சிபெய்ஷி எழுதுவதற்கு ஆர்வமும் ஊக்கமும் கொண்டு எழுந்தார். இந்த மாற்றம் திடீரென எழுந்தது.

சட்டையின் கையைச் சுருட்டினார். "நான் உங்களுக்காக வரைந்து தருகிறேன். ஒரு சதுர அடிக்கு நாற்பத்து நான்காயிரம் யுவான்கள் ஆகும்" என்றார். இது ஏறக்குறைய இரண்டு டாலர்கள். நான் ஒப்புக் கொண்டேன்.

"என்ன படம் வேண்டும்? மலர்களா, பறவைகளா, கடல் நண்டுகளா?"

"நீங்கள் விரும்புவதை வரைந்து விடுங்கள்" என்றேன் நான். நான் அவரைப் பற்றி எழுதி, எனது நாட்டிலுள்ள மக்கள் அவரது கலையை அறிந்து கொள்ளுமாறு செய்யப் போவதாகக் கூறினேன். இந்தியக் கலாசாரக் குழு ஒரு நல்லெண்ணக் குழுவாகச் சீனாவில் இருந்தது. இரு நாடுகளின் பழைய நட்பின் அறிகுறியாகவும், கலைத் தொடர்பு ஏற்படவும் ஏதாவது செய்ய விரும்பினேன். என்னுடைய வார்த்தைகளின் பொருளை அவர் தெரிந்து கொள்ளாது ஒரே கேள்வியைத் திரும்பத் திரும்பக் கேட்டுக்கொண் டிருந்தார். அவர் விருப்பப்படி ஏதேனும் எழுதட்டும் என நான் ஒன்றும் தனியாக வரையும்படி சொல்லவில்லை. நான் சொன்னேன்: "மலர்ப் படங்கள் பலவற்றை நான் பார்த்திருப்பதால், ஒரு வயல் காட்சியை எழுதுங்கள்." அவர் என்னை உற்றுப் பார்த்தார். மொழிபெயர்ப்பாளரிடம் கையை அசைத்து விட்டு, "அப்படியானால் அதன் விலை இரு மடங்காகும்" என்றார்.

அவரின் பணத் தேவையை நான் அறிந்துகொண்டேன். மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டேன். கடைகளில் அவரது படங்களை மூன்று சதுர அடிக்கு நாற்பதினாயிரம் யுவான்களுக்கு வாங்கமுடியும். ஆனால், நான் அவர் வண்ணம் தீட்டுவதைப் பார்க்க விரும்பினேன். படத்தின் அவசியத்திற்காக மட்டுமன்று. அவர் சட்டைக் கைகளை மடக்கிக் கொண்டார். அவரது பெண் தோழர் மெல்லிய காகிதத்தைப் பெட்டியிலிருந்து எடுத்து வந்தார். பின் அவர் வர்ணம் அரைக்கத் தொடங்கினார். ஒரு கையில் எழுதுகோலுடனும், மற்றொரு கையில் காகிதத்தின் தரத்தைப் பார்க்க அதை விரித்துப் பிடித்துக் கொண்டும் மேஜை

முன்னால் சில நிமிடங்கள் நின்றார். திடீரென, கையை ஓர் இடத்தில் வைத்து வரையத் தொடங்கினார். என்னை நோக்கிக் கூறினார்: "நான் எளிமையாக ஒரு படம் வரையப்போகின்றேன். எதில் எளிமை இருக்கின்றதோ அதில் எழிலு மிருக்கும்." நாற்பது நிமிடங்கள் வரைந்தார். இடையிடையே கருப்புக் குழம்பை நீரில் கலந்து பல தரக் கருப்பு நிறம் செய்து கொண்டார்.

கடைசியாக என் முன் ஒரு படம் வந்தது. வசந்த காலத்தில் தூரத்தில் வயல் வெளியில் இரு பசுக்கள் நின்றன. சீனர்களுக்குக் கருப்பும் வெண்மையும் கலந்த படங்களிலேயே விருப்பம் மிகுதி. அந்தப் படத்தின் எளிமை எனக்குச் சற்று ஏமாற்றமளித்தது. அவர் எதுவும் சொல்லாமல் சட்டைக் கைகளை நெகிழ விட்டுக் கொண்டு தனது நாற்காலியில் உட்கார்ந்தார். அவரது தோழர் அப் படத்தைக் கழற்றி,வர்ணம் உலரத் தொங்க விட்டார். எனது அறியாமையால் நான் ஊமையானேன். அவரால் எழுதப்பட்ட இதைவிட அழகான படம் கடைகளில் குறைந்த விலைக்கு வாங்க முடியுமென எண்ணினேன். ஆனால், அவரைச் சந்தித்ததை ஒரு கதையாக்கக் கருதினேன். ஆகவே, பேசத் தொடங்கினோம். சிறந்த ஓவியரின் ஆத்மாவையும் சீனாவின் பழங்கால மெய்யுணர்வையும் அப்போதுதான் நான் கண்டேன்.

'ஒரு பசு படுத்துக் கொண்டும், மற்றொன்று தன் முதுகைக் காட்டிக் கொண்டும் இருக்கும் படம் ஏன் வரைந்தீர்?' என அவரைக் கேட்டேன். மேலும் தொடர்ந்து, 'இரு பசுக்களும் இந்தியா, சீனா -இவற்றின் இரு நாகரிகங்களைக் காட்டுகின்றனவா? அவற்றிற்கு ஏதேனும் பொருளுண்டா ?' என வினவினேன்.

அப் பெரியவர் தலையை ஆட்டினார். அவர் சொன்னார்: "அப் படத்திற்குப் பொருள் ஒன்றுமில்லை. நான் அரசியல்வாதியல்லன். அவை இரண்டு பசுக்கள். அவ்வளவே!"

நான் கூறினேன்: " ஏன் இரண்டு பசுக்கள்? வேறு ஒன்று மில்லையா வரைவதற்கு?"

சிபெய்ஷி பதிலளித்தார்: "எனக்கு இரு பசுக்கள் வரைய வேண்டு மெனத் தோன்றிற்று." அவருடைய முகத்தில் ஒளி தோன்றியது. அவர் சொன்னார்: "அப் பசுக்கள் எனது குழந்தைப் பருவத்தை நினைவூட்டுகின்றன. நான் பன்னிரண்டு வயது வரை மாடு மேய்ப்பவனாக இருந்தது உங்களுக்குத் தெரியாதா ?

எனது படங்களில் நான் பசுக்கள் வரைந்ததில்லை. ஆனால், இன்று எனது குழந்தைப் பருவத்தை எண்ணிக் கொண்டேன்."

"உங்களது குழந்தைப் பருவம் மகிழ்ச்சிகரமாக இருந்ததா?"

"நான் ஓர் ஏழை உழவர் குடும்பத்தில் பிறந்தேன். ஏழை உழவன் இன்பத்தை எண்ணுவதில்லை!"

"படம் வரைதற்கு எங்கே கற்றீர்கள்? ஏன் படம் வரைய விரும்புகின்றீர்கள்?"

"நான் பன்னிரண்டு வயதாக இருக்கும்பொழுது என் வாழ்க்கையில் ஒரு சம்பவம் நடந்தது. அது என் எதிர்காலத்தை மாற்றியது. ஒரு நாள் மாலை பசுக்களை ஓட்டிக்கொண்டு வீடு வந்தேன். எனது பாட்டனார் ஒரு பசு குறைவாக இருப்பதைக் கண்டார். அப் பசு எங்கோ அலைந்து கொண்டு போயிற்று என்பதை நான் அறியவில்லை. எனது பாட்டனார் என்னை அடித்துத் திட்டினார். அன்று மாலை வீட்டைவிட்டு ஓடிவந்து விட்டேன். பக்கத்து ஊரில் ஒரு தச்சனிடம் வேலை கற்றேன்."

எனக்கு அப் படத்திலுள்ள பசுக்கள் எதைக் குறிக்கின்றன என்று விளங்கிற்று. அப் பசுதான் அவரிடமிருந்து ஓடிச் சென்றது. அப் பசுவே அவரைத் துன்பத்திற்கு ஆளாக்கியது. படைப்புக் கலையின் தொடக்கம் அது. வறுமை பிடித்த அவருடைய குழந்தைப் பருவத்தின் துயரை நான் உணர்ந்தேன். அந்தப் படம் அவரை எண்பது ஆண்டுகட்குப் பின்னால், அவருடைய ஊருக்குக் கொண்டு சென்றது. குழந்தையாகக் கிராம வயல் வெளியில் இன்பமோ, துன்பமோ அறியாமல் வாழ்ந்தார். எனக்கென வரைந்த அப் படத்திற்காக நான் அவருக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட் டிருக்கிறேன்.

"எப்படி நீங்கள் பீகிங் வந்தீர்கள்? இங்கே உங்களுக்கு வெற்றியும் களிப்பும் இல்லையா?" என்று கேட்டேன்.

"ஐம்பதாவது வயதில் நான் பீகிங் வந்தேன். முப்பது ஆண்டுகட்கு மேலாக, ஊர் ஊராக அலைந்து மரச் சித்திர வேலை, எழுத்து வேலை, வர்ணம் தீட்டுதல் ஆகியவற்றைக் கற்றேன். நான் எனது ஊரை விட்டு வந்து, சீன நாட்டுப் புறங்களின் இயற்கை யழகைக் கண்டேன். எனக்கு மூன்று ஆசிரியர்கள் வர்ணப் படம் எழுதக் கற்றுக் கொடுத்தார்கள் எனது ஆசிரியர்கள் கலைப் பரம்பரையில் வந்த பிரபுக்களல்லர்."

மீண்டும் அவர் ஏன் பீகிங் வந்தார் எனக் கேட்டேன். எனக்கென ஏதேனும் திறன் பெறவேண்டும் என்ற அவ

எனக்கிருந்தது. பீகிங்கில் எனது படங்களை விற்று வெற்றியடைந்தேன். சீனர்கள் அலங்காரப் படங்களை விரும்பினர். ஆகவே, நான் விற்பனையாகும் படங்களை எழுதினேன்'' என்றார்.

அச் சமயத்தில் அவரது பேரனும் வந்து சேர்ந்தான். அவன் கூறினான்: "எனது பாட்டனார் பிரபுக்கள் பரம்பரையினரல்லர். அவர் தனக்கென ஏதேனும் பெறவேண்டும் என்று கூறியதெல்லாம் மக்களுக்குச் செய்யவேண்டும் தொண்டுதான்.''

அந்த இளைஞன் கட்சிச் சின்னத்தைப் பொருத்தியிருந்தான். அவனும் ஓர் ஓவியன். ஆனால், அவன் இன்றைய சீனா விரும்பும் படங்களை வரைந்தான். மாசேதுங்கின் படங்களை அவன் வரைந்துள்ளான் என எண்ணுகின்றேன். நான் சிரித்ததைப் பார்த்துவிட்டு அவன் ஒரு கதை சொன்னான். அதை அப்படியே கூறுகின்றேன். அவன் சொன்னான்: "மஞ்சு காலத்திலேயே எனது பாட்டனார் மக்களுடன், மக்களுக்காகவே இருக்க விரும்பினார். அவருடைய படங்கள் அரச சபையினரால் பாராட்டப் பட்டதால், அவரை அரசர் அரசாங்க அதிகாரியாக்குவதாகக் கூறினர். எனது பாட்டனார் அதை ஏற்றுக் கொள்ள மறுத்தார். தான் கிராமத்திற்கே சென்று தனக்குப் பழக்கமான அமைதியான வாழ்க்கை நடத்தப் போவதாகக் கூறினார். அவர் மக்களுடைய கலைஞர்.''

மலர்கள், பறவைகள், நண்டுகள் ஆகியவற்றின் படங்கள் என்ன கருத்தைக் கொண்டு மக்களுக் கெனப் படைக்கப்படுகின்றனவோ? சிபெய்ஷியின் படங்கள் பொருட்காட்சிகளிலோ, கலை மன்றங்களிலோ தொங்கவிடப்பட் டிருப்பதைப் புதிய சீனாவில் நான் பார்த்ததில்லை. சிவப்பு, வெண்மை நிறங்கள் கொண்ட தகலியாப் பூக்களின் பெரிய படம் ஒன்று, அரசியல் கவிஞனான குவோமோஜோவின் அறையில் இருப்பதைப் பார்த்தேன். சீனாவின் சிறந்த கலைஞரால் வந்த விருந்தினர்க்குத் தேயிலைப் பானம் அளிக்கக் கூடப் பணமில்லை! அவருக்கு இந்த மரியாதை கிடைத்ததே, ஒரு ருஷ்ய எழுத்தாளருக்கு அவரது படங்கள் பிடித்ததனால்தான்!

இப்பொழுது உரையாடலில் சிபெய்ஷியின் பேரன் கலந்து கொண்டதால், அவரிடமிருந்து மேலும் தெரிந்து கொள்ள ஏதுமில்லை. அந்தப் பெரியவர் மௌனமாக இருந்தார்; களைப்பாகவும் இருந்தார். நான் படத்துடன் அவர் தந்த செய்தியையும் பெற்றுக் கொண்டு நண்பர்களுடன் எழுந்து வந்தேன்.

# 6. புதிய ஏகாதிபத்தியம்

"ஜப்பான் அல்லது அதன் துணைவர்கள் எங்களுடன் போரிடாவாறு சீன சோவியத் ஒப்பந்தம் நிறைவேற்றப்பட்டது" எனக் குவோமோஜோ எனது கேள்விக்குப் பதிலளிக்கையில் கூறினர். "வட அட்லாண்டிக் ஒப்பந்தம் போன்றதன்று இது. அட்லாண்டிக் ஒப்பந்தம் போருக்கெனக் கூட்டப்பட்ட ஒப்பந்தம். வட அட்லாண்டிக் ஒப்பந்தம் கொல்வதற்கு உரிய வாள். நாங்கள் வாளைத் தற்காப்பிற்குப் பயன் படுத்துவோம்." வாளைப் பிடிப்பதற்குச் சீனு சோவியத் ருஷ்யாவையே சார்ந்து நிற்கின்றது. கொள்கையால் ஒற்றுமை, பொருளாதார உதவி ஆகியவை சீனுவைக் கம்யூனிஸக் கூட்டுடன் பிணைத்து வைத்துள்ளது. புதிய சீனுவில் அரசியல், பொருளாதார சீரமைப்புப் பிரச்னைகள் மலைபோல் எழுந்துள்ளன. பெரிய நிலப்பரப்பை ஆள்வதற்கு ஒரு திறமான ஆட்சியந்திரம் வேண்டும். வாழ்க்கை வழிகள், பொறுமை, சிந்தனை ஆகியவற்றில் தன்னிச்சைப்படி வாழும் மக்களுக்கு ஒரு கம்யூனிஸ சர்வாதிகாரம் வேண்டும். தொழில், நிதிச் செல்வங்கள் குழம்பியுள்ளன. பசியும் வறுமையும் அதைப் பீடித்துள்ளன. வெளி நாட்டுச் சுரண்டல், குடியேற்றம், பேராசை மிக்க போர்ப் பிரபுக்கள் யாவும் புதிய தாக்குதலுக்கும் குடியேற்றத்திற்கும் வழியமைத்துக் கொடுத்தன. சீனக் கம்யூனிஸ்டுகளுக்குத் தேசத்தை ஒன்றுபடுத்தி, மக்கள் வாழ்க்கையை உயர்த்துவதற்குக் காலமும், உதவியும் தேவைப் பட்டன.

துரதிருஷ்ட வசமாக அமெரிக்காவின் குழப்பமான-நேர்மையற்ற கொள்கை, கோபத்தையும் கசப்பையும் ஏற்படுத்தியது. அமெரிக்கா, சர்வதேச ஆறுதல், புதுவாழ்வு அளிக்கும் சங்கம், ஐக்கிய நாடுகள் சபை யாவும் சந்தேகத்திற்குள்ளாயின. ஏனெனில், அவை சீனுவில் குழப்பத்தையும் ஊழலையும் நிலை நிறுத்தப் பார்த்தன எனக் கருதப்பட்டன. சோவியத் அரசாங்கத்தின் உதவியை நாடுவது தவிர வேறு ஒரு வழியும் மாவிற்குத் தோன்றவில்லை. 1945-இல் கூட சியாங் மூலமாக ஒன்றுபட்ட ஒரு பலமான அரசாங்கத்தை அமைக்கலாம் என ருஷ்யா நினைத்தது. மா தனது கொள்கைப்படி நடந்து, விடுதலைப் போராட்டத்திற்கு ஆரம்பமாகக் குடியானவர் போராட்டத்தை நடத்தினர்; இருபத்து மூன்று ஆண்டுகளாகத் தனியாகத்

துயருற்ருர்; எதிர்ப்புப் போரைத் தானே நடத்திஞர் ; ருஷ்யா வின் ஆதரவையும் மறுத்துவிட்டார். சர்வதேசக் கம்யூனிஸ்டுக் கட்சி அவரைச் சந்தர்ப்பவாதி என்றழைத்தது. உழைப்பாளர் போராட்டத்தை நடத்தாமல், 'திக்குத் தெரியாத காட்டில் கற்பனைச் சோவியத்தை' நிறுவும்படி அது விட்டு விட்டது. அவர் வெறும் போராட்டத்தை நடத்தியவர் மட்டுமல்லர்; சீனக் கம்யூனிஸ்டுகளுக்குப் புரட்சித் தத்துவத்தையும் ஈந்தவர். இப் பொழுது மாவிற்கு ருஷ்ய உதவி தேவைப்படுகின்றது.

1949 ஜூலை மாதம் அவர் எழுதினர்: "எல்லா நாட்டு மக்களுடன்-நம்மைச் சமமாக நடத்தும் தேசங்களுடன்-பொதுப் போராட்டத்தில் நாம் கலந்து கொள்ளவேண்டும். அதாவது, சோவியத் ருஷ்யாவுடனும், ஒவ்வொரு புதிய ஜனநாயக நாட்டுடனும், எல்லா நாடுகளிலு முள்ள தொழிலாளர்களுடனும் நாம் இணைந்து கொள்ள வேண்டும். சர்வ தேச ஐக்கிய முன்னணி அமைக்க வேண்டும்." அவருடைய இக் கருத்தை மாற்ற என்ன நேர்ந்தது? அமெரிக்கா, சியாங்கின் படைக்கு உதவியளித்து வந்ததால், சீனவை ஒன்று படுத்தி அங்குக் கூட்டு அரசாங்கத்தை அமைக்க அமெரிக்காவின் முயற்சி பயனளிக்கவில்லை. அமெரிக்கர் அளித்த உதவியைச் சியாங் கம்யூஸ்டுகளை அழிப்பதில் பயன்படுத்திஞர். 1949-இல் கோமிண் டாங் படைகள் தெற்கிலிருந்தன. ஆகவே, சீனவை ஒன்று படுத்தும் பணி முற்றுப் பெறவில்லை. 1948 நவம்பரில் மா கூறினர் "தேச முழுவதுமுள்ள புரட்சிப் படைகளை ஒன்று படுத்தலும், அமெரிக்க ஏகாதிபத்தியத்தைத் துரத்துதலும், கோமிண்டாங் ஆட்சியை அகற்றுதலும், சோவியத் ருஷ்யா வுடன் சேர்ந்து ஓர் ஐக்கிய ஜனநாயக மக்கள் குடியரசை நிலை நாட்டுதலும் கம்யூனிஸ்டுகளின் முக்கிய பணியாகும்."

இது ஒரு முழு மாற்றம். அப் பணி நிறைவேறியதும், மா சோவியத் ருஷ்யாவிடம் உதவி கோரினர். உள் நாட்டுப் பாது காப்பின்றி, பல பிரச்னைகளைத் தீர்க்க முடியாது என்றும், சியாங்கின் திருப்பித் தாக்கும் முயற்சியைச் சமமாக நின்று எதிர்க்க முடியாது என்றும் அவர் கருதினர். 1949 டிசம்பரில் முதன் முறையாக மாஸ்கோ சென்ருர். கசப்பான போராட்டத் தின் பின் நட்பு, உறவு, பரஸ்பர உதவி ஆகியவை கொண்ட சீன-சோவியத் ஒப்பந்தம் நிறைவேற்றித் திரும்பினர். ஒரு தனி ஒப்பந்தத்தின் மேல், 30 கோடி டாலர், ஐந்து ஆண்டுக்

கடனுகப் பெறப்பட்டது. அந்த ஒப்பந்தம் வெளியானதும் அரசியல் மாற்றத்தைக் கொடுத்தது. ஏனெனில், சீனு மீது சியாங் படையெடுத்தால் அது உலகப் போர் ஆகிவிடும்.

அந்த ஒப்பந்தம் சம நிலையில் உள்ளவர்களிடையே ஏற் பட்டதன்று. சீனுவில் செல்வமும், மனித பலமும் இருந்தபோதி லும், அது படை பலத்திற்கும், தொழில் நுணுக்கத்திற்கும் ருஷ்யாவையே நம்பியிருக்கின்றது. இது மாவிற்குத் தெரியும். உண்மை தெரிந்தவர் ஆகையால், அதனுடைய வரம்பும் தெரிந் திருக்கின்றது. சேனையை இக் காலப் போருக்கு ஏற்றவாறு அமைக்க, படைத் தளவாடம் தேவைப் படுகின்றது. அக்டோபர் அணிவகுப்பின்போது, தரை - விமானப் படைகளிலிருந்து பொறுக்கப்பட்ட சில பகுதிகள், கோமிண்டாங் படையினரிட மிருந்து கைப்பற்றப்பட்ட அமெரிக்கத் தளவாடங்களுடன் அணி வகுத்துச் சென்றன. அத்தகைய தளவாடங்கள் விரைவில் பழைமையாகி விடுகின்றன. சீனு புதியனவற்றைப் பெற்றுக் கொண்டே இருக்கவேண்டும். ருஷ்யாவிற்கும் தனது கிழக்கு எல்லையைப் பாதுகாக்க ஒரு பலமான படை வேண்டியிருக் கின்றது. அதனுல், அதன் பகைவர்களுக்கு இரு முனைகளிலும் போர் தொடுக்க வேண்டிவரும். ஆகவே, இன்று சீனுவில் நன்கு பயிற்சி அளிக்கப்பட்ட விமானப் படை ருஷ்ய ஆயுதங் களுடன் இருக்கின்றது.

அதிகமான மக்கள் விவசாயிகளாகாம லிருக்கச் சீனுவில் தொழிற்சாலைகள் பெருக வேண்டும். தற்போதுள்ள தொழிற் சாலைகள் திரும்பத் தொடங்கப்பட வேண்டும். கனரகத் தொழிற் சாலைகள் அமைக்கப்பட வேண்டும். ருஷ்யாவின் செல்வாக்கு, தேசமெங்கணும் காணப்பட்டாலும், ருஷ்யாவால் மூலப் பொருட் களோ, தொழில் நுணுக்க உதவியோ மிகக் குறைவாகவே கொடுக்க முடியும். வடக்கே மஞ்சூரியாவில் மாவின் படத்தருகில் ஸ்டாலின் படமும் தவிர்க்க முடியாதபடி வைக்கப்பட்டுள்ளது. இரயில் நிலையங்கள், உணவு விடுதிகள், மண்டபங்கள் ஆகிய வற்றின் பெயர்ப் பலகைகள் இரு மொழிகளிலும் எழுதப்பட் டுள்ளன. தெற்கே அதன் செல்வாக்கு அவ்வளவாகத் தெரிய வில்லை. இங்கு மார்க்ஸ் முதல் ஸ்டாலின், மா ஈருகவுள்ள கம்யூனிஸத் தலைவர்களின் படங்கள் வைக்கப்பட்டுள்ளன. அவை கம்யூனிஸப் பாதையிலுள்ள அறிஞர்களை நினைவூட்டு கின்றன.

கல்லூரிகளிலும் பள்ளிக்கூடங்களிலும் ஆங்கிலம் அகற்றப் பட்டு ருஷ்ய மொழி புகுந்துள்ளது. புத்தகக் கடைகளில் ருஷ்யப் புத்தகங்களும், பத்திரிகைகளும், துண்டுப் பிரசுரங்களும் நிரம்பியுள்ளன. ஆங்கில நூல்கள் கிடைப்ப தரிது. கட்சியின் தத்துவ நிபுணர் லியுஷவோசி, ஸ்டாலினிசத்தை மயோசிஸமாக வும், மயோசிஸத்தை ஸ்டாலினிசமாகவும் விளக்குவதில் ஈடுபட் டுள்ளார். புரட்சி வரலாற்றில் ருஷ்யாவில் சீனுவிற்கு அளிக்கப் பட்ட மதிப்பான யோசனைகளைப் பற்றியும், உதவியைப் பற்றி யும் கூறப்பட்டுள்ளது. அந்த வழியில், தொழிலாளர் தலை மையைப் பற்றியும், அதன் வளர்ச்சி பற்றியுமே அதிகமாகப் பேசப்பட்டு வருகின்றது.

வளர்ந்து வரும் ருஷ்யச் சார்பும், ருஷ்யச் செல்வாக்கும் மாவிற்குத் தெரிந்திருக்கின்றது. அதைத் தவிர வேறு வழி யில்லை. மேற்கு வல்லரசுகள் சீனுவை ருஷ்யக் கரடியின் கரங் களில் தள்ளிவிட்டன. லியுஷவோசி, பெங்சென், கவோகாங் ஆகியோரே அவரைச் சுற்றி இருக்கின்றனர். அவர்களெல் லாம் தீவிரவாதிகள். சீனுவைச் சோவியத் மயமாக்க வேண்டு மென வற்புறுத்துகின்றனர். படைவீரர்கள், பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள் இவற்றிடையே ஒரு புதிய தலைமுறை தோன்றி வருகின்றது. அவர்கள் ருஷ்ய வழிகளிலும், ருஷ்யச் செல்வாக் கிலும் பயிற்சி பெற்று வருகின்றனர். தேசத்தில் அதிகாரத்திற் கென ஒரு போட்டி எழுமாயின், அதில் ருஷ்யச் செல்வாக்கும், நல்லெண்ணமுமே வெல்லும். ஆனுல், மாவும் சூடேயும் ஒன் ருக இருப்பது வரையிலும் எதுவும் மாவிற்கு எதிராக நடக்காது.

மாஸ்கோவில் ஓர் ஆகாய விமானத் தயாரிப்பு இயந்திரத் தைப் பார்வை யிடுகையில் மா இந்தியத் தூதரோடு பேசிக் கொண் டிருந்தார் என்று கூறப்படுகின்றது. அப்போது அவர் சொன்னதாவது: "உங்கள் நாடும் எங்கள் நாடும், இதை அவரவர்களாகவே தயாரிக்கும் வரையிலும், நம்மால் எதுவும் செய்ய முடியாது. அதுவரை நாம் மெதுவாகச் செல்ல வேண்டும்." ஆகவே, அவர் மெதுவாக, ஆனுல், உறுதியாகச் செல்கின்ருர். ஆனுல், அவர் வரலாற்றில் டிட்டோபோல் ஆகார். கொள்கை ஒற்றுமை அவரைச் சோவியத் ருஷ்யாவுடன் இணைத் திருக்கின்றது. ஆனுலும், ஆசிய நாடுகளுடன் - குறிப்பாக இந்தியாவுடன் தொடர்பு ஏற்படுத்த முயன்று வருகின்ருர். இந்த வகையில், வெளிநாட்டார் மீது சீனர்களுக்குள்ள

பகைமை துணை நிற்கின்றது. ருஷ்யர்களும் ஒரு காலத்தில் 'வெளிநாட்டுப் பேய்'களாகக் கருதப்பட்டு, சாதாரணச் சீனரால் 'பெரிய மூக்கு' என அழைக்கப்பட்டனர்.

1951 அக்டோபர் முதல் நாள், மா ஆசிய ஒற்றுமை என்ற சொற்றொடரை உபயோகித்தார். அதன் பின் நடைபெற்ற விழாக்களில், சோவியத் பிரதிநிதிகட்கு அடுத்தபடியாக இந்தியாவிற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. 1952 செப்டம்பரில், புதிய இந்தியத் தூதரை வரவேற்கும்போது மா கூறினார்: "இரு நாட்டு மக்களிடையேயுள்ள நட்பு மேலும் வளரும். ஆசியாவிலும்,அகில முழுவதிலும் அமைதிக்காக இரு நாடுகளும் சேர்ந்து ஒத்துழைக்கும். இதில் ஐயமில்லை." மாவின் இவ் வார்த்தைகளை மக்கள் எதிரொலித்தனர்; இரு தடவை நான் சென்ற போதும் தங்களுடைய அன்பைப் பொழிந்தனர். மேற்கு வல்லரசுகளின் கையில் அவதியுற்ற ஆசிய மக்களின் ஆதரவும் தமக்குண்டு என்பது சோவித் ருஷ்யாவிற்கு அவர் விடுத்த எச்சரிக்கையாகும். அது ருஷ்யர்கள் தோல்வியடைந்த ஆசியாவில் சீனக் கம்யூனிஸம் வெற்றி பெற்றது என்பதைக் கழிந்த இரண்டு ஆண்டுகள் தெளிவுபடுத்துகின்றன.

குவோமோஜோவை நான் சந்தித்தபோது, அவர் மாவின் 'ஆசிய உணர்வு' குறித்துப் பேசுவார் என நம்பினேன். 'ஆசிய ஒற்றுமை', 'ஆசிய அமைதி' எனப் பேசுவதெல்லாம், கிழக்கு மேற்கு நாடுகட்கு எதிராக ஒரு பிரதேச ஐக்கியப் பாதுகாப்பை ஏற்படுத்தும் முயற்சியே என நான் உறுதியாகக் கூறுகின்றேன். சோவியத்துடன் சமத்துவத்தையும், மேற்கு நாடுகளில் அமைதியையும் நிலை நாட்டுதல் மாவின் வழி. குவோமோஜோ பதிலளித்தார்: "ஆசியாவில் பின் தங்கிய மக்களின் முன்னேற்றம், அவர்களது சுதந்தர உரிமை, சுய நிர்ணய உரிமை ஆகியவற்றைப் பெறுவதற்கே நாங்கள் ஆசிய ஒற்றுமையை நாடுகின்றோம். ஆசியாவிற்குப் புதிய மன்றோத் தத்துவத்தை நாங்கள் அழைக்கவில்லை. ஆசிய மக்கள் தங்கள் ஆட்சியைத் தாங்களே அமைத்துக் கொள்ளும் உரிமையைப் பெற விரும்புகின்றோம். நாங்கள் ஆசியாவை எங்களுக்காகக் கேட்கவில்லை. மேற்குக் கலைப் பண்பாடுகளை நாங்கள் தள்ளவில்லை. ஆகவே, ஆசிய ஒற்றுமை யென்பது உலக ஒற்றுமைக்கு முதற்படியாகும்."

நான் குவோமோஜோவை மீண்டும் கேட்டேன்: "கிழக்குக்கும் மேற்குக்கும் இடையே சமன் செய்யும் மூன்றாவது சக்தியாக

ஆசிய நாடுகள் அமைந்தாலன்றி, ஆசிய ஒற்றுமை, உலக ஒற்றுமைக்கும் அமைதிக்கும் எங்ஙனம் வழிகாட்ட முடியும்? உண்மையான ஐக்கிய நாடுகள் சபையே அமைதியைக் காக்க முடியாதா?'' என்று. அவர் பதிலளித்தார்: "ஆசிய ஒற்றுமை சமாதானத்தைப் பாதுகாக்கும். உலகத்தில் இரு சக்திகள் உண்டு: சமாதான சக்தி; போர்ச் சக்தி. மூன்ருவது சக்தியில்லை. ஆசிய ஒற்றுமை சமாதான சக்தியை வலுப்படுத்தும். மேற்கு வல்லரசுகள் எல்லாம் ஏகாதிபத்திய அரசுகள் அல்ல. மேற்கிலும் பெரும்பான்மையோர் அமைதியை விரும்புகின்றனர். ஆகவே, நாம் அமைதியின் பக்கம் நிற்போம். வேற்றுமை வளர்ந்து வருகின்றது. ஆகவே, அமைதிக்காக அதன் பக்கம் நாம் சேரவேண்டும். அதற்கு, நடுவழி ஒன்றில்லை. ஆகவே, ஆசிய ஒற்றுமை, உலக ஒற்றுமைக்கும் சமாதானத்திற்கும் முதற்படியாகும்.''

1949-இல் மா எழுதியதை எண்ணிப் பார்த்தேன். அவர் எழுதியுள்ளதாவது:—

சன்யாட்சனின் நாற்பது ஆண்டு அனுபவமும், சீனக் கம்யூனிஸ்டுக் கட்சியின் இருபத்தெட்டு ஆண்டு அனுபவமும் எங்களுக்குக் கூறியது, வெற்றி பெறுவதற்கும், அதை நிலை நாட்டுவதற்கும் நாம் ஒரு கட்சியின் பக்கம் சாரவேண்டும் என்பதே. இவ் வனுபவங்களின்படி சீன மக்கள் ஏகாதிபத்தியத்தின் பக்கம் அல்லது சோஷலிசத்தின் பக்கம் ஒதுங்க வேண்டும். இந்தச் சட்டத்திற்கு விதி விலக்கு இல்லை. மதில்மேற் பூனையாக இருக்க முடியாது. இதற்கு மூன்ருவது வழி கிடையாது. நடுவு நிலைமை என்பது கானல் நீர்! மூன்ருவது வழி இல்லை.

அப்பொழுது மா ஆணித்தரமாகக் கூறியுள்ளார். உலகம் கருப்பு அல்லது வெண்மை. பாதி நிறமென்றில்லை. ஆனால், மாசேதுங்கே, "கொள்கைகள் சாணியைவிடப் பயனற்றவை; ஏனெனில், சாணியை எருவாகப் பயன் படுத்தலாம்'' என்று விளக்கியுள்ளார். இப்பொழுது அவர் அதை மாற்றி வருகிருர். 'ஏகாதிபத்தியத்தின் பின்னேடும் நாய்கள்' என முன்பு அவராலேயே அழைக்கப்பட்ட நாடுகளுடன் ஆசிய ஒற்றுமை பற்றிப் பேசுகின்ருர். சோவியத் உறவு, அவர் எங்கு இருந்தார் என்பதை அவருக்குக் கற்பித்திருக்க வேண்டும்.

இப்பொழுது அவர் தனது கொள்கையைத் தளர்த்தி வருகின்றார்.

கொரியப் போர், அவருக்கு வெளி நாட்டு உறவுகளில் புதிய கருத்தைக் காட்டியிருக்கும். சரித்திரக் காரணங்களால் கொரியாவும், இந்தோ சீனாவும் அவரது செல்வாக்குப் பகுதிகள் எனக் கருதியது உண்மை. சீனாவைக் கைப்பற்ற கொரியா ஒரு வாயில். இந்தோ சீனா, சீனாவின் நெற் களஞ்சியத்தின் ஒரு பகுதி. தென் சீனாவிற்கு நெல் அனுப்பிய துண்டு. இந் நாடு களுடன் நட்பு தேவை எனச் சீனா கருதுகின்றது. ஆனால், போராடித் தளர்ந்த சீனா, அவற்றுடன் ஒப்பந்தத்திற்கு வரத் தயங்குகின்றது. அதனால், அதன் வற்றிய பொருளாதாரம் பாதிக்கப்படலாம். கொடுத்த வாக்குறுதி எதிர்பார்த்த அள விற்கு நிறைவேற்றப் படவில்லை யாதலால், கசப்பும் வெறுப்பும் தோன்றியதற்கு ஆதாரங்கள் பல கண்டேன்.

ஆரம்பத்தில் படையைத் திருத்தி அமைத்து அவர்கட்கு நவீனப் போர்முறையில் பயிற்சி அளிப்பதற்குப் போர் உதவி யாக இருந்தது. போர்த் தீவிரத்தில் தொழில் ஒழுங்கு படுத்தப் பட்டு, மக்களின் ஆவல் தூண்டி விடப்பட்டது. தேசியப் பாது காப்பு என்ற பெயரால் மக்கள்மீது கடின உழைப்பு திணிக்கப் பட்டது. மக்கள் கட்டாய நன்கொடை வழங்குமாறு வற்புறுத்தப் பட்டார்கள். அரசாங்கத்துடன் ஒத்துழைக்காதவர்களிட மிருந்து பொருள் பறிமுதல் செய்யப்பட்டது. அவர்கள் கொடுமைக்குள்ளானார்கள். அவர்களுக்குக் கடின வேலையும் அதிகச் சம்பளமும் கொடுக்கப்பட்டன. 'போரின் கொடுமைகள் இன்பமாக மாற்றப்பட்டன.' அந்தப் பொறுமைக்கும் ஓர் எல்லை யுண்டு.

இப்பொழுது குறைகளை முணுமுணுக்கின்றனர். அமைதிக் காலச் சீர்திருத்தம் வேண்டுமென ஆர்வம் கொண்டுள்ளனர். 'தென் கொரியர்கள் ஏன் வடக்கே படையெடுத்தனர்? சீன மக்கள் கருத்துப்படி சிங்மன் றீயை மக்கள் ஆதரிக்கவில்லையே?' என நான் பன்முறை கேட்டேன். கடைசியாக ஒரு கம்யூ னிஸ்டு கூறினார்: "வட கொரியர்கள் றீயின் கையாட்களைச் சாதுரியமாக நடத்தியிருக்க வேண்டும். ஆனால், அவர்கள் பொறுமை இழந்து விட்டார்கள்." பான்முன்ஜான் பேச்சு வார்த்தைகளைப் பற்றிச் செய்தித் தாளில் வெறுப்பாக வெளி

யிடப்பட்டது. கிருமிப் போர் எனக் குற்றம் சாட்ட வேண்டி யிருந்தது. மக்களின் இழிந்த மனப்பான்மையை மாற்ற வேண்டுமென நான் உணர்ந்தேன். வழக்கமான கொடுமை நிறைந்த கதைகள் மக்களைப் பெரிய தியாகங்கள் செய்வதற்குத் தூண்டுகின்றன.

கொரியப் போர் முடிய வேண்டும் என்பது சீனுவின் உண்மையான ஆர்வம். ஆனால், மக்கள்முன் தன்னைக் குறைத்துக் கொள்ள அதனால் முடியவில்லை. தேசியப் பெருமை, ஒற்றுமைக் காக மக்கள் மிகவும் துன்ப மடைந்தனர். கொரியப் போர் நிறுத்தம் சீன மக்களின் வெற்றி எனக் கூறப்பட்டது. அவ் வெற்றிக்குச் சீன மக்கள் குருதி சிந்தியுள்ளனர் என விளக்கப் பட்டது. 'வேட்டைக்காரனும் புலியும்' என்ற பழைய கதை திரும்பத் திரும்பச் சொல்லப் பட்டது. வேட்டைக்காரன் (அமெ ரிக்கா) புலி(சீனு)யின் வாயினுள் கையை விட்டிருக்கின்றான். கையை விட்டு விட்டால் புலியின் உயிருக்கு ஆபத்து. ஆனால் அதற்காகக் கையை விழுங்கவும் முடியாது. எனவே, ஆசிய ஒற்றுமை எனப் பேசுவதெல்லாம் சீன-சோவியத் ஒப்பந்தக்கார ரிடையே இருக்கும் ஏற்றத் தாழ்வைச் சமன் செய்யவும், சீனு வின் நிலையைக் கொரியாவில் காப்பாற்றுவதற்காகவுமேதான்!

இப்பொழுது கம்யூனிஸ்டு மா, முதலாளித்துவத்துடனும், 'பின்னோடும் நாய்களுடனும்' உடனிருந்து வாழ்தல் பற்றிப் பேசுகின்றார். சூ என்னிடம் அதைப் பற்றிச் சொன்னார்: "சோஷலிச நாடானாலும், மக்கள் ஜனநாயக நாடானாலும், அல்லது முதலாளித்துவ நாடானாலும் அமைதியாக உட னிருந்து வாழ முடியும் என நாங்கள் நம்புகின்றோம். சீனக் கம்யூனிஸ்டுகள் கருத்துப்படி, ஆசிய ஒற்றுமை மாவின் கரங் களைப் பலப்படுத்த வேண்டும். சீன-சோவியத் அதிகாரத்திற்கு உலகம் கீழ்ப்படியுமாறு வற்புறுத்தப்பட வேண்டும். அதுதான் ஆசிய ஒற்றுமை."

தென் கிழக்கு ஆசியாவில் வசிக்கும் ஒரு கோடிச் சீன மக்களை இந் நோக்கத்திற்காகப் பயன்படுத்தச் சீனு எண்ணுகின் றது. அம் மக்கள் சீன தேச மக்களாகவே அங்கு வாழ வேண் டும். அத் தேச மக்களாக மாறுவதற்கு அனுமதிக்கப் படுவ தில்லை. ஆசிய மக்களின் தேசிய உரிமை பற்றிப் பேச்சு வார்த்தை நடத்தத் தாம் சித்தமாக இருப்பதாகச் சூயென்லாய் தவருகக் கூறி விட்டார். பின்னர் அத் தவறு திருத்தப்பட்டது.

இந்தோனேஷ்யா, இந்தோ சீனு, தாய்லாந்து, மலேயா, பர்மா, இந்தியா ஆகிய நாடுகளில் வாழும் சீனர்கள் எத்தனையோ தலைமுறைகளாகஅத் தேசங்களில் வாழ்ந்தாலும் அவர்கள் சீனர் களே. 1952-இல் இந்தோனேஷ்யாவி லுள்ள சீன மாணவர்கள் அந் நாட்டின் பாஸ்போர்ட்டுடன் சீனுவிற்கு வந்தனர். சீனு அப் பாஸ்போர்ட்டுகளைப் பறிமுதல் செய்து விட்டு, சீனப் பாஸ் போர்ட்டுகளைக் கொண்டு செல்லுமாறு வற்புறுத்தியது. இந்தோ னேஷ்யத் தூதர் அதைக் கண்டித்தார். ஆனல், பயனேதுமில்லை !

ஒரு தடவை இந்தியத் தூதர், எழுபது வெளி நாட்டினரை மனமிரங்கிச் சிறையினின்றும் விடுவிக்குமாறு பிரதமர் சூவைக் கேட்டுக் கொண்டார். சூ பதில் கூறினராம்: "பதினன் காயிரம் சீனர்கள் மலேயாச் சிறையில்இருக்கும்போது, இக் குற்ற வாளிகளை விடுதலை செய்யுமாறு என்னைக் கேட்காதீர்கள்." மக்கள் அரசியல் ஆலோசனைக் குழுவில், வெளி நாடுகளில் வாழும் பதினறு சீனர்கள் அங்கம் வகிக்கின்றனர். சீனுவின் வெளியே, பல தலைமுறைகளாக வாழும் சீனர்கள், சீன மக்க ளாகவே கருதப்படுவர் என்பது தெளிவாகின்றது. கல்கத்தாவில் வாழும் பதினயிரம் சீனர்கள்மீது எல்லா விதமான கம்யூனிஸ்டுப் பயங்கர உபாயங்களையும் கையாண்டு அவர்களைக் கீழ்ப்படியச் செய்கின்றனர். மனைவியும், மாமியாரும் சீனப் பள்ளி ஆசிரியர் ஒருவரை இம் மாதிரி கொடுமைப் படுத்தியதனல் அவர் தற்கொலை புரிந்து கொண்டார்.

சீனு, தென் கிழக்கு ஆசியாவை ஏகாதிபத்தியத்திடமிருந்து விடுவித்து, ஆசிய ஒற்றுமையை ஏற்படுத்த அந் நாடுகளில் வாழும் சீனர்களைப் பயன் படுத்த எண்ணியுள்ளது. அவர்களது இற்றுப் போன தேசிய உணர்ச்சியும், பொருளாதார வறுமையும் அதற்கான ஆயுதங்களாகப் பயன்படுத்தப் படுகின்றன இந்தோ சீனுவில் ஹோசிமின் சீன உதவியுடன் கடும் போராட் டம் நடத்தி வருகின்றார். ஆனல், சீனு வெளிப்படையாகத் தலை யிடுவதில்லை. தாய்லாந்தில் அரசியல்வாதிகளின் ஊழல்களும், அமெரிக்க - பிரிட்டிஷ் ராஜ தந்திரத்தின் முரண்பாடும், அந் நாட்டைச் சீனர்களின் கருத்துக்கு இரையாக விட்டுச் சென்றுள் ளது. இதற்கிடையில் தாய்லாந்தின் செல்வாக்கான தலைவர் ஷாங்காயில் காலம் தள்ளுகின்றார். விடுதலை செய்வதற்குப் பதில், ஒரு புதிய ஏகாதிபத்தியம் தம்மைக் கட்டுப்படுத்த

வருகின்றது என்பதை ஆசிய நாடுகள் உணரும் வரை இது நடக்கும்.

சீனு இந்தியாவிடம் காட்டும் உறவு, தென் கிழக்கு ஆசியாவில் அதன் அபிவிருத்தியில் ஒரு முக்கிய பகுதியாகும். ஏனெனில், கடல் கடந்து வாழும் இந்தியர்களின் பொருளாதாரத் தொடர்பும், அரசியல் செல்வாக்குங்கொண்டு இந்தியா மட்டுமே சீனுவிற்குச் சமமாக நிற்கின்றது. சீனர்களைப்போலன்றி, கடல் கடந்த இந்தியர்கள் அவர்கள் வாழும் நாட்டின் தேசிய இனமாகத் தங்களை ஆக்கிக் கொள்ள வேண்டுமென யோசனை கூறப்பட்டுள்ளது. 'இரண்டாயிரம் ஆண்டுகளாக நட்பு', 'கலாசாரக் கலப்பு' என்றெல்லாம் வெளிப்படையாகப் பாராட்டினுலும், இந்திய அரசாங்கத்திடம் அது காட்டும் மதிப்பும் ஆர்வமும் மிகக் குறைவு.

சீனக் கம்யூனிஸ்டுகளின் கருத்துப்படி, இந்தியா சுதந்தர நாடு அன்று. சீனுவின் கட்டுப்படுத்தப்பட்ட செய்தித் தாள்கள் இந்தியத் தேர்தலைப் பற்றியும், நேருவைப் பற்றியும் இழிவாகக் குறிப்பிடுகின்றன. ஒரு பத்திரிகை எழுதிற்று: " இந்தியாவில் 'சுதந்தரம்', 'கட்டுப்பாடற்ற தேர்தல்' என்றிருந்தாலும், ஆங்கிலேயரும், அதைவிடக் கூடுதலாக அமெரிக்கரும், இந்தியப் பொருளாதாரத்தில் தங்கள் செல்வாக்கை அதிகப்படுத்தி வருகின்றனர்" என்று. வட கொரியாவின் தாக்குதல் என்ற ஐக்கிய நாடுகளின் தீர்மானத்தை இந்தியா ஆதரித்த பொழுது, அதற்கு, 'ஏகாதிபத்தியத்தின் பின்னேடும் நாய்' எனப் பெயர் சூட்டப்பட்டது. கலோகாங், ஷாங்காய் நகர சபைத் தலைவர் சென்யி முதலியோர் திருமதி பண்டிட்டிடம், இந்தியாவில் ஆங்கிலேயரின் தலையீடு பற்றியும், இந்திய வெளிநாட்டுக் கொள்கையில் காமன்வெல்த் உறவின் செல்வாக்குப் பற்றியும் கேட்டனர். இவையெல்லாம் இந்தியா இன்னும் விடுதலை பெறவில்லை யென்பதைக் குத்திக் காட்டுதற் பொருட்டே கேட்கப்படுவன வாகும்.

நான் சென்ற இரு தூதுக் குழுக்களையும் அவர்கள் நடத்திய முறைகளில் வேறுபாடு கண்டேன். ஒன்று: மக்கள் தூதுக் குழு. அதற்கும் கம்யூனிஸ்டு வரவேற்புத்தான். என்றாலும், மிக்க ஆர்வமும் நட்பும் காட்டப்பட்டன. இந்திய அரசாங்கத் தூதுக் குழுவிற்கு ஏதோ வழக்கப்படி வரவேற்புகள் நடந்தன. மக்கள் குழுமிய வரவேற்புகள் இல்லை. அதற்கு

அளிக்கப்பட்ட செய்தி விபரங்களும் குறைவே. முன் குழுவி னரை விட இவர்கள் கட்டுப்பாட்டுடன் நடத்தப்பட்டனர்.

திபெத்தில், சீனவிற்கும் இந்தியாவிற்கும் எதிர்ப்புக் கிளம் பியது. திபெத்தியர் சீன இன மக்களாக இருப்பினும், அரசி யல் சுதந்தரத்துடன் வாழ்ந்தனர். என்றாலும், அது. சீனவின் விருப்பத்திற்கும், 'பாதுகாப்பிற்கும்' கட்டுப்பட்டே இருந்து வந்தது. ஆனால், சீனத் தொடர்பு நெருக்கமாக இருக்கவில்லை. சீனவால் அதன் மீது ஆதிக்கம் செலுத்த முடியவில்லை. இருப தாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில்தான் இந்தியாவிலுள்ள பிரிட்டிஷாரும், ருஷ்யரும் அந் நாட்டின் அரசியலில் தலையிடத் தொடங்கினர். மதம், மொழி, பண்பாடு ஆகியவற்றால் திபெத் சீனவை விட இந்தியாவுடன் தொடர்புடையது. இந்தியாவின் நலங் கருதியே திபெத் உள் நாட்டுச் சுதந்தரத்துடன் வாழ்ந்து, சீனவின் ஆதிக்க உரிமையையும் ஒப்புக் கொண் டது. ஆனால், அண்மையில், திபெத்துடன் இணங்கி யிருப்ப தாக இந்தியத் தூதரிடம் உறுதியளித்து விட்டுச் சீன படை பலத்துடன் அதைப் பிடித்துக் கொண்டது. இன்று இந்தியா வும், அதன் அண்டை நாடுகளான நேப்பாளமும் பூத்தானும் தங்கள் காரியங்களில் கம்யூனிஸ ஆதிக்கம் சூழ விடுவதைப் பார்க்கின்றன.

இரண்டாயிரம் மைல் நீளமுள்ள இந்தியச் சீன எல்லையில் ஒரு பலம் பொருந்திய படை நிறுத்தப்பட்டுள்ளது—படையெடுப் பிற்காக அன்று—(தாக்குதல் முடியாதன்றோ?) இந்தியாவை 'விடுவிப்பதற்குள்ள' வசதிகளைப் பெருக்குவதற்காகத்தான்! மா இந்தியாவை விரும்புவதெல்லாம்,—தனது அரசியல் பலத்தை வலுவாக்குவதற்கு மட்டுமன்று—ருஷ்யாவிட மிருந்து பெறும் அற்ப உதவியை இந்தியப் பொருளாதாரத்தால் பெருக்கு வதற்காகவும்தான்! ஆகவே, சீன அரசாங்கம் இந்தியாவுடன் நட்பாக இருக்கின்றது. அதே சமயத்தில் இந்திய மக்களின் 'விடுதலை'க்கும் இயன்ற உதவி புரிகின்றது.

மா, தனது ஆசிய உணர்வை வளர்த்து வரும்போது, ருஷ்யா சீன மண்ணில் உறுதியாக நின்றுகொண்டு, தன் னுடைய உதவியை இதமாக வற்புறுத்தாமல், மரியாதையுடன் உறுதியாகக் குறைத்துக்கொண்டு வருகின்றது. சீனவின் மிகுந்த மக்கள் பலத்தையும், செல்வத்தையும் ருஷ்யா

வருகின்ற போருக்காக விரும்புகின்றது ; அதற்காகக் காத்திருக்கவும் இசைகின்றது. சீனவைப் புண்படுத்தும் எச் செயலையும் ருஷ்யா செய்யாது. பீகிங்கிலுள்ள ருஷ்யத் தூதரும், சீனவின் உள்நாட்டுக் காரியங்களில் தலையிடும் எச் செயலையும் செய்வதில்லை.

"சீனவில் ருஷ்ய ஆதிக்கமோ, அதிகாரமோ இருக்கின்றது என எண்ணுவது தவருகும்" என்று இந்தியத் தூதர் தெரிவித்தார். இதனை நிரூபிக்க, சீனவில் ஒரு ருஷ்யன் கைது செய்யப்பட்ட கதையைக் கூறினர்: "சோவியத் தூதராலயம் தன்னுட்டான் கைது செய்யப்பட்டதைக் குறித்து, சீன வெளிநாட்டு அலுவலகத்தில் விசாரித்தது. ஆனல், ஒரு விபரமும் கிடைக்கவில்லை. கடைசியாக, தூதராலயம் என்னை அது பற்றி விசாரிக்குமாறு கேட்டுக் கொண்டது. நான் அவ்வாறே செய்தேன். பலமுறை கேட்டுக் கொண்டதற்கிணங்க அவன் விடுதலை செய்யப்பட்டான்."

சீனவில் ருஷ்யர்கள் நடந்துகொள்ளும் முறை நமது தூதர் வாய்மொழியி லிருந்து நன்கு வெளியாகின்றது. எனது நண்பரொருவர் சாங்கிடம் ஒரு முறை, "இந்தியா இன்னும் விடுதலையடையவில்லை என்று நீங்கள் கருதுகின்றீர்கள். இன்னும் நாங்கள் ஆங்கில ஆதிக்கத்தி லிருக்கின்ருேம் என்று நீங்கள் எண்ணுகின்றீர்கள். நீங்கள் ருஷ்யச் செல்வாக்கின் கீழ் இருக்கின்றீர்கள் என நாங்கள் நினைக்கின்ருேம்" எனக் கூறினர்.

சாங் கோபமடைந்தவராய், "ஆம். நாங்கள் தொழில் நுணுக்க உதவிக்கும் யோசனைக்கும் ருஷ்யாவைச் சார்ந்து நிற்கின்ருேம். அதனை நாங்கள் மறைக்கவில்லை. ஆனல், ஒரு ருஷ்யன் சீனனுக்குக் கட்டளை யிடுவதை நீங்கள் பார்த்ததுண்டா?" என்று கேட்டார்.

இல்லை, சீனனுக்குக் கட்டளையிடும் ருஷ்யனை நாங்கள் பார்த்ததில்லை. அங்ஙனம் ஆணை பிறப்பிக்கவேண்டிய அவசியமுமில்லை. ஆனல், ருஷ்யன் மற்றவர்களைக் கொண்டு அவனுடைய ஆணையை நிறைவேற்றிக்கொள்கின்ருன் !



# உற்பத்தி செய்யுங்கள் அல்லது உயிரை விடுங்கள்

## 1. நிலச் சீர்திருத்தம்

**நி**லச் சீர்திருத்தம் ஒன்றே, சீனவின் நிலையை உயர்த்தி, நிலப் பிரபுக்கள் காலத்தில் அடக்கிவைக்கப்பட் டிருந்த மக்கள் சக்தியைத் தூண்டிவிட்டது. "சீன வெற்றியின் முழுப் பலமும் நாங்கிங்கிலோ, அன்றி வேறு பெரிய நகரத்திலோ இல்லை. அது தேச முழுவதிலு முள்ள மக்களின் உறுதியான நெஞ்சங்களில் நிறைந்துள்ளது" என்று சியாங்கேஷேக் ஒப்புக்கொண்டார். ஆனல், நிலப் பிரபுக்களிடமும் நகர மக்களிடமுமே அதிகாரத்தை வைத்திருந்தார். உண்மைச் சீனவின் உருவான உழவர் மக்களின் நம்பிக்கையை அவர் பெற்ருரில்லை. ஆனல், மாசேதுங் முழுதும் உழவர்களையே நம்பி யிருந்தார். "எதிர்ப்புப் போர் என்பது உண்மையில் உழவர் போர். எதிர்ப்புப் போருக்குப் பயன்படும் கருவிகளும், நாங்கள் வாழ்வதற்குத் தேவையான பொருட்களும் உழவர்களிடமிருந்தே கிடைக்கின்றன. கிராமங்களும் அதன் சுற்றுப் புறங்களுமே நகரங்களைத் தோற்கடிக்கும்" என அவர் எழுதினர்.

'' சீனப் புரட்சியும் கம்யூனிஸ்டும் ' என்ற நூலில் சீனுவின் இயல்பை அவர் விளக்கியுள்ளார்:

> இன்றையச் சீன சமூகம் ஏகாதிபத்தியத்தின் பிடியிலும், பிரபுக்களின் ஆட்சியிலும் சிக்குண்டு இருக்கின்றது. ஆகவே, ஏகாதிபத்தியமும் பிரபுக்கள் ஆட்சியுமே சீனப் புரட்சியின் பகைவர்கள். ... இந் நிலையில் சீனப் புரட்சியின் தன்மை, பாட்டாளி சோஸலிஸம் அன்று—பிரபுக்கள் ஜன நாயகமாகும். ...பல புரட்சி வகுப்புக்களால் அது அரசியல் புரட்சியாயிற்று. ஏகாதிபத்தியவாதிகள், தேசத் துரோகிகள் ஆகியோர்க் கெதிராகப் புரட்சிகர ஜனநாயக சர்வாதிகாரமாக அவ் வகுப்புக்கள் பின்னர் இணைந்தன. இணைந்து,சீன சமூகம், பிரபுக்கள் சர்வாதிகார சமூகமாக மாற்றப்படுவதை எதிர்த்தன. பொருளாதாரத் துறையில், அது முதலாளித்துவத் தொழில்களையும், ஏகாதிபத்தியவாதிகள் தேசத் துரோகிகள் ஆகியோரது ஸ்தாபனங்களையும் தேசியமாக்கப் பாடுபடுகின்றது; விரிந்த நிலப் பரப்புக்களை உழவர்களிடையே பகிர்ந்தளிக்கின்றது; நடுத்தர, சிறிய தொழில்களுக்கு உதவி செய்கின்றது; பெரிய விவசாயிகளின் பொருளாதாரத்தை அழித்துவிட முயற்சிப்பதில்லை.

இது தனித் தூய்மை யன்று. ஒரு மார்க்ஸிசவாதி, புரட்சிக்கு உழவர்களை நம்புதல் இதுதான் முதல் தடவை. ஆனால், மா வெறும் தத்துவவாதி யல்லர். சீனத் தொழிலாளர்கள் எண்ணிக்கையில் குறைவு; வெளிநாட்டு ஆதிக்கத்தின் செயல்களுக்காக நகரம் வந்தவர்கள் என்று அவர் கண்டார். சியாங்கிற்கும் மாவிற்கும் நடந்த போர் உழவர்களின் உள்ளத்தைக் கவரும் போர்தான். மா அதில் வெற்றி பெற்றார். தனது நிலச் சீர்திருத்தத்தால், உழவர் உள்ளங்களில் கம்யூனிஸ்டுக் கட்சி நிலைபெறுமாறு செய்தார்.

சீன உழவனின் வறுமை எண்ணுந் தரமன்று. நாற்பத்தொரு கோடி விவசாயிகளில், பத்தில் ஒரு பகுதியினரே 60 முதல் 70 சத வீத நிலத்தை உடையவராக இருந்தனர். மீதியில் 60 சத வீதம் ஏழை உழவர்களாகவும், நிலமில்லாத் தொழிலாளர்களாகவும் இருந்தனர். அவர்களிடம் இருந்த நிலம் மிகக் குறைவே. தங்கள் இரங்கத் தக்க வாழ்க்கையை நிலை நிறுத்த அவர்கள் அடிமையாக உழைத்தனர், அல்லது சிறு துண்டு நிலத்தை அதிகக் குத்தகைக்கு எடுத்துப் பயிரிட்

டனர். சராசரி 50 முதல் 70 சத வீதம் விளைவை நிலப் பிரபுவுக்குக் குத்தகையாகக் கொடுத்தனர். சில சமயங்களில் பிரபுக்கள் முழு விளைவையும் பறித்துக் கொள்வதுண்டு. உழவன் பசியால் உழன்று, பஞ்சத்திற்கும் தொத்து நோய்களுக்கும் இரையாகி வந்தான். ஆகவே, அவன் கொள்ளைக்கும், வழிப் பறிக்கும் தயாராக இருந்தான். வாழ்விற்கும் சாவிற்கும் இடையே ஊசலாடி வந்த மக்களின் ஆசை, நிலமில்லாதார்க்கு நிலப் பங்கீடு செய்த சீர்திருத்தத்தால் நிறைவேறிற்று.

உழவர்களுக்கு அளித்த வாக்குறுதியை மா மறந்து விட வில்லை. இன்று நிலச் சீர்திருத்தம் 31 கோடி மக்கள் வாழும் பகுதியில் நிறைவேற்றப்பட் டிருக்கின்றது. சீனு முழுமைக்கும் அது கொண்டு வரப்படும்.

சீன மக்கள் ஆலோசனை மாநாட்டின் தேசியக் குழுவிற்கு 1950 ஜூன் மாதம் மா விடுத்த அறிக்கையில், "நிலப் பிரபுக்க ளிட மிருந்து நிலத்தைப் பறிமுதல் செய்து, அதனை நிலமில்லாத அல்லது குறைந்த நிலமுள்ள உழவர்கட்குப் பங்கிட்டுக் கொடுப் பதே நிலச் சீர்திருத்தத்தின் அடிப்படை. நிலப் பிரபுக்கள் என்ற வகுப்பினரே சமூகத்தில் இல்லாதவாறு சுரண்டலுக்குக் காரண மான நிலவுடைமை, உழவர் நிலவுடைமையாக மாற்றப்பட்டது" என்று கூறுகின்றுர்.

பொருட்களை உற்பத்தி செய்யும் கிராம மக்கள் விடுதலை பெறவும், விவசாயப் பொருளுற்பத்தி பெருகவும், அதனுல் சீனுவின் தொழில் வளர்ச்சி யடையும் வழி ஏற்படவுமே நிலச் சீர்திருத்தம் கொண்டு வரப்பட்டது என விவசாயச் சட்டம் கூறுகின்றது. உற்பத்தியே குறிக்கோளாக இருந்ததால் விவசாயச் சட்டம் பணக்கார உழவர்களையும் நடுத்தர உழவர் களையும் பாதிக்கவில்லை. "மிச்சமான நிலத்தையும், பணக்கார உழவனின் சொத்தையும் நாம் விரும்பவில்லை; கிராமப் பகுதி களில் உற்பத்தியை மீட்டுத் தருவதற்காகவே பணக்கார உழவர்களுக்குப் பாதுகாப்பு அளித்திருக்கின்ருேம்" என்று மா அறிவிக்கின்றுர். நிலவுடைமையாளன், அல்லது பகுதி உரிமை யாளனுகக் கொஞ்சம் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துக் கொண்டு தானும் உழைத்துப் பண்ணையாட்களையும் வேலை வாங்குகிறவன் எவனே, அவனே பணக்கார உழவன் எனப்படு வான். நடுத்தர உழவன், சிறிது நிலத்திற்கு உடைமையாளன்

அல்லது குத்தகைக்கு எடுத்தவன்; தனது வாழ்க்கைக்குத் தன் உழைப்பையே நம்பி யிருப்பவன். பொதுவாக, பணக்கார-நடுத்தர உழவர்களின் நிலங்கள் தேவைப்படவில்லை.

நிலப் பிரபுக்கள், ஆலயங்கள், மடங்கள், தொழிலதிபர்கள், வணிகர் ஆகியோருடைய நிலங்களையும், உற்பத்திப் பொருட்களையும் பறிமுதல் செய்து சிறிது நிலமுள்ள, அல்லது நில மில்லாத உழவர்கட்கும், உழவைத் தவிர வேறு உற்பத்தித் தொழில் இல்லாதவர்கட்கும் அவை பங்கிடப்பட்டன. முதலாளித்துவ வகுப்பினரையும், பணக்கார உழவர்களையும், கம்யூனிஸ்டுகள் சீனப் பொருளாதார வரம்பு காரணமாக, நண்பர்களாக ஏற்றுக் கொண்டனர். தேச உற்பத்தியை நிலை பெறுத் தற்கு அவர்கள் தேவைப்பட்டார்கள். புதிய ஜனநாயகம் தொழிலாளர் சர்வாதிகாரமாக மாறும் பொழுது அவர்கள் இருக்க மாட்டார்கள்.

பயிர் செய்யப்படும் 24 கோடி ஏக்கர் நிலத்தில் பாதி வினியோகத் திட்டத்தில் கொண்டு வரப்பட்டது. மக்கள் எண்ணிக்கைப்படியே நிலமும் வினியோகிக்கப்பட்டது. உழவனுடைய குடும்ப அளவையும், அவன் வசிக்கும் இடத்தையும் பொறுத்து அவனது பங்கு இருக்கும். ஆகவே, சராசரி நிலத்தின் உடைமை இடத்திற்கு இடம் மாறுபடும். வட கிழக்கே முக்டன் பக்கத்தில் ஆளுக்கு 2·7 மோக்களும், வடக்கே பீகிங் அருகில் 1·9 மோக்களும், தெற்கே 1·3 மோக்களுமாக வழங்கப் பட்டன. (ஆறு மோக்கள் கொண்டது 1 ஏக்கர்.) அச் சிறிய வயல்கள் நிலப் பசியைத் தீர்க்கலாம்; ஆனால், பொருளாதார வாழ்க்கைக்குப் போதுமானவை யல்ல. அதனால் உற்பத்தி பெருகவோ, மக்களுக்கு முழு வேலை கிடைக்கவோ இல்லை.

உழவனின் ஏழைமையால் சீனவில் விவசாயம் சிறிய தோட்ட அளவில் பயிர் செய்யப்பட்டு வந்தது. நிலச் சீர்திருத்தமும் உற்பத்தியைப் பெருக்க உதவவில்லை. அதிகமான வாரம் குறைக்கப்பட்டதும், நிலப் பிரபுக்களின் பிடுங்கல் ஒழிக்கப் பட்டதும் தவிர, ஏழை உழவர்களின் இன்னல் தீர்க்கப்பட வில்லை. இவற்றிற்குப் பதிலாக உழவன் தன் விளைச்சலில் 18 சத வீதத்தை நிலவரியாக அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டும். (இவ் வரி ஒரு குறிப்பிட்ட வீதம் என்று என்னல் சொல்ல முடியாது. பீகிங்கிலும், வேறு சில இடங்களிலும் அது

13 சத வீதம் எனக் கேட்டேன். கம்யூனிஸக் கொள்கை யடிப் படையில் இரு அமெரிக்கர்களால் நடத்தப்பெறும் 'சீன மாத வெளியீடு' என்ற பத்திரிகையில் 27 சத வீதம் எனக் குறிக்கப் பட்டிருந்தது.) வரி எவ்வளவாக இருப்பினும், கிராமத்தில் உழவன் நன்ருக உண்டு, உடுத்து, மகிழ்ச்சியுடன் காணப்படு கின்ருன். ஆகவே, முன்னைவிட விளைச்சலில் பெரும் பகுதியை அவன் தனக்கு வைத்துக் கொள்கின்ருன்.

விவசாயப் பொருட்கள் பெருகினுல்தான்—புதிய சீனுவின் தொழில் வளர்ச்சி பெற்ருல்தான்—நாடு முழுவதிலு முள்ள மக்களின் வாழ்க்கைத்தரம்உயர்த்தப்பட்டால்தான்—சோஸலிசப் பாதையில் அடியெடுத்து வைத்தால்தான் சீன மக்களின் வறு மையை அகற்ற முடியும் எனக் கம்யூனிஸ்டுகள் ஒப்புக்கொள்கின் றனர். விவசாயப் பொருளுற்பத்தி பெருக வேண்டுமானுல் எருக் களும், யந்திரங்களும் பயன்படுத்தப்பட வேண்டும். ஆனுல், பண்ணையாளாகவிருந்து, உடைமையாளனுக மாறிய உழவனிடம் அத்தகைய முறைகளுக்கு வழியில்லை. அத்தகைய ஆழ்ந்த விவசாயம் செய்வதற்குத் துண்டு நிலவுடைமைகள் மாறி, கூட்டுறவு மூலமோ, ஒன்று படுத்தல் மூலமோ அவை பெரிய வயல்களாகச் செய்யப்பட வேண்டும். நிலத்தின் மேல் மிகுந்த பற்றுள்ள உழவர்களிடம் இந்த முறை பொருந்துமா ?

நிலச் சீர்திருத்தத்தால் ஏற்படும் அரசியல் விளைவுகள், சீன சமூகத்தில் மிகப் பெரிய மாறுதல்களைத் தோற்றுவிக்கின்றன. அதனை அமுலுக்குக் கொண்டுவந்த முறை, இது வரையிலும் அடங்கிக் கிடந்த உழவனைக் கிராம ஆட்சியாளர்கட்கு எதிராகப் புரட்சி செய்யத் தூண்டியிருக்கின்றது. நிலச் சீர்திருத்தப் படையின் பயிற்சி பெற்ற தளபதிகளால் நடத்தப்படும் 'குற்றச் சாட்டுகள்', 'வெறுப்பாகப் பேசுதல்', 'போராட்டம்' ஆகிய வற்றின் மூலமாக அடங்கிக் கிடந்த எதிர்ப்புணர்ச்சியை உழ வர்கள் கொட்டினுர்கள்; நிலப் பிரபுக்களை அவர்கள் பழித் தார்கள்; எதிர்க்க முடியாத தங்கள் விதியை நம்பவைத்த தெய்வங்களையும், மதத்தையும் இழிவாகப் பேசினுர்கள். அம் மாற்றத்திற்காகக் குருதி கொட்டப்பட்டது. கொடுமையான குற்றங்களுக்குத் தாங்கள் பொறுப்பல்ல என்ற காரணத்தால், சில நிலப் பிரபுக்கள் அவர்களின் கோபத்தினின்றும் தப்பி னுர்கள். பிற உழவர்களுக்கும் வழங்கப்பட்டதுபோல் அவர்

களுக்கும் ஒரு பங்கு நிலம் கொடுக்கப்பட்டது. அதனல் உழைத்து அவர்கள் திருந்துவார்கள் எனக் கருதப்பட்டது. இதனிடையே உழவர் சங்கங்கள் அமைக்கப்பட்டன. அவற்றின் மூலமாகப் பீகிங் அரசாங்கம் நாட்டின் நடுவண் ஆட்சியை, சீன வரலாறே கண்டிராத வண்ணம் வலுப்படுத்தியது. தனது கனவு பலித்தது கண்ட உழவன், கம்யூனிஸ்டுக் கட்சியை நம்பி, அதன் ஆணைகளை நிறைவேற்றுகின்ருன்.

நிலச் சீர்திருத்தம் விளைபொருட்களைப் பெருக்கும். விளை பொருள்கள் மிகுதலால் தொழில் வளர்ச்சி பெறும். அதனல், மக்களின் வாழ்க்கைத் தரம் உயரும். இதுவே சீர்திருத்தத்தின் நோக்கம். ஆகவே, விளைபொருட்கள் அதிகரிப்பதாகவே அவர்கள் கூறுகின்றனர். பயிர்த் தொழில் வருமானம் மிஞ்சியே தேசத்தின் தொழில் பெருக மூலதனம் உருவாகும். ஆகவே, அக் கூற்றை மெய்ப்பிக்கப் புள்ளி விபரங்களைக் காட்டுகின்றனர். ஆனல், நாட்டின் பொருளாதார நிலையை மதிப்பிடுவதற்கு அப் புள்ளி விபரங்கள் பயன்படா. அவ் விபரங்கள் கழிந்த ஆண்டின் சத வீதமாகவே தரப்படுகின்றன. ஆகவே, உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களின் அளவை அறிந்து கொள்ள முடியாது. ஒரு நாட்டில் அதன் புள்ளி விபரங்களைச் சேகரிக்கும் நிறுவனம் இல்லையெனில், அதன் புள்ளி விபரங்கள் யாவும் உத்தேசமாகவே இருக்கும். ஆனல், சீனவில் அவ் விபரங்களில் அரசியல் நோக்கம் அடங்கி யிருக்கின்றது. அரசாங்கத்தின் மூலமாகவே முன்னேற முடியும் என அவர்கள் மக்களிடம் உறுதியாகக் கூறுகின்றனர். இந்தியனகிய நான் அப் புள்ளி விபரங்களைத் தெரிந்து கொள்வதில் ஆவலுடையவனக இருந்தேன், ஆசிய நாடுகளின் பசித்த மக்கள் கம்யூனிஸப் பாதையில் சென்று தங்கள் துயர் நீக்க அவை உதவலாம் என்று.

சீன தேசச் சிறப்பாளர் மூவரில் மாவிற்கும், சூடேக்கும் அடுத்தபடி சிறப்பு வாய்ந்தவர், பீகிங் நகரசபைத் தலைவர் பெங் சென். அவர்தான் கட்சியின் காப்பாளர். கண்டிப்புப் பேர்வழி. வழவழப்பாக மழித்த முகம். பருமனன உடல். ஆணித்தரமாகப் பேசுகின்ருர். மார்க்ஸிசத்திலும், லெனினிசத்திலும் பக்தியோடு இருக்கின்ருர். பீகிங் நகர சபைத் தலைவராகச் சீன அரசாங்கத்தின் முக்கிய நிலையில் இருக்கின்ருர். கட்டளை பிறப்பிக்க வேண்டிய கடும் வேலைகளை நிர்வகிப்பதற்கும், ஸ்தாபனத்தின் கட்டுப்பாட்டை நிலைநாட்டுதற்கும் அவரையே விடாமல் அழைக்கின்ற

னர். வடக்கே நிலச் சீர்திருத்தம் செய்வதற்கு அவர் இருந்தார் 1952 பெப்ருவரியில், அரசாங்கத்தையும் தொழிலேயும் தூய்மைப் படுத்தும் சான்பான்வுபான் இயக்கத்திற்குத் தலைமை தாங்க அழைக்கப்பட்டார்.

சீனுவிற்கு வந்திருந்த வெளிநாட்டுக் குழுவினரிடையே பேசும்பொழுது, நிலச் சீர்திருத்தத்தின் பயனுகச் சீனுவிடம் ஏற்றுமதி செய்யும் அளவிற்குத் தானியம் எஞ்சியுள்ளது எனக் கூறினுர். கழிந்த எழுபத்து மூன்று ஆண்டுகளாக உணவு பற்ருமல் இருந்தது. இன்று இரண்டு ஆண்டுகளில் விளேச்சல் பெருகியுள்ளது. முதல் ஆண்டில் 14 சத வீதமும், இரண்டாம் ஆண்டில் 8 சத வீதமும் உற்பத்தி உயர்ந்துள்ளது. 1949-ஆம் ஆண்டைவிட 22 சத வீதம் உற்பத்தி பெருகியதால், பற்ருக் குறையால் உணவுப் பொருள் இறக்குமதி செய்த சீனு, உணவுப் பொருள் ஏற்றுமதி செய்யும் நாடாக மாறியுள்ளது.

நான் இயல்பாகவே சந்தேகப் பிராணி; எதைப் பற்றியும் அதிக ஆர்வம் காட்டுவ தில்லே. என்னுடைய நாட்டிலும் வறுமையை நான் கண்டும் அனுபவித்து மிருக்கின்றேன். அவர்களது கூற்றை ஏற்றுக் கொள்ள விரும்பினேன். அக் கூற்று மெய்யாளுல், பசியால் வாடும் ஆசிய மக்களுக்கு அதனுல் நம்பிக்கை பிறக்கும். ஆனுல், நான்ஹன்சேன் பணப் பெருக்கக் கட்டுப்பாட்டைப் பற்றிப் பேசும்பொழுது கூறியதை நினேவு கூர்ந்தேன். பணப் பெருக்க நாளில் சீனுவின் விளேபொருளுற்பத்தி 30 சத வீதம் குறைந்துவிட்டது. இப்பொழுது நாணயம் உறுதிப்படுத்தப்பட்டதும் 22 சத வீதம் உற்பத்தி பெருகியது அசாதாரணமான தன்று. மக்களின் பங்கு நிர்வாகியான நான்ஹன்சேனுக்கு உண்மை தெரிந்திருக்க வேண்டும். அவர் கருத்துப்படி 1951-இல் உணவு தானிய உற்பத்தி 1936-இன் 92 சத வீதமே. 1936-இல் விளேந்தது சிறப்பான விளேச்சல் எனக் கருதப்படுகின்றது. மஞ்சூரியா விளேவையும் சேர்த்துத்தான். ஆனுலும், 1936-இல் சீனு உணவுப் பொருள் இறக்குமதி செய்ய வில்லே. தானியங்களின் விளேச்சலும் சதமானமும் கீழ்வருவாறு:–

| | | | | |
|---|---|---|---|---|
| நெல் | 1951-இல் | 99·4 | 1936-இல் | 100. |
| கோதுமை | 1951-இல் | 88·5 | 1936-இல் | 100. |
| பருத்தி | 1951-இல் | 133·0 | 1936-இல் | 100. |
| புகையிலே | 1951-இல் | 130·5 | 1936-இல் | 100. |
| சணல் | 1951-இல் | 227·1 | 1936-இல் | 100. |

சீனுவிடம் ஏற்றுமதி செய்யும் அளவிற்குத் தானியங்களின் விளைச்சல் பெருகவில்லை என்பதை மேற்கண்ட எண்கள் காட்டுகின்றன. மாருக, 1936-க்கும் 1952-க்குமிடையே மக்கட்டொகை பெருகியிருப்பதால் பற்றுக்குறை மிக அதிகமாக இருக்க வேண்டும். ஆகவே, சீனு எங்ஙனம் ஏற்றுமதி செய்யமுடியும் என வியக்கின்றோம். 1951-இல் சீனு, இந்தியாவிற்கு 500,000 டன் அரிசியும் தானியங்களும் அனுப்பியது. 1952-இல் 150,000 டன் ஏற்றுமதி செய்தது. சீன மக்களின் உணவைக் குறைத்து, அரசியல் நோக்கத்துடன் அவை ஏற்றுமதி செய்யப்பட்டன. சீனுவின் சில பகுதிகள் பஞ்சத்தால் வாடுகையில் சீனு இந்தியாவிற்கு உணவு ஏற்றுமதி செய்கின்றது என ஹாங்காங் செய்தி வெளியிட்டது.

உண்மை எப்படியிருப்பினும், நான் சென்ற பல நகரங்களில் ஏராளமான பொருள்கள் கிடைத்ததாகப் பட்டது. உணவுப் பங்கீடு இல்லை ; எத்தகைய கட்டுப்பாடும் இல்லை. உணவுப் பொருள்களின் விலை இடத்திற்கு இடம் வேறுபட்டது. போக்குவரவுக் கட்டுப்பாட்டாலும், மக்கள் அவ்வப் பகுதிப் பொருளாதாரத்தைப் பேணவேண்டும் என்ற முயற்சியாலுமே அவ் விலை வேறுபாடுகள் இருக்கின்றன.

சீன அரசாங்கம் அதற்குக் கிடைக்கும் வருமானத்தின் எஞ்சிய உணவுப் பொருளையே ஏற்றுமதி செய்கின்றது. நிலவரி தானியமாகவே வசூலிக்கப்படுகின்றது. இவ் வசூல் நகரங்களிலுள்ள விவசாயிக ளல்லாதார்க்குப் பயன்படுத்தப்படுகின்றது. சான்ருக, 1950-இல் அரசாங்கம் 8 கோடி மக்களுக்கு உணவு தானியங்கள் வழங்கவேண்டியிருந்தது.1949-இல் பஞ்சப் பிரதேசமாக இருந்த இரண்டு கோடி ஏக்கர் 1952-இல் எழுபது லட்சம் ஏக்கராகக் குறைக்கப்பட்டது. அதனுல் அரசாங்கம் வழங்க வேண்டிய தானியமும் குறைந்தது. சிக்கனமான வாழ்க்கை, உட்கொள்ளுவதைக் கட்டுப்படுத்தல், வீணுவதைத் தடுத்தல் ஆகியவை அரசாங்கத்திற்கு உதவியாக இருந்தன. எல்லாத் தேவைகளையும் நிறைவேற்றிய பின்னர் எஞ்சும் உணவுப் பொருளே ஏற்றுமதி செய்யப்படுகின்றது.

விளைபொருள் மிகுதிக்கு முக்கிய காரணம் சீனுவில் தற்பொழுது நிலவும் சமாதான வாழ்க்கையே. அமைதியும் ஆணையும் காக்கப்படுகின்றன. நாட்டுப்புறங்களில் போர் வெறி பிடித்த கூட்டத்தவரின் ஆயுதந் தாங்கிய மனிதர்களும்,

கொள்ளைக்காரர்களும் இல்லை. இரகசியச் சங்கங்களால் ஏற்படும் தொல்லையு மில்லை. உழவர்கள் கொலை, ஆட்களைக் கவர்தல் முதலிய அச்ச மெதுவுமின்றித் தங்கள் வேலைகளைச் செய்து வருகின்றனர். தன்னுடைய உழைப்பினுல் அவனுக்குப் பணம் மிஞ்சுகின்றது. அதனுல் அவன் பல பொருட்கள் வாங்க முடிகின்றது; எல்லாவற்றுக்கும் மேலாக நிலம் அவனுடையதாக இருக்கின்றது; உண்ணுவதற்குக் கொஞ்சம் அதிகமாகக் கிடைக்கின்றது; உடுப்பதற்குக் கொஞ்சம் துணி கூடுதலாக உள்ளது. ஆகவே, அவன் மகிழ்ச்சியுடன் இருக்கின்ருன்.

முன்பு இவன் வணங்கிக் கீழ்ப்படிந்த தெய்வங்களிடம் இப்பொழுது அவனுக்குப் பயமில்லை. ஏழையாக இருத்தல் அவனுடைய மாற்ற முடியாத தலைவிதி என்று அவன் எண்ணுவதில்லை. நூற்ருண்டுகளாகப் புத்தர் கொடுக்க மறுத்தவற்றை அவன் தனது முயற்சியால் பெற்றுக் கொள்கின்ருன். பழைய கோவில்களும், விக்கிரகங்களும் அகற்றப்பட்டு, அவ்விடங்களில் அவனது மெலிந்த உடலுக்கு வலிமையளித்த கம்யூனிஸ்டுக் கட்சி நிறுவப்பட்டுள்ளது. இதைப் பெறுவதற்கு அவன் தன்னுடைய சக்திக்கு மீறி உழைக்கவில்லை. நிலச் சீர்திருத்தத்தின் உண்மைகள் அவனை மிகக் கவர்ந்தன. அவன் ஆலயங்களிலுள்ள விக்கிரகங்களை அகற்றினுன். அவற்றைப் பள்ளிக் கூடங்களாகவும் பொது மன்றங்களாகவும் மாற்றினுன்.

நில உரிமை சீனுவில் எத்தகைய மாற்றம் விளைத்துள்ளது என்பதை நாம் பார்க்கின்ரேம். நிலக்கரிச் சுரங்கமுள்ள தாதுங் என்ற நகரத்தின் பழைய கோவிலுக்கு நான் சென்றேன். சீனுவின் புத்தராலயங்களைப் போன்று அதுவும், வர்ணங்களாலும் பொன் பூச்சாலும் அழகுடன் விளங்கிற்று. அங்குள்ள மடங்களின் சந்நியாசிகள் எல்லாச் சடங்குகளையும் நடத்தினர். அத் துறவிகள், யாரும் இப்பொழுது தொழுவதற்கு வருவதில்லை யென்ருர்கள். ஆலயத்திற்கு விடப்பட்ட நிலத்தில் உழைத்தும் அரசாங்கம் அளிக்கும் உதவியைக் கொண்டும் தங்கள் வாழ்க்கையை நடத்தினர். அது போன்ற பல ஆலயங்கள் வேறு செயலுக்குப் பயன்படுத்தப் படுகின்றன. தாதுங் ஆலயம் பதினென்ரும் நூற்ருண்டின் வரலாற்றுக் காலக் கோவில். ஆகையால், அது அப்படியே விட்டுவைக்கப்பட்டுள்ளது.

தாதுங் ஆலயத்தில் சாம்பிராணி பத்தித் துண்டுகளைப் பார்த்தோம். புத்தர் தொழுகை இன்னும் அனுமதிக்கப் படு

கின்றதா என்று ஐயுற்றோம். பலர் அக் கோயிலுக்கு வந்தனரா என அத் துறவியைக் கேட்டோம். 'மிகச் சிலரே தொழுவதற்கு வருகின்றனர்; பலர் வருவதற்கு அஞ்சுகின்றனர்' என அவர் நடுக்கத்துடன் கூறினார். அச் சமயம் எங்கள் மொழிபெயர்ப்பாளர் அருகே நெருங்குவதைப் பார்த்தார். அது வரைக்கும் சீனமொழி தெரிந்த எங்கள் குழுவினருள் ஒருவர் மொழி பெயர்த்தார். இப்பொழுது அத் துறவியின் கதை மாறுபட்டது. 'இந்நாளில் யாரும் தொழுவதற்கு வருவதில்லை; சாம்பிராணி பத்திக் குச்சிகள்தாம் எரித்ததன் மிச்சம்' என்றார். பெற்றோர்க்குக் கீழ்ப்படிதல், பெண்கள் மீது ஆண்கள் செலுத்தும் அதிகாரம் ஆகிய பழக்கங்கள் நிலப் பிரபுத்துவ ஒழிப்பால் மறைந்துவிட்டன. பிற இடங்களில் வேறு பல காரணங்களால் குடும்ப உறவு மாறுபட்டுவிட்டது. ஆனால், நாட்டுப் புறங்களில் நிலச் சீர்த்திருத்தமே குடும்பப் பற்றுதலை அறுத்துவிட்டது. பெண்கள் பள்ளிக்குச் சென்று எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டனர். அவர்கள் குழந்தைகளைப் போன்று தங்கள் திறனைக் காட்ட ஆர்வம் கொண்டுள்ளனர். எங்களைச் சுற்றிக் கூடியிருந்த கூட்டத்தில் அவர்கள் தங்கள் சாதனைகளைக் காட்டிப் பேச அவாவுற்றனர். "ஏழை மனிதனுக்குப் பேசும் உரிமை யில்லை" என்று ஒரு பழமொழி உண்டு. ஆனால், புதிய சீனா தலைநிமிர்ந்து பேசுகின்றது. 'உற்பத்தி பெருகிவிட்டது ; அல்லது எங்கு நோக்கினும் செழிப்புக் காணீர்' என்று பறைசாற்றுவதைவிட, இதுவே சிறப்பு வாய்ந்தது.

'கிராமப் பகுதிகளில் உற்பத்தி மீட்சி' என்பது பற்றி மா பேசியிருக்கின்றார். விளைபொருள் உற்பத்தியைப் பெருக்கி, அதன் மூலம் தொழில் வளர வேண்டுமென்பதே விவசாயச் சீர் திருத்தச் சட்டத்தின் நோக்கமாகும். சீனர்களாலேயே கொடுக்கப்பட்ட புள்ளி விவரங்களின்படி, தேசியச் சேமிப்பிற்காக எதுவும் மிஞ்ச முடியாது; சீனாவின் தொழிலுக்கு வேண்டிய மூலதனமும் பெருகாது என்று நான் மெய்ப்பித்துள்ளேன். நிலச் சீர்திருத்தம் என்பது ஓர் அரசியல் புரட்சி இயக்கம்; பொருளாதார மாற்ற மன்று. கூட்டு விவசாயத்தை நோக்கி முன்னேறுவதிலும் சில தடைகள் உள. அதிலும் தெற்கே வயல்கள் மிகவும் சிறியன. உழவனின் தனித் தன்மையும், அவனுக்கு நிலத்துடன் உள்ள நெடுநாள் தொடர்பும், பெருவாரியான கூட்டு விவசாயத்தை ஏற்றுக்கொள்ள மறுக்கின்றன.

சீனத் தலைவர்கள் சிறு நிலவுடைமைகள் பெருகி வருவதனால் உள்ள ஆபத்தை உணர்ந்திருக்கின்றனர். ஆனால், விவசாயி, யந்திரச் சாகுபடியால் கிட்டும் நன்மைகளை உணர்ந்து, கூட்டு விவசாய முறையை ஏற்றுக் கொள்வான் என அவர்கள் நம்புகின்றனர். தொழிலுக்கு மூலதனம் வளர வேண்டுமானால், யந்திரச் சாகுபடி செய்யவேண்டும் என மக்கள் வங்கி (Bank) அதிகாரி நான்ஹன்சேன் நம்புகின்றார். ஆனால், இன்று மூலதனம் சேர, சேமிப்பு இல்லை. இந்தியாவிற்கு ஏற்றுமதி செய்யப்பட்ட உணவு தானியங்கள் மிகக் குறைவே. அதிலிருந்து விவசாய மிச்சத்தை நிர்ணயிக்க முடியாது.

நிலச் சீர்திருத்தத்தால், அதன் பொருளாதார நோக்கம் நிறைவேறவில்லை யாயினும், அதன் சமூக நோக்கம் நிறைவேற்றப்பட்டது. அதாவது, உழவனின் அடிப்படைத் தேவை நிறைவேற்றப்பட்டது. இன்று அவனுடைய எல்லாத் தேவைகளும் நிறைவேற்றப்படாம லிருக்கலாம். அவனுக்கு முன்னிலும் அரிசி கொஞ்சம் அதிகமாகக் கிடைக்கலாம். அதனால் அவனது நெடுநாள் கனவு நனவாயிற்று. ஆகவே, சீனாவின் உழவர்கட்குப் புதிய நம்பிக்கை பிறந்திருக்கிறது. அந் நம்பிக்கை தான் மாவின் அரசாங்கத்திற்குத் துணையாக உள்ளது.

'அரசருக்கு இன்றியமையாத மூன்று எவை?' எனக் கன்பூசியஸிடம் கேட்கப்பட்டது. அவ் அறிஞர், "போதுமான உணவு, தக்க படை பலம், அரசரிடம் மக்களுக்குள்ள குன்றாத நம்பிக்கை" எனக் கூறினார்.

அம் மூன்றனுள் மிக இன்றியமையாத இரண்டு எவை எனக் கேட்ட பொழுது, அவர் பதிலளித்தார், "படைபலம் நீங்கிய மற்றிரண்டும்" என்று.

அவ் விரண்டனுள் எது முக்கியமானது என்று மீண்டும் கேட்டபோது, கன்பூசியஸ், "மக்கள் தங்கள் உணவை இழப்பினும், மன்னன் மீதுள்ள நம்பிக்கையை இழத்தலாகாது" என்றார்.

சீன மக்களிடம் அந்த நம்பிக்கை தற்காலிகமாகவேனும் உளது!

## 2. கிராமக் காட்சி

நான் இரு கிராமங்களைப் பார்வையிட்டேன். அவற்றில் நிலச் சீர்திருத்தம், வெவ்வேறு விதமான பொருளாதார அபி விருத்தியைக் காட்டியுள்ளது. ஒரு கிராமம் பீகிங் அருகில்; மற்றொன்று வடகிழக்கில் முக்டன் அருகே அமைந்துள்ளது. நான் சென்ற இரு முறையும் அக் கிராமங்கட்கு அழைத்துச் செல்லப்பட்டேன். புதிய பொருளாதாரம் செயற்படும் காட்சிக் கிராமங்கள் என அவற்றை ஊகிக்கலாம். முதல் கிராமம் நகரத்தி லிருந்து சில மைல் தூரத்தில் உள்ளது. அங்கிருந்துதான் நகரத்திற்குக் காய்கறிகொண்டு வரப்படுகின்றது. வயல் நடுவே யுள்ள புழுதிபடிந்த சாலை வழியாக அக் கிராமத்தை அடைந் தோம். எங்களை வரவேற்க ஊரார் திரண்டு வந்தனர். நாங்கள் இறங்கியதும் வழக்கம்போல் கைதட்டி எங்களை வரவேற்றனர். எங்களைச் சூழ்ந்து கொண்டு, கை குலுக்கினார்கள். எங்களைக் கண்டதால் பெருகிய மகிழ்ச்சியை அவர்கள் முறுவல் காட்டிற்று. நாங்களும் அம் மாதிரியே கைதட்டி எங்கள் அன்பைக் காட்டி யிருக்க வேண்டும். ஆனால், அவ் வழக்கத்தை நாங்கள் கற்றுக் கொள்ளவில்லை. அதனால் வெட்கப்பட்டோம். குழுமியிருந் தோரில் ஆண்கள் நீல உடை யணிந்திருந்தனர்; பெண்கள் பூப்போட்ட பஞ்சுடையைப் பழைய முறையில் அணிந்திருந் தனர். பல குழந்தைகள் சிவப்பு நிறத்தில் கழுத்து மூடிய உடையில் காட்சி யளித்தன.

அவ் வுழவர்கள் எங்களுட னிருப்பதை விரும்பினாலும், அங்கு நெடுநேரம் இருக்க அனுமதிக்கப்படவில்லை. விரைவாக நாங்கள் உழவர் சங்க அலுவலகத்திற்கு அழைத்துச் செல்லப் பட்டோம். எங்களைச் சூழ்ந்திருந்த மக்களும் முன்னேற்பாடு போல் நழுவிவிட்டனர். சில குழந்தைகள் ஆச்சரியத்துடன் எங்களை உற்றுப் பார்த்துக்கொண் டிருந்தன. அவை எங்களைக் காணவும், எங்களைப் பற்றி மேலும் தெரிந்து கொள்ளவும் விரும்பின. எங்களிற் சிலர், அலுவலகத்தை விட வேனிற் காலக் கதிரவன் ஒளியி லிருக்க எண்ணி வெளியே வந்தோம்; அங்கிருந்த குழந்தைகளுடன் பேச எண்ணினோம்; அக் குழந்தைகளைப் பாடுமாறும், ஆடுமாறும் வேண்டினோம். ஆனால், அதுவும் தடைப்பட்டது. அக் குழந்தைகளும் மௌன மாகச் சென்றுவிட்டன.

சீனக் குழந்தைகள் உலகத்திலேயே மிகவும் கவர்ச்சிகரமான குழந்தைகள். அவைகளின் வட்டமான முகமும், தாழ்ந்த மூக்கும், சிறிய கண்களும், பலமும் ஆரோக்கியமும் இல்லாத உடம்பை மறைத்தன. அக் குழந்தைகள் அன்பும், எங்களைத் தெரிந்து கொள்வதில் ஆர்வமும் உடையவைகளாக இருந்தன. ஆனால், வெளிநாட்டாருடன் உடன்பிறந்தார் போல் கலந்து மகிழ அனுமதிக்கப்படவில்லை. என்ன பயத்தில் திடீரென அவைகள் சென்றுவிட்டன என்று எனக்குப் படவில்லை. அவை சென்றதும் மொழிபெயர்ப்பாளர் வந்து, புதிய சீனாவின் களிப்பையும் இன்பத்தையும் பற்றிக் கூறினர். எங்களுக்கும் சீன மக்களுக்கும் இடையே இருக்கும் புலனாகாத தடையைக் கடத்தல் எளிதன்று.

அந்தக் கிராமத்தின் மக்கள் தொகை 2050. அங்குள்ள 430 குடும்பங்கள் 2190 மோக்கள் (365 ஏக்கர்) நிலம் வைத்திருந்தன. தலைக்கு 1·7 மோ இருந்தது. நிலச் சீர்திருத்தத்தின் முன் அங்கே 20 நிலப் பிரபுக் குடும்பங்கள் 1435 மோக்களுடன் வாழ்ந்தன. அவற்றில் சிலரிடம் இன்று உழவனுக்குள்ள அளவு நிலம் இருந்தது. மற்றவர்கள் தங்கள் உழவுத் தோழர்களை நெடுங்காலம் கொடுமைப் படுத்தியதற்காக நிலங்களை இழந்தனர். பீகிங் அரசாங்கம் 126 கோடி யுவான்கள் அக் கிராமத்திற்குக் கடனாகக் கொடுத்துள்ளது. பத்து லட்சம் யுவான்கள், 45 டாலர்கள் அல்லது 16 பவுன்களுக்குச் சமம்.

அக் கிராமத்தில் நிலச் சீர்திருத்தம் 1950-லேயே கொண்டு வரப்பட்டது. பல உழவர் வீடுகளில் அதன் நோக்கத்தின் அறிகுறி காணப்பட்டது. அவர்களிடம் சிறிய கடிகாரங்களும், பீங்கான் சாமான்களும் இருந்தன. நிலப் பிரபுக்களிட மிருந்து பறிமுதல் செய்யப்பட்ட பொருட்களாக அவை இருக்கவேண்டும். ஒரு குடும்பத்தில் காதுகளில் மாட்டிக் கேட்கும் ரேடியோ ஒன்றிருந்தது.

நில்ச் சீர்திருத்தத்தின் பின்னர் விளைச்சல் உயர்ந்துள்ளது. ஏனெனில், உழவர்கள் வருந்தி உழைக்கின்றனர். புதிய நீர்ப்பாசன வசதிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன என்று ஜில்லா அதிகாரிகள் கூறினர். வண்டிகளும், அவற்றை இழுக்கும் விலங்குகளும் கிராமத்திற்கு வாங்கப்பட் டுள்ளன. புதிய கிணறுகள் தோண்டப்பட் டுள்ளன. விடுதலைக்குப் பின்னர் அக் கிராமத்தில் ஆதாரப் பள்ளி ஒன்று ஏற்படுத்தப்பட்

டுள்ளது. அதில் நான்கு வகுப்புகள் உள்ளன. 160 குழந்தை களும் 420 முதியவர்களும் படித்து வந்திருக்கின்றனர். தேசபக்திப் பிரச்சாரம் நடைபெற்றது. கொரிய உதவிக்கும், அமெரிக்க எதிர்ப்பு நிதிக்கும் உழவர்கள் 54·5 லட்சம் யுவான்கள் நன்கொடை யளித்துள்ளனர். இப்பொழுது உழவன் குடும்பம் ஒன்று ஆண்டு ஒன்றுக்கு 2 கோடி யுவான்கள் சம்பாதிக் கின்றது.

மேற்கூறிய குடும்ப வருமானத்தை நம்ப முடியாது. சீனர்கள் சாதாரணமாக லட்சத்தைப் பத்து லட்சமாகப் படிக் கின்றனர். 2 கோடி யுவான்கள் என்பது 20 லட்சமாக இருக்க லாம். ஏனெனில், அக் கிராம உழவர்களின் வாழ்க்கைத் தரம், இந்திய உழவ னொருவனின் வாழ்க்கைத் தரத்தை விடக் குறைவே. இந்திய உழவன் அருகிலிருக்கும் நகரத்திற்குத் தனது தானியத்தை விற்பதால் அவன் வருமானம் அதிகமே.

அக் கிராமத்தின் வீடுகள் எல்லாம் இரண்டு அறைகள் கொண்டவை. ஒவ்வொரு வீட்டிலும் இரு குடும்பங்கள் வசித்தன. வெளியே இருக்கும் அறையில் குடும்பத்திற்கு ஒன்று வீதம் இரு மண் அடுப்புகள் இருந்தன. தங்கும் அறை யில் சுவர் ஓரங்களில் எதிர் எதிராக இரு மண் திண்ணைகள் இருந்தன. ஒவ்வொரு குடும்பத்திற்கும் அதுதான் தங்குமிடம். அத் திண்ணையின் மீது பாய் விரிக்கப்பட் டிருந்தது. பகல் வேளை களில் அவர்களின் சொத்தான துணிமணிகள், படுக்கை யாவும் அத் திண்ணைமேல் ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட் டிருந்தன. இரவில் குடும்பத்தார் யாவரும் அதன் மேல் படுத்துத் தூங்கி னார்கள். குளிர் காலத்தில் அத் திண்ணையின் கீழ் நெருப்பிட்டுச் சூடாக்கிக் கொள்வார்கள்.

பொருளாதாரச் சமன் செய்தலினல் பலருடைய வாழ்க்கைத் தரம் உயர்ந்தது என்பது தெளிவாயிற்று. உற்பத்தி பெருகி விட்டதாகக் கூறப்பட்டது. ஆனல், போர்க்காலத்தில் சீனவின் விவசாய உற்பத்தி 30 சத வீதம் குறைந்திருந்தது என்பதை நாம் மறத்தலாகாது. உற்பத்திப் பெருக்கத்தின் புள்ளி விபரங் களை மாவட்ட அதிகாரி விளக்கினர். ஆனல், நாடு முழுவதற்கும் பீகிங்கில் கொடுக்கப்பட்ட புள்ளி விவரங்கள் உற்பத்திக் குறைவேயே காட்டுகின்றன. கிராமங்களில் தரப்பட்ட விபரங்களைவிட, இதுவே உண்மையாகவும் இருக்கலாம். ஓரிரு

முக்கிய கிராமத்தார்கள் எங்களுடன் அனுப்பப்பட்டனர். அவர்கள் விடுதலைக்கு முன்னும் பின்னும் உள்ள நிலைமைகளைப் பற்றிக் கூறினர். ஆனால், அவர்கள் பெரும்பாலும் போர்க்கால நிலையையும் இன்றைய நிலையையும் ஒப்பிட்டுச் சொன்னார்கள். புதிய சீனாவின் பத்திரங்களின் வரலாறு 1946-47-க்கு முன் எழுதப்படவில்லை.

வடகிழக்கில் முக்டன் நகரிலிருந்து பதினைந்து மைல் தூரத்தில் வேறொரு கிராமத்தைப் பார்வையிட்டோம். நான்கு ஆண்டுகட்கு முன்பு வடகிழக்கில்தான் நிலச் சீர்திருத்தம் புகுத்தப்பட்டது. ஆகவே, அக் கொள்கையின் முழுப் பயனையும் அங்குக் காண முடியும் என எதிர்பார்த்தோம். அவ் வடகிழக்குக் கிராமத்தில்தான் புதிய சீனாவின் அபிவிருத்தி நன்கு வெளிப் பட்டது. எனது இரு பிரயாணங்களுக்கும் இடையேயிருந்த ஏழு மாதங்களில் பல மாற்றங்களைக் கண்டேன்.

வழக்கம்போல் நாங்கள் அக் கிராமத்தை அடைந்ததும், கிராமத்தார்கள் அன்புடன் வரவேற்றனர். ஆனால், இம் முறை எங்களுடனே இருந்து குலவி மகிழ்ந்தனர். அவர்கள் வெள்ளைச் சட்டையும் நீலக் கால் சட்டையும் அதன்மேல் காக்கி உறையும் அணிந்திருந்தனர். சிலர் பழைய, கம்பளிக் குல்லாய் வைத்திருந் தனர். தெற்கிலுள்ள உழவர்களைக் காட்டிலும் இவர்கள் உயரமாகவும் திண்மையாகவு மிருந்தனர். எல்லாப் பெண்களும் நீல உடை யணிந்திருந்தனர். எங்களுக்கு முட்டையும், தானியக் கதிரும், பட்டாணிக் காயும் கொடுத்தனர். எங்களைத் தின்னுமாறும், அல்லது வீட்டிற்கு எடுத்துப் போகுமாறும் வற்புறுத்தினர். பீகிங் அருகேயுள்ள கிராமத்தைவிட, இங்குள்ள வரவேற்பு வேறுபட் டிருந்தது. எனது அக்டோபர் விஜயத்தின் போது பீகிங் கிராமத்தார் எனக்குக் காய்கறி யளித்து நான் தங்கி யிருந்த விடுதிக்கு எடுத்துப் போகுமாறு கூறினார்கள். ஆனால், மே மாதம் நான் மீண்டும் சென்றபோது அதுபோன்று யாதும் தரவில்லை.

வடகிழக்குக் கிராமத்தின் பெயர் காவோகாங். வடகிழக்கு அரசாங்க அதிகாரியின் பெயரால் அழைக்கின்றனர். முதல் தடவை நான் சென்றபோது, ஒரு குடிசையின் முற்றத்தில் அமர்ந்திருந்தோம். எங்களுக்காக மேஜை நாற்காலிகள் அவசரமாகத் தருவிக்கப்பட்டன. ஆகவே, மாவட்ட அதிகாரி

யால் அவர்களிடம் விளைச்சல் விபரங்களைக் கேட்டு, எங்களுக்குத் தெரிவிக்கமுடியவில்லை. இரண்டாம் முறை இரண்டு மைல் தொலைவில் புதிதாகக் கட்டப்பட்ட மாவட்ட அலுவலகத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டோம். அங்கு எல்லா விபரங்களும் கூறப்பட்டன. கிராமத்தில் உழவர்களோடு கலந்து, அவர்கள் வீடுகளில் நுழைந்து, மொழிபெயர்ப்பாளர் உதவியுடன் அளவளாவினோம்.

காவோகாங்கில் 168 குடும்பங்கள் இருந்தன. 742 மக்கள் இருந்தனர். 2473 மோக்கள் நிலம் இருந்தது. நிலமற்ற உழவர்கள் தலைக்கு 2·7 மோக்கள் பங்காகப் பெற்றனர். நடுத்தர உழவர்கள் தலைக்கு 3 மோக்கள் பெற்றனர். விடுதலைக்கு முன்னர், 2413 மோக்கள் நிலத்தைப் பத்து நிலப் பிரபுக்கள் வைத்திருந்தனர். இப்போது இரு பிரபுக் குடும்பங்கள் ஏழை உழவர்களைப் போன்று நிலம் வைத்துக்கொண்டு வாழ்கின்றனர். ஏனைய எட்டுக் குடும்பங்கள் மறைந்து விட்டன. உழவர்கள் நிலை மிகவும் மேன்மை யடைந்துள்ளது என்பதில் ஐயமில்லை. நன்றாக உண்டு, உடுத்திருந்தான். ஆனால், விவசாய உற்பத்தி பெருகியதற்கான அறிகுறிகள் இல்லை. அவ் உற்பத்திப் பெருக்கமும்கூட, நாட்டில் சாதாரண வாழ்க்கை, தொழில் நிலைமைகள் மீண்டும் திரும்பியதன் காரணமாக இருக்கலாம்.

காவோகாங் என்ற கிராமத்தில் புதிய சோதனைகள் நடைபெறுவதை எனது முதற் செலவின்போது கண்டேன். விவசாயிகளிடையே நிலம் வழங்கப்பட்ட பின், அவர்களில் சிலர் தமக்குள் உதவி செய்யும் குழு வொன்றை ஏற்படுத்தி யுள்ளனர். வேறு சிலர் மாற்று உழைப்புக் குழுவாகச் சேர்ந்துள்ளனர். நாற்பது ஆண்களும், பதின்மூன்று பெண்களும் உறுப்பினராகச் சேர்ந்த, பதினான்கு குழுக்கள் இதுபோன்று உள்ளன. அவற்றில் கிராமத்தின் நாற்பது குடும்பங்கள் ஈடுபட்டுள்ளன. தமக்குள் உதவி செய்யும் குழுவில் உழைப்பு, விவசாயக் கருவிகள், விலங்குகள் யாவும் ஒன்றாகச் சேர்க்கப் பட்டு, அவற்றின் மதிப்பிற்குத் தக்கபடி பணமும் கொடுக்கப் படும். மாற்று உழைப்புக் குழுவில் எல்லா உழைப்பும் சமமாகவே மதிக்கப்படும். உழவர்களின் பங்கு நிலத்தை, அவர்களது குடும்ப உழைப்பால் மட்டும் பயிர் செய்ய முடியாது. ஆகவேதான், அவர்கள் அத்தகைய குழுக்களில் சேர்ந்

துள்ளனர் என்று நான் பின்னர் அறிந்தேன். ஆனால், கிராம அதிகாரி அதை ஒப்புக்கொள்ளவில்லை. அவர் கிராம மக்க ளிடையே எழுந்த கூட்டுறவு உணர்ச்சிதான் காரணம் எனக் கூறினார். உழவர்கள் உள்ளக் கிடக்கை யென்ன வென்பதை யறியவே நான் முயன்றேன். ஒவ்வொருவரிடமும் நான் கேள்வி கேட்டு வந்தேன். கிராம அதிகாரியும், மொழிபெயர்ப் பாளரும் அவர்கள் விடை யளிப்பதை அடிக்கடி தடை செய்தனர். எனது பதிலுக்காக நான் காத்திருக்கும்போது அவர்களிடையே நீண்ட விவாதங்கள் நடைபெற்றன. ஒரே கேள்வியைப் பலரிடம் கேட்பதன் மூலமே, கம்யூனிஸ்டு நாட்டில் உண்மைகளைத் தெரிந்து கொள்ள முடியும். விடைகள் எல்லாம் ஒன்று போலவே இருப்பினும், அவற்றை உச்சரிக்கும் முறையில் வேறுபாடு காணப்படுகின்றது. அரசாங்க அறிக்கைகள் கிளிப் பேச்சைப்போல் திரும்பத் திரும்பப் படிக்கப் பட்டாலும், அவற்றைவிட இவ் விடைகளினின்றும் நாம் ஓரளவு உண்மையை அறிய முடியும்.

பெரிய குடும்பங்களில் குழந்தைகள் அதிகம். அதனால், அவர்களுக்கு நிலமும் கூடுதல் கிடைத்தது. ஆனால், அவர்கள் மட்டும் உழைத்துப் பயிர் செய்ய முடியாது. ஆகவே, அவ் வுழவர்கள் குழுவாகக் கூடினர். அக் குடும்பங்களில் பெண்கள் நோயாளியாக இருந்தனர். அல்லது வயலில் வேலை செய்ய முடியாதவராக இருந்தனர். தமக்குள் உதவியளிக்கும் குழு வினரும் தங்கள் விளை பொருளை ஒன்றாகச் சேர்த்து, பிறகு முன்பே தீர்மானிக்கப்பட்ட மதிப்பின்படி, அப் பொருளைப் பங்கிட்டுக் கொள்வதில்லை. ஒவ்வொரு உழவனும் தன்னுடைய விளைவிலிருந்து, தான் பெற்ற உதவிக்குப் பொருள் கொடுத்து விடுகின்றான். கிராம அதிகாரியும், எங்களது மொழிபெயர்ப் பாளர்களும், விளை பொருளைப் பொதுவில் சேர்ப்பதுண்டு என்றனர். ஆனால், நான் வினவிய உழவன் அங்ஙனமன்று என்றான். உழைப்பதற்கு மேலும் ஆட்கள் தேவைப்படும். உழவர்களே அவ்வாறு தமக்குள் உதவி யளிக்கும் கூட்டாக அமைந்துள்ளனர். நிலவுடைமையாளன் ஒப்புக்கொள்ளப்பட்ட முறைப்படி உழைத்தவர்களுக்குப் பொருள் கொடுக்கிறான். அது ஒரு வகையில் உழைப்பு மாற்றேயாகும்; கூட்டு உழைப் பன்று. தேச முழுவதும் அத்தகைய குழுக்கள் அமைக்கப்

பட்டுள்ளன எனக் கூறப்பட்டது. இந்தக் கிராமத்தில் சுமார் கால் பகுதி நிலம் அக் குழுக்களின் கீழ் இருந்தது.

நான் சென்ற இருமுறைகளுக்கு மிடையே யுள்ள ஏழு மாதங்களில் அக் கிராமத்தின் உருவமே மாறி யிருந்தது. தமக்குள் உதவி யளிக்கும் குழுவிலிருந்து, நன்கு வளர்ச்சி பெற்ற கூட்டுப் பண்ணையாக மாறி யிருந்தது. வயல்களின் வரப்புகளெல்லாம் மறைந்து 450 ஏக்கரும் ஒரே நிலமாகத் தோன்றியது. ஒன்றுபட்ட நிர்வாகத்தின் கீழ், நிலத்தின் உரிமை ஒப்புக்கொள்ளப்பட்டது. ஒவ்வொரு பகுதியிலும் என்ன பயிர் செய்யப்பட வேண்டுமென்பதைக் கூட்டுறவுச் சங்கம் தீர்மானிக்கின்றது. உழவர்கள் தங்கள் உழைப்பு, நிலம், உழுபடைகள் யாவும் ஈந்து பயிர் செய்கின் றனர். அரசாங்க வரிக்கும், அடுத்த பருவத்திற்கு வேண்டும் விதைக்கும் ஒதுக்கப்பட்ட பின்னர் எஞ்சியதை யாவரும் ஒப்புக்கொண்டபடி பங்கிட்டுக் கொள்கின்றனர். உழைப்பிற்கு அறுபது சத வீதமும், நிலத்திற்கு முப்பது சத வீதமும், கன்று காலிகட்கும், உழுபடைகட்கும் பத்துச் சத வீதமும், விளை பொருளிலிருந்து கொடுக்கப்படுகின்றது. ஒவ்வோர் உழவனும் பொதுக் குவியலுக்கு ஈந்ததை ஒப்ப, விளைபொருளிலும் தன் பங்கைப் பெறுகின்றான்.

இவ்வாறாக அக் கிராமம், விலங்குகளால் இழுக்கப்படும் விவசாயக் கருவிகள் வாங்க முற்பட்டுவிட்டது. அரசாங்கம் அனுமதித்த முறைப்படி அவற்றின் விலையைத் தவணையாகச் செலுத்தினால் போதும். கூட்டுறவுச் சங்கம், முதல் ஆண்டில் அவற்றின் விலையில் 25 சத வீதமும், இரண்டாம் ஆண்டில் 35 சத வீதமும், மூன்றாம் ஆண்டில் மீதியையும் கொடுக்க வேண்டும். என்னை ஒரு வயலுக்கு அழைத்துச் சென்று, புதிய கருவிகளைக் காட்டினார்கள். ஒரு கிராமத்திற்கு அத்தனை கருவிகள் இருக்க முடியுமா என ஐயுற்றேன். ஓர் அரசாங்கப் பண்ணையிலேயே நான் குறைவான நவீன கருவிகளைக் கண்டேன். கிராமம் சோதனைக் கிராமமாக இருந்தா லொழிய, மற்றக் கிராமங்களுக்கு விற்பதற்குச் சீனாவிடம் கருவிகள் இல்லை எங்களுடைய காட்சிக்காக அவை அங்கு வைக்கப்பட்டிருந் தனவா என ஒருகணம் ஐயுற்றேன். ஒருவேளை இருக்கலாம். ஆனால், உண்மையில் தனியுடைமை வரப்புகளற்ற அகன்ற நிலப் பகுதியை நான் பார்த்தேன். கூட்டுப் பண்ணையை மேற்

கொண்ட கிராமம், அந்த மாவட்டத்திலேயே காவோகாங் ஒன்றுதான் என்பது மறுக்க முடியாத உண்மை.

இது சரியான வழியில் முன்னேற்றம்தான். ஆனால், இந்த இயக்கம் நாடு முழுவதும் பரவும்போது, வேலை பற்றிய பல பிரச்னைகளைக் கிளப்பும். அதிக உற்பத்திக்காக நவீன முறைகளைக் கையாண்டால் விவசாயம் அகன்ற அளவில் செய்யப்பட வேண்டும். சீனாவிலுள்ள ஆபத்து யாதெனில், தலைமுறைக்குத் தலைமுறை நிலம் பங்கிடப்பட்டுத் துண்டுபடுத்தப்படும். அதனால், விளைச்சலும் குறையும். ஆகவே, நிலத்தை நம்பியிருக்கும் மக்களை வேறு தொழிலில் திருப்பிவிட வேண்டும். அதனால்தான் சீன அரசாங்கமும், முதல்படியாகத் தமக்குள் உதவியளிக்கும் வேளாண்மையைப் புகுத்தியுள்ளது. இப்பொழுது அவர்கள் விவசாயிகளைக் கூட்டுப்பண்ணையில் சேருமாறு வற்புறுத்துகின்றனர். உழவனுக்கு நிலத்தின்மீது தற்போதுள்ள பற்றுதலால், புரட்சி செய்யாவண்ணம், அவனைக் கட்டுப்படுத்திய பின்னர், பொது வேளாண்மை புகுத்தப்படும். 1951 அக்டோபரில் வெளிநாட்டு விருந்தினரிடையே பேசுகையில், பீகிங் நகர சபைத் தலைவர் பெங்சென் விளக்கினார்: "பொது வேளாண்மை உழவன் உள்ளத்திலிருந்தே எழ வேண்டும். உழவர்களை வற்புறுத்த முயன்றால், அரசாங்கமே தூக்கியெறியப்படும். நிலத்தைத் துண்டுபடுத்தல் இத்துடன் முடிந்தது. இனி, பொது வேளாண்மை பொருளாதாரத் தேவையாகும்."

காவோகாங் கூட்டுக் கிராமத்தின் உழவர்கள், தங்களுக்குச் சொந்தமான நிலத்தின் மீதுள்ள பற்றுதலைப் பன்முறை கூறினார்கள். அது அவர்களுடையதே; அவர்கள் வாங்கிய உடைமையையும், அவர்களுடையது எனக் காட்டும் அறையையும், அவர்கள் வளர்க்கும் பன்றிகளையும், கோழிகளையும் ஓய்வு நேரங்களில் வேறு வேலை செய்து கிடைத்த வருமானத்தைப் பற்றியும் அவர்கள் பேசுகின்றனர். நிலம் அவர்கள் பெயருக்கு எழுதித்தரப்பட்ட பத்திரங்களைப் பெற்ற பின்னர், இரவிலும்கூட எழுந்து நிலத்தைப் பார்த்து அதன் உடைமையைக் கண்டு களித்ததாகக் கதைகள் கேட்டேன். பல கம்யூனிஸ்டுகளே அத்தகைய கதைகளைப் பெருமையுடன் கூறினார்கள்.

நான் ஓர் உழவன் வீட்டிற்குச் சென்றேன். இரண்டு அறைகள் கொண்ட அவ் வீட்டில் இரு குடும்பங்கள் இருந்

தன. நான் பார்த்த குடும்பத்தில் மூன்று பேர் இருந்தனர். அவன் குள்ளமாகவும் தடியாகவும் இருந்தான். மழையையும் வெயிலையும் பனியையும் தாங்கும் அவன் முகத்தில் ஆழ்ந்த கோடுகள் விழுந்திருந்தன. நிலச் சீர்திருத்தத்திற்கு முன்னால் அவன் நிலமில்லாத உழவனாக இருந்தான். இப்போது அவனுக்கு ஒன்பது மோக்கள் நிலம் இருக்கின்றது. அதைக் கொண்டு அவன் மாதிரி விவசாயியாக விளங்கினான். அவன் மனைவி எங்களுடன் அத் திண்ணை மீது உட்கார்ந்திருந்தாள். அவள் நீல அங்கி அணிந்திருந்தாள். விடுதலை பெற்ற ஏனைய பெண்களைப் போன்று அவள் குட்டையான தலை மயிர் வைத் திருந்தாள். அவள் கைகளை மடக்கிக் கொண்டு உட்கார்ந் திருந்தாள். அவன் தன்னுடைய வார்த்தைகளை அவளது ஒப்புதல் பெற்றே வெளியிட்டான். அவள் சில சமயம் அவற்றைத் திருத்தியும் மறுத்தும் கூறினாள். வருமானக் கணக்குப் பற்றி அவனைவிட அவளே அதிகம் தெரிந்தவள் எனத் தோன்றியது. அவர்களது ஒன்பது வயதுக் குழந்தை ஓடியாடி விளையாடிக்கொண் டிருந்தது. அது சீனக் குழந்தையைப் போலன்றி, அழகும் ஆர்வமும் இல்லாது இருந்தது.

அரை மணி நேரத்திற்கு மேலாக அவன் தனது அதிருஷ் டத்தைப் பற்றிக் கூறி வந்தான்: "நான் தானியங்களும் கயோலியாங்கும் எனது வயலில் பயிர் செய்தேன். கழிந்த ஆண்டு நான் தமக்குள் உதவி அளிக்கும் குழுவில் ஓர் உறுப் பினனாக இருந்தேன். அதனால் எனக்கு நல்ல விளைச்சல் இருந்தது. நான் சில பன்றிகளும் வளர்த்தேன். தானியங் களை ஏற்றிச் செல்லும் வண்டியை நகரத்திற்கோ அல்லது கூட்டுறவுச் சங்கத்திற்கோ இழுத்துச் சென்றேன். வேறு வேலை கள் செய்வதற்கும் எனக்கு நேரம் இருந்தது. நான் முப்பது லட்சம் யுவான்களுக்கு மேல் ஈட்டினேன்."

நான் கேட்டேன்: "இப்பொழுது தமக்குள் உதவிப் பரி மாற்றம் இல்லை. நீங்கள் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் அங்கத் தினர். அந்த நிலம் இன்னும் தங்களுக்குச் சொந்தமானதா?"

அவன் தன் மனைவியை நோக்கினான். அவர்களுக்குள் விவாதம் தொடர்ந்தது. மொழிபெயர்ப்பாளரும் அவர்களு டன் சேர்ந்து கொண்டார். எனக்கு எதுவுமே விளங்கவில்லை!

மெதுவாக நிறுத்தி அவன் பதில் கூறினான்: "எனக்கு இப்போது தானியமும் கயோலியாங்கும் அதிகமாக விளைகின் றன. அந்த நிலம் என்னுடையதே."

“ஆனால், இனி மேல் நீங்கள் கயோலியாங் பயிர் செய்ய மாட்டீர்கள். கூட்டுறவுச் சங்கம் என்ன பயிர் செய்யத் திட்டமிட்டிருக்கின்றதோ, அதைச் செய்வீர்கள். அப்படியானால் அந்த நிலம் உங்களுடையதெனக் கருத முடியுமா?” என நான் கேட்டேன்.

உழவன் என்னைக் குழப்பத்துடன் பார்த்தான்.

“நான் எனது நிலத்தையும் வண்டியையும் கூட்டுறவுச் சங்கத்திடம் விட்டு விட்டேன். ஒரு வேளை நாங்கள் கயோலியாங்கும், தானியமும் மீண்டும் பயிர் செய்யலாம். நிலமும் வண்டியும் என்னுடையனவே. எனது வண்டிக்குச் சங்கத்தின் ஒரு பங்கு எனக்குக் கிடைக்குமெனச் சொல்கின்றனர். கழிந்த ஆண்டைவிட எனக்கு அதிகமாக வருமானம் வரும்.”

நான் மீண்டும் கேட்டேன்: “மற்றவர்களுக்காக நீங்கள் வேலை செய்ய விரும்புகிறீர்களா? தமக்குள் உதவி செய்யும் போது நீங்கள் பொருள் கொடுத்தீர்கள், அல்லது மற்றவர்களுக்காகச் செய்த வேலைக்குப் பொருள் பெற்றீர்கள். நிலம் உங்களிடமே இருந்தது. இன்று உங்கள் நிலத்திற்கு வரப்பெல்லை ஏது?”

“தமக்குள் உதவி யளித்தலும் நல்லதே. எனது வேலைக்கு மற்றவர்கள் உதவினார்கள். கூட்டுறவுச் சங்கத்திலிருந்து இன்னும் அதிகமாக ஈட்டலாம். எனது வண்டியையும் நிலத்தையும் முதலீடாகக் கொடுத்துள்ளேன். ஆனால், நிலம் என்னுடையதே.”

உழைப்பில் ஆர்வம் இருக்கின்றது. அவனது அபிவிருத்தியில் பெருமை கொள்கின்றான். ஆனால், பல நூற்றாண்டுகள் பட்ட துயரத்தின் பின் கிடைத்த நிலத்தைத் தன்னிடமே வைத்திருக்க உறுதிகொண்டிருக்கின்றான். நிலத்தைப் பொது விவசாயத்தின்கீழ்க் கொண்டுவரும்போது, அதற்கு இத்தகைய தடை உண்டு என்பதைச் சீன மக்கள் அரசும் உணர்ந்திருக்கின்றது. அவர்கள், பொது நலத்திற்காக நிலத்தை விட்டுக் கொடுக்குமாறு உழவனிடம் வற்புறுத்தி வெற்றி யடைவார்களா, அல்லது பலாத்காரம் பயன்படுத்தப்படுமா என்பதே சிக்கலான பிரச்னை.

# 3. ஹுவாய் நதி அணைக்கட்டு

**ஹு**வாய் நதி நீர்ப் பரப்பின்மீது ஓடம் மெதுவாக வளைந்து வளைந்து சென்றது. ஹுவாய், யாங்த்ஸி, மஞ்சள் என்ற மூன்று நதிகள், சீனாவின் நிலப்பரப்பைக் கிழித்துச் செல் கின்றன. அவை மண்ணை வளப்படுத்தி, அடிக்கடி அவற்றை நம்பியிருக்கும் மக்களையும் துயரத்தில் ஆழ்த்துகின்றன. பல நூற்றாண்டுகள் இங்கு வாழ்ந்த மாந்தர் வறுமையிலும் இன்ன லிலும் வாழத் தெரிந்திருந்தனர். இன்றும் அதே நிலைதான். ஆனால், இன்று அவர்கள்மீது புதிய காற்று வீசிக்கொண் டிருக் கின்றது. அது காலத்தின் தூசியை அகற்றி, இன்பத்தை நாடும் மக்கள் உள்ளத்தை வெளிப்படுத்துகின்றது.

வாழ்க்கையைத் திருத்தி யமைக்கும் மக்களின் ஊக்கம் கண் டேன்; புதிய இசைக் கேற்ப அணிவகுத்துச் செல்லும் இளை ஞர்களின் ஆர்வம் கண்டேன்; உழைப்பதற்கும் ஆக்குவதற் கும் அவர்கள் கொண்டுள்ள உறுதியைப் பார்த்தேன். ஆனால், என்ன குறிக்கோளுடனே என ஐயுற்றேன். பசியை அகற்று வதுதான் மனிதன் வேட்கையா? மனம் வளர்ச்சியுற்று அகி லத்தையும் அணைத்துக் கொள்ளாவிடில், புதிய உருவங்களையும், அரும்பும் அழகையும் உங்கள் கண்கள் பார்க்காவிடில், வயிறு நிரம்பியதால் என்ன பயன்? என்றால் இவ் வினாவிற்கு விடை யளிக்க இயலாது. ஏனெனில், நான் பசியை அறிந்ததில்லை. ஆனால், 'பசி விலங்குகளின் சட்டம்' என்பது எனக்குத் தெரியும்.

பீகிங்கிலிருந்து தொலைவிலுள்ள ஹுவாய் நதிக் கரையி லும், நாட்டின் பிற இடங்களிலும், இந் நாட்டை வளப்படுத்திய மக்களைப் பார்க்க முடியும்; அவர்களைத் துன்புறுத்தும் பிரச்சினை களைத் தெரிய முடியும். அவர்கள் நம்மைச் சுற்றியுள்ளனர். படகுகளிலோ அல்லது தங்கள் சிறிய வயல்களிலோ வேலை செய்தும், வாழ்ந்தும் வருகின்றனர். உலகில் மற்றெந்த நாட்டு மக்களும் செய்யாத உழைப்பைக் கொண்டுள்ளனர். சிறு குழந் தைகள் ஆற்றின் கரைகளில் வரிசையாக நிற்கின்றன. கயிற் றில் கட்டப்பட்ட மரத் துண்டில் தங்கள் உடலைச் சாய்த்துக் கொண்டு நிற்கின்றன. அக் கயிற்றால்தான் படகு இழுக்கப் படும். உழவனொருவனும் அவனது குழந்தையும் வயலில் கலப் பையை இழுத்துச் சென்றனர். அந்த வயலின் விளைச்சலைப் பொறுத்தே கிராம மக்களின் வாழ்வும் தாழ்வும் இருக்கின்றன.

இதுதான் சீனு! புரட்சி, மக்களின் வறுமைப் பிணியை அறுக்க வில்லையெனில், சீனு இன்னும் இப்படியே இருக்கும்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாகவே சீன உழவர்கள் தங்கள் துன்பச் சுமையைப் பொறுமையுடன் தாங்கி வந்தனர். வளமான நிலங்களும் வற்ருத நதிகளும் உணவளித்தும், உயிர் கொடுத்தும் வந்தன. தனித்து வாழ்தலால், அவர்கட்கு வெளி உலகில் நடக்கும் மாற்றங்கள் தெரியா. சமூகம், முன்னேற்ற மின்றித் தேங்கி நின்றது. மக்கள் பழைமையில் மூழ்கியிருந்தனர். அதுதான் அவர்கட்கு அமைதியும், பாதுகாப்பும் அளித்தது. அரச பரம்பரைகள் ஆண்டன; மாய்ந்தன. சீன உழவனுக்கு அதைப் பற்றிக் கவலையில்லை. அவன் முன்னேரைப் போல் அரசரைத் தொழுது, பெற்ருேரிடம் பக்தியுடனும், கீழ்ப்படித லுடனும் நடந்து வந்தான். நான்காம், ஐந்தாம் நூற் ருண்டுகளில் புத்த மதம் நாடு முழுவதும் பரவிற்று. அதனுல் மக்களின் வாழ்க்கை மாறவில்லை. அரசைத் துறந்த புத்தர் ஒளி மிகுந்த கடவுளாகக் கருதப்பட்டார்; ஒழுக்கத்தைப் பெரிதும் வலியுறுத்திஞர். கன்பூசியஸ், தங்கள் முன்ஞேர்கள் பாதையில் தியாகம் பண்ணுமாறு மக்களைக் கேட்டார். அரசரே தேசத்தின் தந்தை. சீன மக்கள் நிலப் பிரபுக்களிடம் அடிமையாக நிலத் தில் உழைத்தனர். அப் பிரபுக்களிடமே அரசியல் அதிகாரம் இருந்தது. மக்களால் கண்மூடிப் பழக்க வழக்கங்களி லிருந்து விடுதலை பெற முடியவில்லை.

ஆனுல், புதிய சீனு இந் நிலையை மாற்றி விட்டது. பழமை யின் பிடிப்பிலிருந்து உழவன் விடுவிக்கப்பட்டான். சமூகம் புனர் நிர்மாணப் பாதையில் செல்கின்றது. "சீனு தனது நில உறவை மாற்றி யமைத்தது, புதுமைக் கருத்து பழைய நாட் டில் மிளிர்வது போன்றது" என ஜாக்பெல்டன் கூறுகின்ருர் தான் உரிமை காட்டும் நிலத்தால் ஏற்பட்ட மகிழ்ச்சி, பெருமை, நிலம் வாங்கிக் கொடுத்த கம்யூனிஸ்டுக் கட்சி மீது நம்பிக்கை ஆகியவற்றை நான் பார்க்க முடிந்தது. அவன் தலை நிமிர்ந்து நடந்தான். அவன் கண்களில் ஒளி மின்னி யது. அவன் மனைவியும் மகளும் வெற்றியில் பங்கு கொண் டனர். கிராமப் பிரபுவின் காமக் கண்களிலிருந்து தப்ப அவர் கள் வீட்டினுள் அடைந்து இருக்க வேண்டியதில்லை. மஞ்சள் ஆடை அணிந்த மதத் தலைவர்கள் அருகிலிருக்க, தெய்வீகப் புத்தர் முன்னுல் சாம்பிராணி புகைக்கவில்லை. புதிய சீனு

புதிய மக்களிடம் அதன் தலைவிதியை ஒப்புவித்திருக்கின்றது. பழமையின் அடிப்படையைக் கல்லுதல் அரிய பணியாகும்.

சீனத்து நிலம் அந் நாட்டு மக்கட்கு மிகவும் உறு துணையாக இருந்தது எவ்வாறு என்று அறிவது எளிது. வசந்த நாளில் படகில் நான் மிதந்துகொண் டிருக்கும்போது, அந் நீர்ப் பரப்பின்மேல் குளிர்ந்த காற்று வீசிக்கொண் டிருந் தது. ஆற்றின் கரைகள் வளைவாகச் சென்றன. ஆற்று வெள்ளம் இருகரைகளையும் இணைக்கும் கயிறுபோல் நீண்டு சென்றது. எங்கள் படகு செல்லும்போது நீரில் சிற்றலைகள் தோன்றி மறைந்தன. நிலம் என்னும் நல்லாள், கலங்காது மக்களுக்கு வாழ்வும் நம்பிக்கையும் ஈந்தாள். உழவன் சாவிற்கு அஞ்சி, வாழ்வை விரும்பி நில மகளைத் தழுவிக் கொண்டான். அவளது உறுதியால் உரம் பெற்று, அவன் அவளுக்காகப் போராடினன். நிலமே அவனுக்கு வழியும் பயனும். அவனது வாழ்க்கை மாறிற்று ; ஆனல், அவனுடைய கிராமத்திற்கு அப் பால் நடக்கும் நிகழ்ச்சிகளைத் தெரிந்து கொள்ள, அவன் போக்கு மாறவில்லை. அன்ருட வாழ்க்கையையே அவன் அறிந்திருந்தான். நாளை வாழ்க்கையைப் பற்றி அவன் கவலைப்பட்ட தில்லை. அரசியல்வாதிகளும், மதக் குருக்களுமே வருங்காலத்திற்காக உறுதிமொழி கொடுப்பவர்கள். அவன் தனி யாக இருப்பதையே விரும்பினன். இன்று அவனுக்கு அவன் விரும்பிய நிலம் கிடைத்து விட்டது. அதைத் தவிர வேறு என்ன வேண்டும் ? நாலாயிரம் ஆண்டுகட்கு முன்னர் பெயர் தெரி யாத சீனக் கவிஞர் ஒருவர் எழுதினர் :

“ காலைக் கதிரவன் எழுந்தது முதலா
மாலைச் செங்கதிர் மறையு மளவும்
உலையா திங்கே உழைத்திடு கின்றேன்.
வெட்டுவேன் கிணற்றை வியர்வை சிந்த.
உரியஎன் நிலத்தை உழுதிடு கின்றேன்.
அரிதாய் உணவை ஈட்டுவேன் என்றும்.
நீரைப் பெறுகிறேன். நித்தமும் இவ்வணம்:
எவர்தான் நாட்டினை ஆண்டிடில் எனக்கென் ?
கவலையின்றிக் காலம் கடத்த
வாய்ப்புகள் எனக்கு வழங்கிடின் இவணே ”

சீன உழவன், நிலப் பிரபுவின் பேராசைக் கென விடப்பட் டிருந்தான். ஆனல், இன்று அவன் ஆள்பவரின் புதிய சமூக அமைப்பில் நிற்கின்ருன். ஊர்வலங்களில் அணிவகுத் துச் செல்வதற்கும், ஐந்து தாரகை பொறித்த செங்கொடியை

ஏந்துதற்கும், கம்யூனிசக் கடமைகளைத் தெரிந்து கொள்வதற்கும் அவன் அழைக்கப்படுகின்ருன். மெதுவாக ஆனுல், உறுதியாகச் சுழன்று வரும் கம்யூனிஸச் சக்கரத்தில் அவன் ஒருமுள். பொது நலம் என்று கூறப்படும் எல்லாப் பணிகளையும் ஏற்றுக் கொள்ள அவன் சித்தமாயிருக்க வேண்டும். அவனும் அவனது குடும்பத்தாரும், 'மாசேதுங்கும் ஸ்டாலினும்' என்ற பாட்டைப் பாடிக் கொண்டு அணிவகுத்துச் செல்வதையும், தான் பெற்ற நிலத்திற்குக் கைம்மாருக, கொரிய உதவிக்கும், அமெரிக்க எதிர்ப்பு நிதிக்கும், 'தனது நன்கொடை' யாக அழுக்கு நாணய நோட்டுக்களைப் பிடித்துக் கொண்டு களிப்புடன் செல்வதையும் நான் பார்த்திருக்கின்றேன். மக்கள் விடுதலைப் படையில் சேர்வதற்காக அவன் துப்பாக்கியைத் தூக்கியுள்ளான். அதற்கு அவன் கடன்பட்டுள்ளான். சில சமயங்களில் அவன் நிலத்தை உற்றுப் பார்க்கின்ருன்; ஒரு பிடி மண்ணை எடுத்துப் பார்க்கின்ருன்; சிறு தானிய மணிகளைக் கையில் எடுக்கின்ருன்; மீண்டும் அன்பிலும், அகமகிழ்விலும் தன்னை மறந்து விடுகின்ருன்; தனக்கு நிலத்தைத் திரும்பத் தந்தவர்களுக்காக அவன் எதையும் செய்யச் சித்தமாக இருக்கின்ருன். ஆனுல், இக் கடமையுணர்ச்சி எத்தனை காலம் நீடிக்கும்? இயல்பாகவே உழவன் தனி மனிதன்; ஆனுல், அவன் இனி மேலும் தனியாக விடப்பட மாட்டான்.

சீன மக்களின் பொதுவுடைமை யுணர்ச்சியைக் காண்பதற்கே நான் ஹுவாய் சென்றேன். அப் பள்ளத் தாக்கில் வசிக்கும் மக்களின் நலங் கருதி, 20 லட்சம் மக்கள் ஆணும் பெண்ணுமாக உழைக்க முன் வந்தனர் எனக் கூறப்பட்டது. சீனுவின் துயரம் எனப் பெயர் பெற்ற அந் நதிகளைக் கட்டுப்படுத்தி, மக்களுக்குப் பயன்படுமாறு செய்யும் திட்டம் அது. நாங்கள் சென்ற படகில் அத் திட்டத்தில் பணியாற்றும் உதவித் தலைமை என்ஜினியரான ஒரு பெண்ணும் இருந்தார். பீகிங்கிலும், அரசாங்கத்தில் பல முக்கிய அலுவல்களிலுள்ள பெண்களைப் பார்த்தேன். சுகாதார மந்திரி, நிதி உதவி மந்திரி, இன்னும் பல மாதர் சீனுவின் விடுதலை பெற்ற பெண்மைக்கு எடுத்துக்காட்டாய் விளங்கினர். அவர்கள் நீல நிறச் சன்யாட்சன் உடையில் எளிமையாக இருந்தனர். தலைமயிரைப் பின்னல் வாரி, இரண்டு இடுக்கிகளால் இறுக்கமாக வைத்திருந்தனர். அவர்களின் தந்த நிற மேனியை வேறெந்த

அலங்காரப் பொருளும் அழகுபடுத்தவில்லை. அவர்கள் முறைப் பாகவும், உண்மை உள்ளவராகவும், முரட்டுத்தனமாகவும் இருந்தனர்.

எங்களுடன் இருந்த பெண் மொழிபெயர்ப்பாளர்கள் மூவர், வெளிநாட்டு அலுவலகத்தில் சிறு பதவி வகிப்பவர்க ளாவர். அவர்களும் முறைப்பாக, புன்னகையை வெளிக் காட்டாமல் இருந்தனர். அவர்கள் சிறியவர்கள். பஞ்சுடை அணிந்திருந்தனர். கழுத்து வரைக்கும் உள்ள பொத்தான் களைப் பொருத்தாமல் விட்டிருந்தனர். அதனால் உள்ளே அணிந்திருந்த சாயம் மங்கிய சொக்காய், நீல மேலங்கியின் அவலட்சணத்தைக் காட்டியது. அவர்கள் முகங்கள் வெளிறி, விறைப்பாக இருந்தன. தலை மயிர் பின்னால் வாரிவிடப்பட்டு இறுக்கமாகக் கட்டப்பட் டிருந்தது. இவை அவர்களது ஆழ்ந்த ஆர்வத்தைக் காட்டின. சில சமயம் அவர்களுள் ஒருத்தி வண்ணப் பட்டுத் துண்டைக் கழுத்தில் அணிந்திருப்பாள். சீனப் பெண்கள் பட்டின் மீதும், வண்ணங்கள் மீதும் உள்ள ஆசையை இழந்துவிடவில்லை யென்பதை அது காட்டிற்று. நான் முதல் முறை சீனா சென்றபோது எங்களுடன் வந்த மொழிபெயர்ப்பாளர் ஓர் இளம் பெண் ஆவார். அவள் உடையி லும் பிற அலங்காரங்களிலும் ஆர்வம் காட்டவில்லை. 'கவர்ச்சி கரமான உடைகளை அணிவதில் விருப்பமில்லையா?' என அவளிடம் கேட்டேன். அவள் பதிலளித்தாள்: "எங்கள் நாட்டின் செல்வம் பெருகும்பொழுது நாங்கள் நேர்த்தியான ஆடைகள் அணிவோம்." நான் ஷாங்காயில் ஒரு தடவை களிப்புடன் இருக்கும்போது அவளிடம் ஒரு நாட்டியப் பண்ணை முணுமுணுத்தேன். சீனர்களுக்கு நாட்டியம் மிகவும் விருப்பம் என்பது எனக்குத் தெரியும். அவள் என்னை முறைத்துப் பார்த்தாள். பிரபுக்களின் ஆடம்பரத்தைச் சீனா விரும்பவில்லை என நினைவூட்டினாள். நான் மௌனமானேன். மாதர்களுக்கு இயல்பாக உள்ள பண்பும் பெண்மையும் சீனப் பெண்களிடம் இல்லை. அந்த மென்மை உள்ளத்தைக் கூட புரட்சி கடின மாக்க வேண்டும். இல்லையெனில் புரட்சி தோற்றுவிடும்.

ஆனால், அந்தப் பெண் என்ஜினியர்; எடுப்பான தோற்ற முடையவள். அவள் கீழே பல்லாயிரம் மக்கள் வேலை செய் தனர். யாவரையும் ஒழுங்கு படுத்தி, கட்டுப்பாட்டுடன் வைத் திருந்தாள். அவளிடம் அதிகார உணர்ச்சியும் தன்னம்பிக்கை

யும் இருந்தன. சியன்சின்யெங் ஷாங்காயில் 1941-இல் மாணவியாக இருக்கும்போதே கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந் தாள். 1942-இல் விடுதலை பெற்ற பகுதிக்கு ஜப்பானியருடன் போர் புரியச் சென்றாள். படகில் நூறு மைல் ஆற்றை எதிர்த்துச் சென்றோம். அந்த இரண்டு நாட்களிலும் அவள் தன் கடூரமான குரலால் என்னைக் கட்டுப்படுத்தி வந்தாள். குறுகலான இடைவழியில் அவள் கைகளை ஆட்டி நடந்தாள். அவளது பூட்ஸ் அவள் அணிந்திருந்த சிவப்பு ஸாக்ஸுடன் ஒட்டிக்கொண்டது. அவளது நீலப் பருத்திக் கால்சட்டை இடுப்பில் அகன்று, கணுக்கால் வரையிலும் இருந்தது. அவள் கீழுள்ள அதிகாரிகள் அவளை வியந்து மதிப்புக் காட்டி னர். அவர்கள் அவளைச் சூழ்ந்துகொண்டு, அவள் கூறுவதை அன்புடன் கேட்டனர். அவளிடம் அழகு இல்லை. எலும்பு உந்திய முகமும், நேரான தலை மயிரும், நீண்ட பற்களும், அகன்ற வாயும் நம்மைக் கவர்ந்தன. காரணம், அவளது குன்றாத தன்னம்பிக்கையே யாகும். அவள் கண்களில் சிரிப்பும், கோபமும் மாறி மாறித் தோன்றின. கம்யூனிஸ்டுப் பக்தியின் வெறி அவளிடமிருந்ததால், அவள் சாதாரணப் பெண்ணைவிட மேம்பட்டு, என்ஜினியராக என்னைப் பெரிதும் கவர்ந்தாள்.

ஒரு நாள் ஏழு மணி நேரம் - உண்ணும் நேரம் நீங்கலாக - விடாமல் ஹுவாய் நதித் திட்டத்தைப் பற்றி விளக்கமாகப் பேசினாள். "ஒன்பது ஆண்டுகளாக இப் பகுதி மக்கள், கோமிண்டாங் ஆட்சியின் கீழ், வெள்ளப் பெருக்கால் பெருந் துயருற்றனர். ஐம்பது லட்சம் மக்கள் இறந்தனர். கம்யூனிஸ்டு ஆட்சியில், மாசேதுங்கின் தலைமையில் அத் தொல்லையைத் தவிர்ப்பதற்கான முயற்சி எடுக்கப்பட்டது. 1938-இல் கோமிண் டாங் கட்சியினர் மஞ்சள் நதியின் கரையை உடைத்துவிட்டனர். அது பின் தன் போக்கை மாற்றி ஹுவாயில் வந்து சேர்ந்தது. அதனால் ஹுவாய் நதியில் வெள்ளம் திரண்டு தேங்கியது; மஞ்சள் நதிக்கும், ஹுவாய் நதிக்குமிடையே ஏரி ஒன்று தோன்றியது."

கோமிண்டாங் கட்சியினர் மீது வெறுப்பைத் தூண்ட இத்தகைய வார்த்தைகள் பயன்படுத்தப்பட்டன. ஆனால், உண்மை வெட்கமின்றி மறைக்கப்பட்டது. சீனாவின் வரலாற்றையறிந்த பார்வையாளர்களிடம் எத்தகைய எண்ணங் களை எழுப்ப முயலுகின்றனர்! அது போன்ற வரலாற்றுப்

பாடங்களை நாங்கள் அடிக்கடி கேட்க நேர்ந்தது. அவர்கள் கூறுவதிலிருந்து உண்மையைத் தெரிந்துகொள்ள வேண்டுமானால், நாம் மிகவும் கவனமாயிருத்தல் வேண்டும். உண்மையில் நான்காம் நூற்றாண்டிலிருந்து 935 வெள்ளப் பெருக்குகளும் மழையின்மையும் அந் நதியோரத்தில் வாழும் மக்களைத் துன்புறுத்தி யிருக்கின்றன. அவர்கள் அதனை 'இள மங்கை' என்றழைத்தனர். வேறு எந்த நதியையும் அவ்வளவு நேசித்ததில்லை. "எங்கே சென்றாலும், எவ்வளவு தூரம் போனாலும் ஹுவாய் போன்ற இடமொன்று இல்லை" என்று அவர்கள் பாடினார்கள். ஆனால், அந் நதி அதிக துயரத்தையும் கெடுதியையும் அவர்களுக்கு அளித்தது. ஐந்து கோடி மக்களின் நல்வாழ்வு அப் பள்ளத்தாக்கில் கட்டுண்டு கிடந்தது. சீனாவில் அதிக மக்கள் செறிந்து வாழும் பகுதிகளுள் இது வொன்று. ஆகவே, அப் பகுதியைத் திருத்தியமைக்கும் அரசாங்கம் மக்களின் உள்ளத்தில் நல்லிடம் பெறும். கம்யூனிஸ்டுகள் 1949-இல் குடியரசு அறிக்கை விட்டதும் இவ் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டனர். மா, "ஹுவாய் செப்பம் செய்யப்பட வேண்டும்" என்று அறிவித்தார்.

ஹுவாய் நதித் திட்டம், இன்றையச் சீனாவின் வலிமையையும், பலவீனத்தையும், மனித சக்தியின் சிறப்பையும் தொழில் நுணுக்கத்தின் சிறுமையையும் எடுத்துக் காட்டுகின்றது. அந் நதியின் கரைகளையும், கால்வாய்களையும் பாதுகாப்பதற்குச் சீன உழவன் ஆண்டு பலவாக உழைத்திருக்கின்றான். ஒரு தடவை ஆற்றின் கரை உடைத்து, ஆற்றுப் படுகை அழிக்கப்பட்டு, எங்ஙணும் நீர் தேங்கி, ஊர்களையும் வெள்ளத்தில் ஆழ்த்திவிட்டது. உழவன் தனது சக்தியின்மையை எண்ணி ஏங்கி நின்றான். கரைகளைத் திரும்பக் கட்டுவதென்றால் பல லட்சம் உழவர்களை ஒன்று திரட்ட வேண்டும். கம்யூனிஸ்டுகள் அவ்வாறு ஒன்று திரட்டுவதில்தான் வெற்றி பெற்றனர். ஐம்பதினாயிரம் கம்யூனிஸ்டுக் கட்சி அங்கத்தினர்களும் ஒரு லட்சம் இளைஞர் தலைவர்களும் அப் பகுதி முழுதும் சுற்றி மக்களை எழுப்பி ஒன்று திரட்டினார்கள். கூட்டங்கள், முழக்கங்கள், ஊர்வலங்கள் நடைபெற்றன. ஜப்பானியத் தாக்குதலுக்கு ஆட்பட்டவர்கள், நிலப் பிரபுவின் இன்னலுக் காளானவர்கள், இளம் உழவர்கள் மேடை மீது தோன்றி, அரசாங்கம் அவர்கட்கு நிலம் அளித்ததை நினைவூட்டினார்கள். உழவர்களுக்

காக உழைத்த தலைவர்களின் பொருட்டு, உழவர்கள் உழைக்க முன் வந்தனர். 'உழைப்பினால் களிப்பு', 'வெறுப்பினால் விருப்பு' என்ற வார்த்தைகளை உழவன் கேட்டான்.

சூஷான் என்ற கிராமத் தொழிலாளிக்கு நாற்பத்தெட்டு வயது. நல்ல உழைப்பாளி. கட்டான உடம்பு. கழிந்த பனிக் காலத்தின் போது, தொண்டர்களைத் திரட்டும் ஹுவாய் நதிப் பிரசாரகர் ஒருவருடன் அவனும் சென்றான். உழவர் கூட்டத் தில் அவன் பேசினான்: "முன்பு நமக்குக் கடுமையான வரி விதிக்கப்பட் டிருந்தது. நிலப் பிரபுக்களின் நிலங்களைப் பாது காக்கவே நாம் ஆற்றில் உழைத்தோம். இப்போது மா நமக்கு நிலம் அளித்திருக்கின்றார். எனது குடும்பத்திற்கு இருபத் தொரு மோக்கள் நிலம் கிடைத்துள்ளது. ஆகவே, நமது நிலங்களைப் பாதுகாக்க நாம் ஹுவாய் நதியில் உழைக்க வேண்டும்."

சின் ஷ-லிங் என்ற பெண் ஓர் ஏழை உழவனின் மகள். அவள் ஒன்பது வயதாக இருக்கும்போது ஜப்பானியர்கள் அவள் தந்தையைக் கொன்றுவிட்டனர். நிலச் சீர்திருத்தப்படி அவளுக்கும் நிலம் வழங்கப்பட்டது. அவளது கிராமத்திலுள்ள ஆண்களையும் பெண்களையும் ஒன்று திரட்டுவதே அவள் வேலை. அவளும், அவளைப்போல் கோமிண்டாங் கட்சியின் கொடுமைக் கும் நிலப் பிரபுக்களின் தொல்லைக்கும் ஆளானவர்களும் புதிய ஆட்சியின் புகழ் பரப்புவோ ராயினர். அவர்களின் திறமையால் 22 லட்சம் ஆண்களும் பெண்களும் உழைப்பதற்கு முன் வந்தனர். அறுவடைக்கும், விதைப்பிற்கும் இடையேயுள்ள நாட்களில், அவர்கள் தங்கள் மண் வெட்டியுடன் வந்தார்கள். அவர்களுக்குத் தங்குமிடமும் மருத்துவப் பாதுகாப்பும் இலவச மாக அளிக்கப்பட்டன. நான்கு காட்டி (1 காட்டி 1.1 ராத்த லுக்குச் சமம்.) அரிசி கூலியாகக் கொடுக்கப்பட்டது. ஆண்டில் சராசரி எண்பது நாட்கள் அவர்கள் வேலை செய்தனர். கழிந்த இரண்டாண்டுகளில், அவர்கள் 1,370 மைல் நீளம் கரைகட்டி யிருக்கின்றனர்; 540 மைல் நீளம் ஆற்றைத் தோண்டியிருக் கின்றனர்.

ஆற்று நீரைப் பழைய போக்கில் திருப்ப இது போதாது. ஆற்றின் ஒழுக்குக் கட்டுப்படுத்தப்பட்டு, நீர் தேக்கப்பட வேண்டும். இருநூறு சிற்றாறுகள் ஹுவாய் நதியில் கலக் கின்றன. அச் சிற்றாறுகள் உற்பத்தியாகும் மலைப்பகுதியில்

இருபத்தொரு அணைத் தேக்கங்கள் கட்டி, நீரைக் கட்டுப்படுத்த வேண்டும். அணை ஒன்று கட்டப்பட்டு விட்டது. அதனால் விநாடிக்கு 13,000 கன கஜம் பாய்ந்த நீர் 6,500 கன கஜமாகக் குறைக்கப்பட்டு விட்டது. பதினேழு ஏரிகள் அகழப்பட்டு, ஒழுங்கு படுத்தப் படுவதால் நீர்த் தேக்க அளவு அதிகரிக்கும். அவற்றுள் ஹுங்கா ஏரி மிகப் பெரியது. அணை கட்டுதலும், மடைகள் அமைத்தலும், கால்வாய் வெட்டுதலும் அத் திட்டத்தில் உட்படுத்தப்பட் டுள்ளன. அதற்குத் தொழில் நுணுக்கமும் கருவிகளும் வேண்டும். மேற்பார்வையாளர், மாணவர், உயர்ந்த என்ஜினியர் ஆகியோரைக் கொண்ட தொழில் நிபுணர்கள் 16,000 பேரும், நிர்வாகத்திற்கென 40,000 பேரும் அப் பணியில் ஈடுபட்டுள்ளனர். ஒரு தனிப்பட்ட திட்டத்திற்கு மட்டும் இதை விடக் கூடுதலான அதிகாரிகளை நியமிக்க, சீனாவில் பயிற்சி பெற்ற நிபுணர்களில்லை. என்றாலும், ஒரு ‘மாதிரித் தொழிலாளி’யை என்ஜினியராகக் கருதப்படும் மனப்பான்மை சீனாவில் இருக்கின்றது. 1950 இறுதியில், ஹுவாய்த் திட்டத்தின் தொழிலாளிகளிடையே இருந்து பொறுக்கப்பட்ட 24,672 மாதிரித் தொழிலாளர்கள் இருந்தனர்.

சின்யெங் என்ற பெண் ஓர் உதவித் தலைமை என்ஜினியர்; ஆனால், ஒரு தகுதிபெற்ற என்ஜினியரல்லர். விடுவிக்கப்பட்ட பிரதேசத்திற்குத் தப்பிச் செல்லுமுன், அவள் ஷாங்காய்ப் பல்கலைக் கழகத்தில், மூன்றாம் ஆண்டு மாணவியாக என்ஜினியரிங் பயின்றாள். நாங்கள் படகில் செல்லும்போது, நான் அவள் பேச்சில் மயங்கி இருந்தேன். அதனால், அவள் பல நோக்கத் திட்டத்தைப் பற்றிப் பேசியபொழுது, அது உண்மைக்கு மாறான பிரசாரம் என்று அறிந்தேனில்லை. ஜங்கோச்சி என்ற இடத்திலுள்ள அணைக்கட்டைப் பார்த்தபின்தான் உண்மையை உணர்ந்தேன். அதுதான் ஹுவாய் நதிப் பள்ளத்தாக்கின் முக்கிய கட்டுப்பாட்டு அணை.

ஆற்றை எதிர்த்துச் சென்ற பிரயாணம் முழுவதும் ஏமாற்றமாய்விட்டது. ஆனால், அதில் இந்தியன் அறிந்து கொள்ள வேண்டிய முக்கிய பாடம் ஒன்றுள்ளது. எண்பது லட்சம் ஏக்கர் நிலங்கள் பாசன வசதி பெறுதற்கும், நேரடியாக நூற்றெழுபது லட்சம் மக்கள் பயனடைவதற்கும், ஐந்து கோடி மக்கள் பாதுகாப்புப் பெறுவதற்கும் கட்டப்படும் அணை, அளவில் பெரிதாய் இருத்தல் வேண்டும். அப் பகுதி மக்கள் தவிர,

திரட்டப்பட்ட ஏராளமான ஆண்களும் பெண்களும் சேர்ந்து விரைவில் அமைத்த அவ் வணைக்கட்டு, சீன ஜனநாயகத்தின் வெற்றி யென்று பேசப்படுகின்றது. ஆகவே, நான் அதைக் காண விரும்பியதில் வியப்பில்லை. இந்தியக் குழுவினரும் அவ் வணைக்கட்டை ஒரு மாதிரியாகக் கருதி, அதே போன்று இந்தியாவிலும் திட்டங்கள் கொண்டுவர எண்ணினர். சீனப் பிரதம மந்திரியின் வேண்டுகோளின்படி குழுவினர், ஆற்றிற்குமேல் நூறு மைல் அழைத்துச் செல்லப்பட்டனர். இதுவரையிலும் எந்தப் பார்வையாளரும் அவ் வணைக்கட்டைக் காண அழைத்துச் செல்லப்படவில்லை எனக் கூறப்பட்டது. அச் சிறிய படகில் செல்வது சிரமமாக இருந்தாலும், ஆர்வத்தால் பிரயாணம் செய்தனர். எனினும், அது ஒரு பயனற்ற பிரயாணமே.

கரைகளில் பல கிராமங்களைக் கடந்து சென்றோம். அவற்றின் வாழ்க்கையும் சாதாரணமானவையாகத் தோன்றியது. மக்கள் மிக்க சுறுசுறுப்பாய் வேலை செய்வதற்கான அறிகுறி ஒன்றுமில்லை. கரைகளின் மேலுள்ள வேலை முடிந்து விட்டது. ஆற்று வெள்ளம் கரைகளிடையே ஓடியது. இடையிடையே குழந்தைகள் சிவப்புக் கொடியுடன் ஊர்வலமாகச் செல்வதைக் கண்டேன். ஆனால், அது வழக்கம்போல் மௌனமாக நடக்கும் அணிவகுப்பு. இசையோ, முழக்கமோ இல்லை. அந்தப் படகில் நாங்கள் கழித்த மூன்று இரவுகளிலும், உழவர்களின் யாங்கோ நடனத்தைக் குறிக்கும் கொட்டு முழக்கமோ, சிங்கியின் நாதமோ கேட்கவில்லை.

யாங்கோ என்பது உழவர்களின் பழைய நடனம். ஒரு முறை அது மதவாதிகளால் தடைசெய்யப்பட்டது. மா அதற்குத் தன் தனி அனுமதியை வழங்கியுள்ளார். ஆகவே, அது கம்யூனிஸ்டுகளால் தோற்றுவிக்கப்பட்ட கலாசாரங்களில் ஒன்றெனக் கருதப்படுகின்றது. நகரங்களில் 'மீண்டும் விடுதலை பெற்று மக்கள் மகிழ்தற்குள்ள ஆர்வத்தை'க் காட்ட, நகரங்களிலும், நாட்டுப் புறங்களிலு முள்ள மக்கள் அந் நாட்டியத்தை ஆடினர். அது அறுவடைக் காலத்தை ஒட்டிய கிராமிய நடனம். வட்டமாகவோ, வளைவாகவோ நின்று, இருவர் இணைந்து ஆடுவர். சிங்கியாலும், முரசாலும் ஓசை எழுப்பப் பெறும். அதன் இசை எளிமையானது; பின் தொடர்ந்து பாடுதற்கும் எளிது. ஆனால், திருப்பித் திருப்பி வெறுக்கும் வகையில் பாடப்படும். யாங்கோ நடனத்தின்போது பாடப்பட்ட ஒரு பழம் பாட்டு இது:

" ஆண்டுதோறும் அறுவடை;
எனினும், கையில் எதுவுமில்லை!
ஆண்டுதோறும் கடன்பெற்று,
ஆளுய் நீயே கடஞளி!
இடிந்த குடிலும், வளைந்த தட்டும்,
இன்னும் இற்ற மண்பாண்டம்,
துண்டு நிலமும், சவக் குழியும்,
எஞ்சி நிற்கும் செல்வமே!"

சீனனின் குடும்பத்தைப் புதைக்கச் சவக்குழி; ஒரு துண்டு நிலம்! இப்பொழுதும் அவனிடம் அரை ஏக்கர் துண்டு நிலமே இருக்கின்றது! யாங்கோ நடனம் ஆண்டு முழுவதும் ஆடப் படுகின்றது; அக்டோபர் முதல் தேதி அணி வகுப்பிலும், பள்ளிக் குழந்தைகளின் உல்லாச யாத்திரையின் போதும் ஆடப்படுகின்றது.

ஆனல், ஹூவாயில் அப்பொழுது வசந்த காலம். உழவன் வேலையில் ஈடுபட்டிருப்பான். ஆற்றில் மண் எடுக்கும் யந்திரத் தின் சங்கிலியோசையைத் தவிர வேறு எதையும் நான் கேட்க வில்லை. 'இள மங்கை'யைப் பயன்படுத்தும் முயற்சியில் மக்கள் மூழ்கியிருந்தனர். மனிதக் கரங்களால் செய்ய முடியாது எனக் கருதப்பட்ட மகத்தான திட்டத்தில் - ஜங்கோச்சி அணைக்கட்டில்- மக்களின் ஆர்வத்தைக் காணலாம் என நான் நம்பியிருந்தேன்.

ஆண்களையும், பெண்களையும், குழந்தைகளையும் ஏற்றிச் சென்ற பல படகுகளை நாங்கள் கடந்து சென்ருேம். அவைகள் எந் நோக்கமு மின்றிச் சென்றுகொண் டிருந்தன. பலருக்கு அச் சிறிய படகே வீடாக இருந்தது. சீன மக்களுக்குத் தங்கு வதற்கு வீடும், நிரந்தரமான வாழ்வும் அமைய வெகுநாட்க ளாகும். இரண்டு நாள், அலுத்துக் களைத்த பிரயாணத்தின் பின்னர், நாங்கள் ஜங்கோச்சி எய்தினேம். புதிய சீனவின் அரிய சாதனைகளைப் பார்த்து அவர்களின் உற்சாகத்தில் பங்கு கொள்ளலாம் என்ற ஆசையோடு வந்தோம். ஆனல், அது இங்கேயும் கிட்டவில்லை.

அங்குள்ள காட்சிகள் குழப்பமாகவும் வியப்பாகவும் இருந்தன. 'சாதாரண மக்களின் பலத்தினுலும் அறிவினுலும் கழிந்த ஆண்டில் மூன்று மாதங்களில் கட்டி முடிக்கப் பெற்றது' என்றெல்லாம் இத் திட்டத்தைப் பற்றி எவ்வளவோ கேள்விப்பட்டிருக்கிறேன். எங்கள் முன்னல் நாங்கள் பார்த்தது,

பெரிய அணைத்திட்ட மன்று. தண்ணீரின் வேகத்தைக் கட்டுப் படுத்த ஆற்றின் குறுக்கே கட்டப்பட்ட ஒரு தடுப்புத்தான். இது மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட் டிருந்தது. முதல் பாகம், நதி பாயும் திறந்த வெளி. முன்னூறு அடி நீளமுள்ள இரண்டா வது பாகத்தில், எட்டு மடைகள் இருந்தன. நான்கு மடைக ளுள்ள மூன்ருவது பாகம், தண்ணீரைத் தாழ்ந்த நிலங்களுக்குத் திருப்பிவிட்டது. ஏராளமான ஆட்களும் சாதனங்களும் பயன் படுத்தப் பட்டதாகக் கணக்குகள் காட்டப்பட்ட போதிலும், இங்கே இருப்பது மிகச் சாதாரணமானது. அதைப் பார்க்கக் கூட என் மனம் விரும்பவில்லை. எங்களுக்கு எல்லாவற்றையும் விவரித்துக்கொண் டிருந்த பிரதம என்ஜினியர் எங்கள் முகத் தில் தெரிந்த ஏமாற்றத்தைப் புரிந்து கொண்டாள். உற்சாக மாக உழைத்த கிராமாந்திர பாட்டாளிகள் ஒருவரும் அங்கு இல்லை. மூன்று மாதமாக யாரேனும் அங்குத் தங்கியிருந்ததற் கான ஓர் அடையாளம் கூட இல்லை. இரண்டு மூன்று குடிசை கள் அங்கு மிங்கும் தெரிந்தன. அவ்வளவுதான். அணையின் மூன்ருவது பாகம் கூட இன்னும் கட்டி முடிக்கப்படவில்லை. பெருவெள்ளத்தைத் தடுக்கும் திட்டம், நதியின் மேல்பாகத்தி லுள்ள வளம் குறைந்த நிலங்களில் வெள்ளத்தைப் பெருக் கும் திட்டமாகவே தெரிந்தது. என்ஜினியர் இதை ஒப்புக் கொண்டாள். நதியின் கீழேயுள்ள பாகங்கள் வெள்ளம் பெருக்கப்படும் மேல் பாகத்தைவிட வளம் நிறைந்தது என்று சொல்லி அணையின் தன்மையை ஆதரித்தாள். அவளது பெருமைக்குச் சிறிது பங்கமேற்பட்டது. ஆனல், அவள் 'இந்த முழு அணையும் சீனர்களின் அயரா உழைப்புத்தான்' என்று சொல்லிச் சமாளிக்க முயன்ருள். 'எங்களுக்குத் தேவைப்பட்ட மடைகளை அடைக்கும் சீப்பு, சிமெண்ட் கலக்கும் இயந்திரம் எல்லாம் சீனவிலேயே செய்யப்பட்டன. 1,350,000 டன் அரிசி யின் விலைக்குச் சமமான தொகை செலவிட்டிருக்கிருேம். திறந்த நதிவெளியில் பெரிய அடைப்புகள் பின்னல் கட்டப் போகிருேம். நதியின் மேல்பாகத்தில் பட்ஸ்லிங் என்ற இடத்தில் வேலை நடந்துகொண் டிருக்கிறது. உழைக்கும் சீனவைப் பார்க்க வேண்டுமென்ருல், நாம் அங்கே போயிருக்கவேண்டும்' என்ருள். கம்யூனிஸ நாடுகளில் இது இயல்புதான். பொதுவாக எதைப் பார்க்க வேண்டுமென்று நாம் விரும்புகிருேமோ அங்குப் போக முடியாது. உத்தியோக முறையில் தரப்படுகிற கணக்கற்ற

அறிக்கைகளையும் விளம்பரங்களையும் பார்த்துத் திருப்திப்பட்டுக் கொள்ள வேண்டியதுதான். இருந்தபோதிலும், ஹுவாயி லுள்ள ஜங்கோச்சிக்குச் செய்த விஜயம் பயனளித்தது. மற்ற நாடுகளில் அணைத்திட்டங்களால் ஏற்படுகிற அனேகப் பிரச்சினை கள் இங்குள்ள நிலச் சீர்திருத்தம் இல்லாமலாக்கிவிட்டது என்பதை நிரூபித்தது. நீர் நிறைந்ததால் நிலமிழந்த விவசாயி களுக்கு வாழ்வு அமைத்துக் கொடுத்து நஷ்ட ஈடு கொடுக்கும் பிரச்சினை இங்குக் கடினமே அன்று. இவ் விவசாயிகளுக்கு வேறெங்காவது நில வினியோகத்தில் பங்கு கொடுக்க முடியும்.

உடனடிப் பிரச்சினைகளுக்கும் அங்கு நடைமுறைப் பரிகாரம் இருந்தது. அந் நாட்டிலேயே கிடைக்கும் விஞ்ஞான நுட்பங் களையும் சாதனங்களையும் வைத்துக்கொண்டு பிரச்சினைகளைச் சரிக்கட்டுவதில் சீனர்கள் திருப்திப்பட்டுக் கொண்டனர். பரந்த மனித சக்தியைத் திரட்டி உழைக்கும்படி செய்யச் சீனவுக்கு முடிந்தது. பல லட்சக் கணக்கானவர்களின் உழைப்பின்றி ஹுவாய் அணைகள் குறிப்பிட்ட காலத்தில் கட்டமுடியாது. இப் பழமையான பூமியின் தோற்றத்தை மாற்றுவதாகக் கூறப்படு கிற இந்தப் பெரிய எழுச்சியின் பின்னல் இயங்க வேண்டிய மாபெரும் சக்தியை நான் காணவில்லை. இங்குள்ள நிலச் சீர்திருத்தம் முதன் முதலாக வரிப் பளுவும் கடன் தொல்லையு மில்லாத நிலங்களை உழுபவனுக்குக் கொடுத்தது. இந்த மாற்றம்தான் அங்குள்ள விவசாயிகளுக்குப் புதுக் கண்ணேட் டத்தைக் கொடுத்தது என்று அரசாங்கப் பிரசுரங்கள் விவரித் தன. இப்போது விவசாயிக்கு அவன் நலத்திற்காகவே உழைக் கிருன் என்று தெரியும். சீனவைத் தொழில் மயமாக்கும் அமைப்பு வேலைக்கு இந்த மனமாற்றம் அவசியம் என்கிருர்கள். வேறு பல கிராமங்களில் விஜயம் செய்த நான் இந்தப் புது 'உடைமை உணர்ச்சி' விவசாயிகளை உற்சாகப்படுத்துவதைப் பார்த்தேன். வாழ்விற்கும் சாவிற்கும் நடுவேயுள்ள நம்பிக்கை யின் அடையாளம்தான் அவர்களுக்கு இந்த நிலம். சீனவை நோக்கியிருக்கும் எந்தவித மலை போன்ற கஷ்டத்தையும் இந்த நம்பிக்கை நீக்கிவிடும். ஆனல், உடைமையின் மேலுள்ள ஆசை யும், சோஷலிசத்தினுல் உண்டாகும் பொது நன்மையும் இரண்டு மாறுபட்ட மனே நிலைகள்.

# 4. தொழிலாளரும் மாதிரியும்

**ஜா**க்பெல்டன் சொல்லுகிருர்: "சியாங்கைஷேக்கை நிலை குலையச் செய்தது தீராத ஆசைதான். பேராசையைத் தவிர வேறென்று மில்லை. போர் நடந்த பகுதிகளிலும், புரட்சி நடந்த பகுதிகளிலும் சீன விவசாயிகளால் கொட்டப்பட்ட ஒளி வீசும் நம்பிக்கையும், கொடூரமான வெறுப்பும் ஒரு பெரிய சக்தியை அவிழ்த்து விட்டன. அது சீன சமுதாயத்தில் ஒரு அணுக்குண்டின் சக்தியோடு வெடித்து அதை ஏறக்குறைய அழித்தேவிட்டது." தோல்வியினுலும், பிரபுக்களின் மேலுள்ள வெறுப்பினுலும் துரத்தப்பட்டு, இதுவரை வரிக் குறைவையே பிரசாரம் செய்து வந்த பரம்பரை சாதுக்களான கம்யூனிஸ்ட்டுகள், 'எங்கள் இரத்தத்தை உறிஞ்சும் பிரபுக்கள் ஒழிக' என்ற விவசாயிகளின் முழக்கத்தை எடுத்துக் கொண்டனர். 'நிலப் பிரபுத்துவத்தை ஒழித்துவிடுவோம். உழுபவனுக்கு நிலத்தைப் பங்கிடுவோம்' என்ற வாக்குறுதிகளைக் கேடயமாக வைத்துக்கொண்டு, கம்யூனிஸ்டுகள் பதவியில் ஏறினுர்கள்.

சீனுவில் நடந்த புரட்சி முழுமையும் விவசாயிகளின் புரட்சியே. ஆகவே, விவசாயிகளின் சக்தியே நாடெங்கிலும் மேலோங்கி நிற்கும் என்று எதிர்பார்க்கலாம். கம்யூனிஸ்டுகளின் வர்க்கப் போராட்ட சித்தாந்தம் சோஷலிச சமுதாயத்தைக் கட்ட, பாட்டாளிகளின் தலைமையையும்,சர்வாதிகாரத்தையும் முக்கிய சாதனமாகக் கொண்டுள்ளது. சீனுவின் பாட்டாளிகளாகிய 20 லட்சம் ஆலைத் தொழிலாளர்கள் புரட்சிகரமான சக்தி படைத்திருந்தாலும் பலம் குன்றியவர்களே. ஆகவே, கம்யூனிஸ்டுக் கட்சி மிதமான போக்கையும் குறுகிய மனப்பான்மையையும் கொண்ட விவசாயிகளை எதிர்க்க, பாட்டாளி வர்க்கத்தைப் பலம் பெறச் செய்யவேண்டும். விவசாயிகள் அவர்களுடைய நிலப் பசி தீர்ந்துவிட்டால் தனிமையாக அமைதியுடன் இருக்கவே விரும்புவார்கள். பாட்டாளிகளுக்கும் விவசாயிகளுக்கும் ஏற்படுகிற இந்தப் போராட்டம்தான் சீனுவிலுள்ள கம்யூனிசத்தின் எதிர்காலத்தை ஒரு நாள் நிர்ணயிக்கும்.

கம்யூனிஸ்டுகள் இந்த முரண்பாட்டை உணர்ந்து கொண்டு தான் விவசாயிகளை அவர்கள் நிலத்துடன் விட்டு வைத்திருக்

கிறார்கள். இதற்கு முன்னுள்ள அத்தியாயங்களில் கூட்டுறவு விவசாயத்தை நோக்கி அவர்கள் மெதுவாகவும், எச்சரிக்கையாகவும் அடியெடுத்து வைத்ததைப் பார்த்தோம். இதற்கிடையில் பாட்டாளிகளின் தலைமையை மக்களுக்கு அடிக்கடி நினைவுபடுத்திக்கொண்டும், சித்தாந்த பலம் பொருந்திய ஒன்றுபட்ட பாட்டாளி வர்க்கத்தை அமைத்துக் கொண்டும் கம்யூனிஸ்டுக் கட்சி பகிரங்க சர்வாதிகாரத்திற்குத் தயாராகிக்கொண் டிருக்கிறது.

சீனாவில் தொழிலாளர் இயக்கம், அரசாங்கத்தின் முக்கிய ஆயுதமாகும். அதற்குப் பொருளுதவியும் பிற வசதிகளும் கட்சியினின்றும் கிடைக்கின்றன. பதிலாக, தொழிலாளர் வர்க்கம் அரசாங்கக் கொள்கைகளைப் பரப்ப வேண்டும்; கம்யூனிஸ்டுக் கட்சி அதிகாரத்தை வலுப்படுத்த வேண்டும். தொழிற்சாலைகளில் தொழிலாளர் சங்கச் சட்டம் சரிவரக் கடைப்பிடிக்கப் பட்டு வருகின்றதா எனக் கவனிக்க வேண்டியது அச் சங்கங்களின் பொறுப்பாகும். அரசாங்கத் தொழில்களில், தொழிற் சாலை நிர்வாகக் குழுவின் மூலம் நிர்வாகத்திலும், உற்பத்தியிலும் அச் சங்கம் தலையிடுகின்றது. அதனால்,எல்லாத் தொழிலாளர்களும் சங்கத்தின் கட்டுப்பாட்டிற்கு உட்படுகின்றனர். ஆனால், முறைப்படி அவர்கள் விருப்பத்திற் கொப்பச் சங்கத்தில் சேர்ந்தோ, சேராமலோ இருக்கலாம். இன்று சீனாவின், அகில சீன ஐக்கியத் தொழிற் சங்கத்தில் அறுபது லட்சத்திற்கு மேலான உறுப்பினர்கள் இருக்கின்றனர். தொழிற்சாலைகள், தபால் - தந்தி நிலையங்கள், ரயில் - கடல் போக்குவரவு நிறுவனங்கள், கல்விச் சாலைகள், அச்சு நிலையங்கள் ஆகியவற்றின் தொழிலாளர்கள் அதில் அடங்குவர்.

ஜனநாயக நிர்வாக உரிமையைத் தொழிலாளர்கட்கு வழங்கும் பொருட்டு, தொழிற்சாலை நிர்வாகக் குழு ஏற்படுத்தப் பட்டுள்ளது. அரசாங்கத் தொழிற்சாலையில் அக் குழு, அரசாங்கத் தொழில் நிர்வாக மன்றத்தின் கீழ்ச் செயற்படும். உற்பத்தியைப் பெருக்க ஊக்கமளித்தலே அக் குழுவின் முதற் பணி. உற்பத்தித் திட்டங்களும், பிற அலுவல்களும், அரசாங்க மன்றத்தாலேயே கொடுக்கப்படுகின்றன. அவைகளைச் செயற்படுத்துவதுதான் குழுவின் வேலை. கூலி, தொழிலாளர் நலம் ஆகியவற்றைப் பற்றி அரசாங்கம் அறிவிப்பதை நிறைவேற்றவேண்டும். தனிப்

பட்டோர் தொழிலை அரசாங்கம் எடுத்துக்கொண்ட பின்னர், தொழிலாளர்கட்குக் கூலி குறைக்கப்பட்டு, அதனை அவர்கள் ஒப்புக் கொள்ளுமாறு செய்யப்பட்டது. தனிப்பட்டோர் தொழில்களில் இக் குழுக்கள் போராடி வந்துள்ளன. அக் குழுக் கூட்டங்களில் எவ்வித முடிவும் ஏற்படாமல் தொடர்ந்த விவாதங்கள் நடைபெற்றதாக ஷாங்காய் தொழிலதிபர்கள் கூறினார்கள். கூலி, அதிகப்படி சிப்பந்திகளை வெளியேற்றல், இன்னும் பல தொல்லைகள் தொடர்ந்து நடைபெறுகின்றன. இக் குறைகள் யாவும் அரசாங்கத் தொழில் மன்றத்திற்குத் தெரிவிக்கப்படும். மன்றத்தாரும் தொழிலாளர் சார்பிலே நிற்கின்றனர். ஆனால், அத் தொழில் அரசாங்க உடமையாகி விட்டால், அதற்குச் சாதகமாகவே அக் குறைகள் தீர்த்து வைக்கப்படுகின்றன. கூலியை ஒழுங்குபடுத்தல், வேலையைத் தரம் பிரித்தளித்தல், வேலையாட்களை வெளியேற்றல், உற்பத்தியை ஒழுங்குபடுத்தல் ஆகியவை நிர்வாகத்தின் உரிமை ஏட்டில் மட்டுமே எழுதப்பட்டுள்ளன. துணி தவிர்த்துப் பல தனிப்பட்டோர் தொழில்கள் லாபம் குறைந்து வருவதால், அவதிப்படுகின்றன. ஏனெனில், உற்பத்திப் பொருட்களின் விலை நிர்ணயத்திற்கும், உற்பத்திச் செலவிற்கும் ஒரு தொடர்பு மில்லை.

அரசாங்கத்தின் பொருளாதார - அரசியல் நோக்கங்கள், தொழிற்சங்கங்களால் நிறைவேற்றப்படுகின்றன. சீன அரசாங்க அறிக்கைப்படி, அகில சீன ஐக்கியத் தொழிற் சங்கத்தின் பணிகளாவன : 'உற்பத்திப் பெருக்கத்திற்கு மாதிரி இயக்கங்கள் நடத்தல்; தொழிலில் பாதுகாப்பு நடவடிக்கைகளும், ஆரோக்கிய நிலையங்களும் அபிவிருத்தியடையச் செய்தல்; கலைக் கூடங்களும், பொது நிலையங்களும் ஏற்படுத்தி, அதன் மூலம் தொழிலாளர்களின் கல்லாமையை ஒழித்தலும், தொழிலாளர்களுக்கு, மார்க்ஸிசம், லெனினிசம், மாசேதுங்கின் சீனப் புரட்சித் தத்துவம் ஆகியவற்றைக் கற்கவும் உதவியளித்தல்.'

தொழிலாளர்களை அதிக நேரம் உழைக்குமாறு கட்டாயப்படுத்துவதற்கும், கொரியா நிதிக்காகத் 'தேசப்பற்று இயக்கங்கள்' மூலம் நன்கொடை பெறுவதற்கும் கொரியப் போர் பயன்படுத்தப்பட்டது. பல தொழிற்சாலைகள் ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் அதிகமாக வேலை செய்தன. தொழிலாளர்கள் நாள்தோறும் பத்து அல்லது பதினொரு மணி நேரம்

வேலை செய்கிறார்கள். எட்டுமணி நேர வேலை என்பது இல்லை. நாங்கிங்கில் உரத் தொழிற்சாலை ஒன்றில் வேலை நேர முடிவை அறிவிக்கும் சங்கு ஊதப்பட்டது; ஆனால் ஒரு தொழிலாளியாவது வீடு செல்லக் காணோம். அவர்கள் தொழிற்சாலையினுள்ளே யந்திரத்தைச் சுற்றிப் பத்துப் பன்னிரண்டு பேர் உட்கார்ந்துகொண்டு, 'உற்பத்திப் பிரச்சினை'களை விவாதிக்கின்றனர் என்று கூறப்பட்டது. அக் கூட்டத்தில் பலர் அரசியல் பாடம் கேட்டுக்கொண் டிருந்தனர்; அல்லது கேட்பதாகப் பாவனை பண்ணிக்கொண் டிருந்தனர். ஒவ்வொரு தொழிற்சாலையிலும் இது போன்ற வகுப்புக்கள் காலை ஒரு மணி நேரமும், மாலை ஒரு மணி நேரமும் வேலை நேரத்தின் பின்னர் நடைபெறுகின்றன. அவ் வகுப்புக்களில் அவர்கட்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுக்கப்படுகின்றது; 'தொழிலாளர் வர்க்கத் தலைமையின் பொறுப்புக்கள்' பற்றியும் அறிவுறுத்தப்படுகின்றது; நுணுக்கம் தெரிந்த தொழிலாளிகளை அழைத்து யந்திரத்தை ஓட்டிக் காட்டுமாறு கூறுகின்றனர். அத்தகைய வகுப்புக்களின் பயனை உணருகின்றோம். ஆனால், அதிக நேரம் அவர்கட்கு வேலை கொடுப்பதால் அவ் வகுப்புக்களின் பயன் குறையும்.

'சீனாவின் புனர் நிர்மாணம்' என்னும் இதழ் எழுதுகின்றது:

> *சீனத் தொழிலாளிக்கு வாழ்வில் புதிய விளக்கம் பிறந்துள்ளது. அவனுடைய நாட்டிற்கு அவனே அரசன் என்பது அவனுக்குத் தெரிகின்றது. 'உற்பத்திப் பெருக்கத்தின் உயர்வு அவனுடைய வருமான உயர்வு; பொதுநல உயர்வு' என்ற உண்மையை அவன் தன் தொழிற்சாலை அனுபவத்திலிருந்து அறிந்து கொண்டான். அமைதியாகவும் சோம்பலாகவும் இருந்த அவன், இப்போது தானே வலிந்து செயலாற்றுகின்றான்.*

அவ்வப்போது நடைபெறும் அரசியல் இயக்கங்கள் அவனது முந்துறும் உள்ளத்தை மேலும் தூண்டி விடுகின்றன. கழிந்த இரண்டாண்டுகளில், தொழிலாளி வர்க்கம் முன்னின்று நடத்துமாறு ஆணையிடப்பட்ட மூன்று இயக்கங்கள் நடைபெற்றன. இவ் வியக்கங்கள் வர்க்கப் போராட்ட உணர்ச்சியை எழுப்புமாறு நடத்தப்பெற்றன. முதல் இயக்கம், கோமிண்டாங் வாதிகளை அழிப்பதில் ஈடுபட்டது; இரண்டாவது,கொரியாவிற்கு

உதவி செய் என்னும் அமெரிக்க எதிர்ப்பு இயக்கம்; கடைசியாக, ஸான்பான்வுபான் இயக்கம். இவ் வியக்கங்கள் பொருளாதார - நிதி நோக்கங்கள் தவிர, தொழிலாளர்களை எழுச்சியூட்டவும் செய்தன ; தொழிலாளர்களை அரசாங்கத்தின் பணிகளில் பங்கு கொள்வோராகவும் உணரச் செய்தன.

உற்பத்தியைப் பெருக்கும் வழிகளில் தொழிலாளர் இயக்கம் பெரிதும் பயன்பட்டது. ஒவ்வொரு தொழில் நிலையத்திலும், நிர்மாணத் திட்டத்திலும் 'மாதிரித் தொழிலாளர்கள்' தேர்ந்தெடுக்கப்பட்டு, அவர்கட்குக் கூலி உயர்வும், பிற வசதிகளும் அளிக்கப்படுகின்றன. பார்வையாளர்கள் தொழிற்சாலைக்கு வரும்பொழுது மாதிரித் தொழிலாளர்கள் தங்கள் பரிசுகளுடன் அங்கு நின்றுகொண் டிருப்பார்கள். பல 'கண்டு பிடிப்பு'க்களும், உற்பத்தி உயர்வுப் பணிகளும் அவர்கள் பெயரால் காட்டப்படும். அவர்கள் பெயர் விளம்பரப் படுத்தப்படும். சிறப்பு நாட்களிலும், மே நாள் விழாவிலும் அணிவகுப்பில் கலந்துகொள்ள அவர்கள் அனுப்பப்படுகின்றனர். நான் சென்ற தொழில் நிலையங்களில் பலரைப் பார்த்தேன். புதிய சுருக்கு விழுந்த நீல உடையில் புன்சிரிப்புத் தவழ, தங்கள் சிறப்பைக் காட்டிக் கொண்டு அவர்கள் நின்றார்கள்.

ஒரு மாதிரித் தொழிலாளியின் தகுதிக்கு என்ன சாதனை வேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை. மாதிரித் தொழிலாளியின் சிறப்பை நான் கண்டு கொள்ள முடியவில்லை. பழக்கத்தால் தொழில் நுணுக்கம் மெதுவாக வளர்ச்சியடைகின்றது. 'கண்டுபிடிப்புகள்' என்ற வார்த்தையைத் தாராளமாகப் பயன்படுத்துவதால் இந்த உண்மை பொய்யாகிவிடும். முதலாளிகளுக்காக உழைக்காமல், 'அவர்கட்காகவும், நாட்டு நலனுக்காகவும் உழைக்கின்றோம்' என்ற காரணத்தால், வல்லுநர்கள் எங்கும் தோன்றுகின்றார்கள் போலும்! இதை யொட்டிச் 'சீனாவின் புனர் நிர்மாணம்' எழுதியதாவது :

> தியன்ஸ்டீன் ஆட்டோமொபைல் அஸம்பிளித் தொழிற்சாலை தனது முதலாவது வண்டியைச் செய்ய எண்ணிய போது, பல கருவிகள் இல்லாதிருந்தன. தொழிலாளர்கள் இதைப் பற்றிப் பேசினார்கள். பின் தேவையானவற்றைப் பழைய யந்திரங்களிலிருந்தும் பாகங்களிலிருந்தும் எடுத்தார்கள்.

தியன்ஸ்டீனில் நான் பார்த்த வண்டி 'கண்டுபிடிப்பு' எனக் கூறப்பட்டது.

துணித் தொழிற்சாலைகளில், 'கண்டுபிடிப்பின்' பயனை நான் பார்க்க முடிந்தது. துணி பற்றுக்குறையிருந்தது. வருங் காலத்தில் ஏராளமான துணி உற்பத்தி செய்யும் வழிகளைக் கண்டுபிடிக்கும் தேசியத் தலைவன் ஒருவனைத் தோற்றுவிக்க வேண்டும். அதற்காக ஹோசியன்ஸ¬ கதை கட்டப்பட்டது. துணித் தொழிலில் அரிய சாதனை செய்து பரிசு பெற்ற ஒரு பெண்ணைப் பற்றியது அது. 'மக்கள் சீனு' 1952 ஏப்ரல் 11 இதழில் எழுதப்பட்டுள்ளதாவது.

> மாதிரி துணித் தொழிலாளியான ஹோசியன்ஸ¬, ஷான்துங் என்ற இடத்தைச் சேர்ந்த பதினேழு வயதுப் பெண் ஆவாள். நூற்கதிர்களில் பருத்தி வீணுவதை 1.5 சதவீதத்திலிருந்து 0.25 சதவீதத்திற்குக் குறைத்துவிட்டாள். தேசத்தின் துணித் தொழிலில் அவளது முறை கையாளப்பட்டது. தேச முழுவதும் அம் முறையினுல் ஆண்டுதோறும் 44,460 பேல்கள் அல்லது 640 இலட்சம் கஜங்கள் துணி அதிகச் செலவில்லாமல் - முதலீடு இல்லாமல் - உற்பத்தி பெருகிவிட்டது. சீனுவின் இன்றையத் துணி உபயோகத் தரத்தின்படி 40 லட்சம் மக்களுக்கு ஓர் ஆண்டுக்கு அத் துணி போதும்.

'சீனுவின் புனர் நிர்மாணம்' மே - ஜூன் 1951 இதழில் அவளைப் பற்றி மேலும் குறிப்பிடுகின்றது:

> அவளுடைய சாதனை தெரிந்ததும் பல விருதுகள் அவளுக்கு அளிக்கப்பட்டன. பீகிங்கில் நடைபெற்ற சீன மக்கள் அரசியல் ஆலோசனை மாநாட்டின் நவம்பர் கூட்டத்திற்கு அவள் அனுப்பப்பட்டாள். எல்லாத் துறைகளிலும், தேசியத் தலைவர்களுடன் அவள் அக் கூட்டத்தில் கலந்து கொண்டாள். புதிய ஜனநாயக இளைஞர் சங்கத்தில் அவள் மாதிரி உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டாள். அவளது முறை நாடெங்கணும் அத் தொழிலில் பயன்படுத்தப்பட்டு, அதைப் பற்றி யாவரும் வியந்து கூறுகின்றனர்.

ஹெங்குவான் ஆலையில், தேசப் புகழ்பெற்ற அப் புதிய மாதிரி முறையை நான் பார்க்க முடிந்தது. பியன்ஷிசிங்

என்பவர்தான் உண்மையான உற்பத்திப் புள்ளி விபரங்களைக் கொடுத்தார். விடுதலைக்கு முன்னால் அவ் ஆலையில் 1,000 தொழிலாளர் வேலை செய்தனர். இப்பொழுது 1,800 பேர் பத்து மணி நேரம் இரண்டு பிரிவாக வேலை செய்கின்றனர். விடுதலைக்கு முன் நாளொன்றில் கதிருக்கு 0.64 ராத்தல் நூல் நூற்கப்பட்டது. தறிக்கு 47.16 கஜம் துணி நெய்யப்பட்டது. இப்பொழுது கதிருக்கு 0.97 ராத்தலும், தறிக்கு 83 கஜம் துணியும் இருபது மணி நேரங்கொண்ட ஒரு நாளில் நூற்கப்படுகின்றது. சீனத் தொழிலாளியின் திறமை இந்தியத் தொழிலாளியின் திறமைக்குச் சமமாக இருக்கின்றது என இப் புள்ளி விவரங்கள் காட்டுகின்றன.

ஒரு தொழிலாளர் நாட்டில், தொழிலாளி தனக்காகவும் நாட்டிற்காகவும் வேலை செய்வதால், நான் அவர்கள் தொழில்களிலுள்ள கூலியை அறிந்துகொள்ள விரும்பினேன். தொழிற் சங்கங்கள் நிர்வாகத்துடன் சம்பள உயர்வு பற்றிப் பேசுவதில்லை. இரண்டு மனிதர்களின் வாழ்க்கைச் செலவைக் குறைந்தபட்சக் கூலியாக அரசாங்கம் நிர்ணயித்துள்ளது. வேலைக்குத் தகுந்தவாறு கூலி கொடுக்கப்பட்டது. வாழ்க்கைச் செலவில் எவையெல்லாம் சேர்க்கப்பட்டுள்ளன என்பதை அறிவது எளிதாக இல்லை. வாழ்க்கைக்குத் தேவையான அரிசி, மா, எண்ணெய், துணி, உப்பு, கரி ஆகியவற்றின் விலைகளைக்கொண்டு, வாழ்க்கைச் செலவு 1,900 யுவான் அல்லது 8 ஸென்ட் என முக்டனில் நிர்ணயிக்கப்பட்டு, கூலி கொடுக்கப்படுகின்றது. ஹுவாய் நதித் திட்டத்தில் உழவுத் தொழிலாளருக்கு 4 காட்டி அல்லது ராத்தல் அரிசியும் இலவச வீடும் கொடுக்கப்படுகின்றன. அதில் 3½ காட்டிகள் அவன் உணவிற்கும், ½ காட்டி பிற செலவிற்கும் மாற்றிக்கொள்வதாக நான் கேள்விப்பட்டேன். மஞ்சூரியாவில் நான் பார்த்த தொழிற்சாலைகளில் தொழிலாளர் கூலி மாதமொன்றிற்கு 8.50 டாலர் முதல் 25.60 டாலர் வரை கொடுக்கப்படுகின்றது. ஆனால் 'நுணுக்கத் தொழிலாளி' என்றழைக்கப்படும் மாதிரித் தொழிலாளி மாதம் 41 டாலர் பெறுகின்றான். தியன்ஸ்டீனில் தொழிலாளருக்குச் சம்பளம் தானியமாக வழங்கப்படுகின்றது. அது சுமார் 28 டாலராகும். இக் கூலிகளை இந்திய ஆலைத் தொழிலாளியின் கூலியுடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

முக்டன் சுரங்கத் தொழில்களில் கூலி குறைவு. ஷாங்காயில் தொழிற்சாலை அரசாங்க நிர்வாகத்திற்கு வந்ததும், தொழிற்சங்கம், தேசத்தின் பொருளாதாரச் சிக்கனத்தை யொட்டிக் கூலியைக் குறைத்துக்கொண்டது. சீனுவின் இன்றையக் கூலி, எண்ணிக்கையிலும் மதிப்பிலும் உயர்ந்துள்ளது என்பது உண்மை. மேலும், 1951 மார்ச்சு மாதம் நிறைவேற்றப் பட்ட தொழிலாளர் இன்சூரன்ஸ் சட்டங்கள், தொழிலாளிக்கு முதுமையிலும், பிணியிலும் பாதுகாப்பு அளிக்கின்றது.

சட்டப்படி நிர்வாகம் தொழிலாளர்களின் மருத்துவச் செலவை ஏற்றுக்கொள்ள வேண்டும்; பிணியின்போதுள்ள ஓய்வு நாட்களுக்குச் சம்பளம் கொடுக்க வேண்டும். தொழிலால் ஏற்படும் நோய்களுக்கு மூன்று மாத முழுச் சம்பளமும், பிற நோய்களுக்கு அரைச் சம்பளமும் தொழிலாளிகளுக்குக் கொடுக்கப்படுகின்றன. அதற்குமேல் மூன்று முதல் ஆறு மாதங்கட்கு இன்சூரன்ஸ் நிதியிலிருந்து மூன்றில் ஒன்று முதல் அரைச் சம்பளம் வரை பெறுகின்றனர். இதற்கு மேல் அவர்களுக்கு இயலாமை ஓய்வுச் சம்பளம் கொடுக்கப்படுகின்றது. ஆண்களுக்கு அறுபதும், பெண்களுக்கு ஐம்பதற்கு மேலும் இன்சூரன்ஸ் நிதியிலிருந்து ஓய்வுச் சம்பளம் கொடுக்கப்படுகின்றது. அச் சம்பளம் பெறுவதற்கு அவர்கள் விலகும் நிறுவனத்தில் பத்து ஆண்டும், மொத்தத்தில் இருபத்தைந்து ஆண்டும் வேலையில் இருந்திருக்கவேண்டும். பெண் தொழிலாளர்கட்குப் பேறு காலத்தில் ஐம்பத்தாறு நாட்கள் முழுச் சம்பளம் இன்சூரன்ஸ் நிதியிலிருந்து வழங்கப்படுகின்றது. தொழிலாளர் இன்சூரன்ஸின் முழுச் செலவையும் அரசாங்கமே ஏற்றுக்கொள்கின்றது. தொழிலாளியோ தொழிலதிபரோ எதுவும் கொடுப்பதில்லை. ஒரு குறிப்பிட்ட அளவுள்ள தொழிற்சாலைகளை மட்டுமே சட்டம் கட்டுப்படுத்துகின்றது. என்றாலும், சிறிய தொழிற்சாலைகளும் இயன்றவரையில் அதைப் பின்பற்ற வேண்டும் என எதிர்பார்க்கப்படுகின்றது.

சங்கமும் நிர்வாகமும் சேர்ந்து தங்குமிடங்கள், மருத்துவ நிலையங்கள், குழந்தை வளர்ப்பு நிலையங்கள் ஆகியவற்றைக் கட்டியுள்ளன. தொழிற்சாலையின் சிற்றுண்டிச்சாலையில், தொழிலுக்கேற்றபடி, குறைந்த செலவில் உணவுப்பொருட்கள் விற்கப்படுகின்றன. இவை தவிர வேறு ஓய்வே கிடையாது.

நோய் தவிர வேறு எக் காரணத்தாலும் தொழிலாளி வேலைக்குச் செல்லாமலிருத்தல் கூடாது. யாரையும் வேலையிலிருந்து தள்ளுவதும் இல்லை. வேலையிலிருந்து தள்ளப்பட்டால் வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படுமெனச் சில வெளிநாட்டுத் தொழிற்சாலைகள் ஆட்களைக் குறைக்க முடியாம லிருக்கின்றன. உழவுத் தொழிலாளிக்கே வேலை குறைவாக இருக்கும்போது வேலையற்றோர் அத் தொழிலுக்குத் திரும்பவும் முடியாது.

கம்யூனிஸப் பொருளாதாரத்தில் உற்பத்திச் செலவு பொருட்படுத்தப்படுவதில்லை. ஆகையால், அத்தகைய கொள்கையைக் கையாள முடிகின்றது. ஏதாவது ஒரு தொழிற்சாலையின் செலவைப்பற்றி அறிய முயன்றேன். அதற்கென ஒரு கணக்கும் கிடைக்கவில்லை. உற்பத்திப் பொருட்கள் மிகக் குறைவு ஆதலால், நிரந்தரப் பொருளாதாரத்தை நிலைநாட்ட, பொருட்களின் தேவையைக் குறைக்காமல், பொருட்களின் விலையை ஏற்றிவிடுகின்றனர். முக்டன் தொழிற்சாலை ஒன்றில் அதன் நிர்வாகி கூறினார்: "தேசத்தின் பொது உற்பத்தி நிலையைப் பொறுத்து, அரசாங்க ஆணைப்படி கூலி நிர்ணயிக்கப்படுகின்றது." அதாவது, பொருட்களைப் பயன்படுத்தும் கட்டுப்பாட்டின்படி கூலி நிர்ணயிக்கப்படுகின்றது என்றாகிறது. முதலாளித்துவப் பொருளாதாரத்தைப் போன்று ஒரு தொழிற்சாலையில் உள்ள நிலைமைக்குத் தக்கபடி கூலி நிர்ணயிக்கப்படுவதில்லை.

நான் பார்த்த ஒவ்வொரு தொழிற்சாலையிலும்,தொழிற்சாலை தங்களது என்ற உணர்ச்சி தொழிலாளர்களிடையே இருப்பதைப் பார்த்தேன். தொழிலாளர், உழவர், பிரபுக்கள், தேசிய முதலாளிகள் ஆகியோரடங்கிய நாட்டில் முதல் வர்க்கத்தினராய்த் தாங்கள் இருப்பதை அவர்கள் உணர்கின்றனர். நாட்டின் ஒவ்வொரு அரசியல் - பொருளாதார நிகழ்ச்சிகளிலும் அவன் முன்னுக்குத் தள்ளப்பட்டு, சீன மக்களைச் சோஷலிசப் பாதையில் நடத்திச் செல்லும் கடமையையும் நினைவூட்டப்படுகிறான். 1952-இல் ஷான்பான்வுபான் இயக்கத்தின்போது நடந்த வர்த்தக நிலையங்கள் விசாரணையில் இவ் வுணர்ச்சி எவ்வாறு வெளிப்படுத்தப்பட்டது என்பதற்கு ஒரு கதை உண்டு. சீனத் தொழிலாளர் சார்பில் பதினேழு வயதுள்ள பயிற்சியாளன், சீன ரூத்பிரஷ் கம்பெனியில், சென்ஸங்சென் என்பாரை விசாரணை செய்தான். அது சீனச் செய்தித்தாள்களில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடப்பட்டிருந்தது :

கேள்வி: ஒரு பயிற்சியாளன் என்ன செய்கின்றான்?

பதில்: ஒரு தொழிலைக் கற்கிறான்.

கேள்வி: அவன் எதற்காக அடிபடுகிறான்?

பதில்: அது எனது தவறு.

கேள்வி: அதற்கு என்ன செய்யவேண்டும்?

பதில்: தொழிலாளர் தலைமையை நான் ஏற்றுக்கொண்டு அவர்களுக்குத் தலை தாழ்த்தி நடக்கவேண்டும்.

கேள்வி: உன்னுடைய மன்னிப்பை ஏன் நீங்கள் அரசாங்கத்திற்கு அனுப்ப, அவர்கள் அதை எங்களுக்கு அனுப்புகின்றனர்?

பதில்: ஏனெனில், நீங்கள்தான் நாட்டில் தலையான வகுப்பினர்.

கேள்வி: ஆம்; அப்படியானால் நீங்கள் எத்தகைய மனிதர்?

பதில்: நான் ஒரு கெட்ட வணிகன்.

கேள்வி: நீர் ஒரு குற்றவாளிதானா?

பதில்: ஆம்.

இவ்வாறாக, திறமையான பிரசாரத்தாலும், ஆயிரமாண்டு வாக்குறுதிகளாலும், மக்கள் உணர்ச்சி தூண்டிவிடப் படுகின்றது. அவ் வாக்குறுதியை மெய்ப்பிக்க, உடைமைகள் வழங்கப்பட்டு, விரும்பப்பட்ட பொருள்களின் உடைமையை எதிர்ப்போர் மீது வெறுப்பும் கிளப்பிவிடப்படுகின்றது. 'மாதிரிகள்' மூலம் நம்பிக்கை வளர்க்கப்படுகின்றது. எப்போதோ செல்லும் பார்வையாளனாகிய நான், சீனத் தொழிலாளியின் இவ் வுணர்ச்சியைக் காண முடிந்தது. கடிய உழைப்புத் திறனுக்கும், பெருஞ் சுமையைத் தூக்கும் ஆற்றலுக்கும் சீனத் தொழிலாளி பெயர் பெற்றவன். ஆனால், இன்று அவன் நம்பிக்கையுடன் உழைக்கின்றான். அவன் இனிமேல் மரக்கட்டையல்லன். தான் செய்யும் வேலையைக் கற்றுக்கொள்ள விரும்புகின்றான்; எழுதப் படிக்க ஆர்வம் கொண்டுள்ளான். ஆர்வத்தால் மட்டும் யந்திரத்தைக் கையாளவோ, புதிய யந்திரம் வாங்கிவிடவோ முடியாது. சீனா தான் பின்பற்றும் முறைகளால் அது நாடும் இலட்சியத்தை அடைய முடியாது என அவன் எண்ணவில்லை.

## 5. பிறநாட்டு உதவி

சீனுவிலுள்ள வெளிநாட்டுத் தொழில் நிறுவனங்கள், மேலும் முதலீடு செய்வதால் அவற்றைப் பெருக்கும் வழிகள், உள்நாட்டில் கிடைக்கும் நுணுக்கத் தொழிலாளர்கள் ஆகியவற்றைக் கொண்டே சீனுவின் இன்றையத் தொழில் முயற்சியைக் கணக்கிட முடியும். நாட்டைத் தொழில் மயமாக்குவதற்கும், சீனுவின் பழஞ் செல்வத்தை வளர்ச்சியடையச் செய்வதற்கும் அங்கு எத்தகைய முயற்சியும் செய்யப்படவில்லை என்பது ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மை. கடற்கரைப் பிரதேசங்களில் இருக்கும் ஒரு சில தொழில் நிலையங்கள் தவிர, சீனுவின் உள்நாட்டுப் பகுதி விவசாயப் பகுதியாகவே இருந்தது. உள்நாட்டுப் பகுதி தாதுப் பொருட்களை ஏற்றுமதி செய்வதற்கென உற்பத்தி செய்கின்றது. ஆனால், தேவைப்படும் உற்பத்திப் பொருட்களுக்காக இறக்குமதியை நம்பியிருக்கின்றது.

அபிவிருத்தி செய்யப்பட்ட ஒரு சில தொழில்களும் துணி சோப்பு சிகரட் போன்ற அவசியமான பொருட்களையும், சுரங்கங்களையும், போக்குவரவு, தண்ணீர் வினியோகம், மின்சாரம் ஆகிய பொதுப்பயன் பொருட்களையுமே உற்பத்தி செய்கின்றன. இத்தகைய நிறுவனங்களிற் பல வெளிநாட்டாரின் உடைமைகள். அவை அவர்களாலேயே நிர்வகிக்கப்பட்டன. சீனுவின் உள்நாட்டு வாணிகத்தையும், தடுப்பாரற்ற சுரண்டலையும் விரும்பியேஅவர்கள் சீனுவிற்கு வந்தனர்.ஏராளமான லாபம் சேர்ந்தது; அந்த லாபம் நாட்டின் வெளியே கொண்டு போகப்பட்டது. ஆனால், சீன மக்களுக்கு விலைகளைப் பற்றியோ, கூலியைப் பற்றியோ, நிதிக் கொள்கையைப் பற்றியோ எதுவும் கூற முடியவில்லை. அதனால், அவர்கள் சுரண்டலைத் தடுக்கவும் முடியவில்லை. வெளி நாட்டார் சீனமக்களை இழிவாகக் கருதினர். வெளிநாட்டு முதலாளிகள், சில ஆண்டுகளிலேயே தங்களது பழைய முதலீட்டை இரண்டு அல்லது மூன்று மடங்காகச் செய்துவிட்டனர் என்று கூறப்படுகின்றது.

இந்நிலையில், மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்வதையே தனது முதற் பணியாக அறிவுள்ள ஓர் அரசாங்கம் கருத வேண்டும். நாட்டின் சுதந்தரத்தையும், சிறப்பையும் பாதுகாப்பதைத் தவிர, தலையாய பணி வேறு எதுவுமில்லை. ஆனால், சீனக் கம்யூனிஸ்டுகள் அதிகாரத்தையும், ஆதிக்கத்தையுமே விரும்புகின்றனர்; மக்களின் நலத்தை யன்று. அமைதியான மக்களுக்கு இழிவு ஏற்படுத்திய வெளிநாட்டார் மீது, மக்களின் துயரத்தை வெறுப்பாக மாற்றுவது எளிது. அந்த ஆத்திரம் ஆக்க வேலைக்கான திறமை, அறிவு, முதல் ஆகியவற்றைக் கொணர்ந்திருக்குமாயின், அது மிக நன்றாக இருந்திருக்கும். ஆனால், துரதிருஷ்டவசமாக நான் சீனாவில் பார்த்தவை அந்த நம்பிக்கையை எனக்கு அளிக்கவில்லை.

தொழில் மயமாக்கும் முயற்சியும், மூலதனக் கருவிகளும், தொழில் திறமையும் இன்றி எத் தொழிலை நடத்த முடியுமோ, அத் தொழில் மட்டுமே செய்யப்படுகின்றது. சீனா, தேவையான திறமையுள்ள தொழிலாளர்களையும் என்ஜினியர்களையும் நல்குமாயின் நம்பிக்கைக்கு இடமுண்டு. ஆனால், இத் துறையிலும் சீனா குறைபாடுடையதே.

தக்க போக்கு வரவு இல்லாமையால் சீனாவின் பொருளாதார வளர்ச்சி கட்டுப்படுத்தப்பட்டது. கடற்கரை யோரத்தில் இரயில் பாதை தெற்கு வடக்காக ஓடிக்கொண் டிருந்தது. உள்நாடு பிற பகுதியிலிருந்து தொடர்பற்றிருக்கின்றது. நதிகளே கிழக்கு மேற்குப் போக்கு வரவிற்கு உதவியாக இருக்கின்றன. பன்னிரண்டாயிரம் மைல் நீளம் இரயில் பாதை இருக்கின்றது. முன்பு அது பிரிட்டன், ஜப்பான், பிரான்ஸ், சீனா ஆகிய நான்கு அரசுகளாலும் தேசம் முழுவதும் நடத்தப்பட்டது. சீனாவின் இரயில் போக்கு வரவு திறம்பட நடத்தப்படுகின்றது என்பது உண்மை. ஒன்றுபடுத்தப்பட்ட திட்டத்தின்படி தெற்கிலிருந்து வடக்குவரை தொடர்ந்த போக்கு வரவு ஏற்படுத்தப்பட்டுள்ளது. தண்ணீர் வினியோகம், மின்சார வினியோகம் போன்ற பொதுப் பயன் துறைகள் சீனர்களால் வெளிநாட்டாரிடமிருந்து எடுக்கப்பட்டு, சிலர் எதிர்பார்த்ததற்கு மாறாகச், சிறந்த முறையில் நடத்தப்பட்டு வருகின்றன. தகுதியான அதிகாரிகள் இல்லாமை

யால், தொழில் நிலையங்கள் நன்கு அமைக்கப்படவில்லை; தொழில் நுணுக்கமும், நிர்வாகத் திறமையும் இல்லை. பல்கலைக் கழகங்களும், தொழிற்பள்ளிகளும் இந்தத் தேவையை அண்மையில் நிறைவேற்றும் நிலையில் இல்லை.

சீனாவின் புகழ்பெற்ற எல்லாப் பல்கலைக் கழகங்களையும் நான் பார்வையிட்டேன். பல குறைகளால் அவை முன்னேற முடியவில்லை. செயல் முறைப் பயிற்சிக்கு வேண்டிய கருவிகள் இல்லை. ஆங்கில நூல்கள் அகற்றப்பட்டதனால் கல்விக்கு வேண்டிய சீன நூல்கள் இல்லை. நாட்டில் தேவை அதிகமாக இருப்பதால், மாணவர்கள் படிப்பு முடிந்ததும் வேலைகளில் புகுத்தப்படுகின்றனர். பல்கலைக் கழகங்கள் பிரச்சினைகளை ஆராய்வதிலோ, சில தொழில்களின் பாகங்களை உற்பத்தி செய்வதிலோ ஈடுபட்டிருக்கின்றன. அவற்றால் பொதுவான தொழிற் பயிற்சி அளிக்க முடியவில்லை. இப்பொழுது தேவைப்படும் தொழில் தவிர, மற்றத் தொழில்களில் பயிற்சி யளிக்க முடியவில்லை.

சீனா தொழில் துறை உதவி பெற்றிருப்பதாகவும், ஆயிரமாயிரம் ருஷ்யர்கள் சீனாவிலிருந்து, சீனாவின் சீரழிந்த பொருளாதாரத்தைச் செப்பனிட உதவி செய்வதாகவும் கூறப்படுகின்றன. எத்தனை ருஷ்யர்கள் இருக்கின்றனர் என்பது தெரியாது. ஆனால், சீனா விரும்பும் எல்லா உதவிகளையும் செய்வதற்கு ருஷ்யத் தொழில் வல்லுநர்கள் மிகவும் குறைவு என்று தெரிகின்றது. பீகிங், முக்டன், தியன்ஸ்டீன் ஆகிய இடங்களில் நான் தங்கியிருந்த விடுதியில் ருஷ்யர்களும் இருப்பதைப் பார்த்தேன். அவர்கள் காலையில் விடுதியை விட்டு வெளியே சென்று விடுகின்றனர்; தனி அறைகளில் உணவருந்துகின்றனர்; தனியாகவே இருந்தனர்; அவர்களுக்காக ஒதுக்கப்பட்டிருந்த கார்களிலேயே சென்றனர். அடிக்கடி அந்தக் கார்கள் கருப்புத்திரை போட்டு மறைக்கப்பட்ட ஜன்னல்களுடன் நகரத்தில் சென்றன. 'அவர்கள் சீன அரசாங்கத்தின் தொழில் நுணுக்க ஆலோசகர்கள்; அவர்கள் ராணுவ என்ஜினியர்களாக அமைக்கப்பட்டுள்ளனர்; குறிப்பிட்ட தொழிற்சாலைகளை மேற்பார்வை செய்ய நியமிக்கப்பட்ட குழுவில் அங்கம் வகித்தனர்' என்றெல்லாம் கூறப்பட்டது. அவர்கள் மிகுந்த கட்டுப்

பாட்டுடன் இருந்தார்கள். உண்டியும் உறையுளும் நீங்கலாகச் சிறிது சம்பளமும் பெற்றுவந்தனர். நான் இருமுறை சென்ற போதும் ஒரு தொழிற்சாலையிலேனும் அவர்களைப் பார்க்க வில்லை. ஆனால், ஹுவாய் நதித் திட்டக் குழுவின் தலைமை அலுவலகத்தில், பெங்புவில், ஒரு சித்திரம் கண்டேன். அதில் ருஷ்ய நீர்த்தேக்க வல்லுநர் புக்காப், சீனச் சிப்பந்திகளுக்குத் திட்டத்தை விளக்குவதாக வரையப்பட்டிருந்தது.

நான் பார்த்த எல்லாத் தொழிற்சாலைகளிலும் வேறு யாருடைய உதவியும் மேற்பார்வையு மின்றிச், சீனர்களே நிர்வகித்து வந்தனர். சீனர்களால் தீர்க்க முடியாத சிக்கல்களைத் தீர்க்கவே ருஷ்யர்கள் வந்தார்கள். அத்தகைய சிக்கல்களே அக் குழுவிற்கு அனுப்பப்படும்.

பழைய சீனாவிற்கு வேறு சில வருமானம் இருந்தது. புதிய சீனாவும் விரும்பியிருந்தால் அதைப் பெற்றிருக்கலாம். ஜப்பான், பிரிட்டன், அமெரிக்கா இன்னும் பல நாடுகள் சீனாவில் தொழிலில் பெருந்தொகைகளை முதலீடு செய்திருந்தன. ஜப்பானிய முதலீடு ஜப்பானைத் தோற்கடித்த பின்னர் எடுத்துக்கொள்ளப் பட்டது. சீனச் சொத்துக்கள் அமெரிக்காவில் முடங்கிக் கிடந்தன. அதற்குப் பதிலாக அமெரிக்க முதலீடுகள் கட்டுப்பாட்டிற்குள் வைக்கப்பட்டன. ஆனால், பிரிட்டன் மட்டும் இருக்கின்றது. 1930-இல் கணக்கெடுத்தபடி பிரிட்டிஷ் முதலீடு,வாணிபத்திலும், தொழிலிலும் சேர்ந்து 20 கோடி பவுன்களாகும். போருக்கு முன் கூடுதலாகவும் முதலீடு படுத்தப்பட்டது. இன்றைய மதிப்பீட்டின்படி முதலீடு 35 கோடிப் பவுனுக்கும் மேல் இருக்கவேண்டும்.

அப் பிரிட்டிஷ் நிலையங்கள் மீண்டும் சீனாவுடன் வாணிபம் செய்ய விரும்புகின்றன. அவற்றை நிர்வகித்தது பழைய சீன ஆட்களே. அவர்கள் இருபது ஆண்டுகளுக்கு மேலாகச் சீனாவில் வாழ்ந்து, அதை நன்கு தெரிந்து கொண்டவர்கள். அவர்களில் பலருக்குச் சீன மக்கள் மீது வெறுப்பிருக்கலாம். ஆனால், அவர்கள் வணிகர்; இலாபம் தேடும் வாய்ப்பை எதிர் நோக்குபவர்; பிரிட்டன் சீனாவோடு நட்புடன் நடக்குமாறு செய்யும் திறனுடையவர்.

ஆகவே, சீனு வருங்காலத்தில் அவர்களுடன் வாணிபத் தொடர்பு வைத்துக்கொள்ளும் என்ற நம்பிக்கையுடன் பிரிட்டிஷார் அங்கேயே இருந்து விட்டனர். முக்கியமாகப் பயன் படும் பொருட்கள், யந்திரங்கள், தொழில் நுணுக்கங்கள், மூல தனம் ஆகியவை சீனுவிற்குத் தேவை என்பதைப் பிரிட்டிஷார் தெரிந்துள்ளனர். அவர்களது முதலீடுகளைச் சீனுவில் இருக்க விட்டு, நேர்மையான இலாபமும் ஈட்ட அனுமதிக்கப்பட்டால், அவற்றை வழங்கப் பிரிட்டிஷார் இசைந்துள்ளார்கள். ஆகவே, அவர்கள் நம்பிக்கையுடன் காத்திருந்தனர்.

ஒரு வேளை ஆங்கிலேயரது நம்பிக்கை பயனுடையதாக இருக்கலாம். சீனுவைப் பற்றிச் சிறிது தெரிந்தவர்களும்கூட சீனுவின் கஷ்டங்களை அறிந்திருக்கலாம். அவற்றை உணர்ந்தே, புதிய அரசாங்கம் சீன சமுதாயத்திடையே முதலாளிகளும் தேவை என்பதைத் தெரிந்துள்ளது. மாசேதுங் எழுதினர்: "தொழிலை வளர்க்க மகத்தான முதல் தேவை. அது எங்கிருந்து கிடைக்கும்? அது இரு துறைகளிலிருந்து கிடைக்கும்: சீன மக்க ளால் சேர்த்து வைக்கப்பட்ட முதல் ; வெளிநாடுகளிலிருந்து கடன் வாங்குதல். சீனுவின் சட்டங்களுக்குப் பணியும் வெளி நாட்டு மூலதனங்கள், நமக்கு நன்மை தருவனவாக இருந்தால் நாம் வரவேற்கின்றோம்." 'மக்களின் ஜனநாயகச் சர்வாதி கார'த்தில் இதைத் திரும்பவும் குறிப்பிடுகின்றார்:"நாம் வாணிபத் தொடர்பு கொள்ள விரும்புகின்றோம்; அதற்காக யாரையும் எதிர்ப்பதில்லை." 1951-இல் எனது கேள்விக்குப் பதிலளிக்கும் போது, திரு. சூஎன்லாயும் , "நட்புடைய நாடுகளிடமிருந்து கிடைக்கும் எல்லா உதவிகளையும் நாம் வரவேற்கின்றோம்" என்று கூறினர்.

தங்கள் வாணிபத்தைத் தொடர்ந்து நடத்தும் பொருட்டுப் பிரிட்டிஷ் தொழிலதிபர்கள் அங்கேயே நிலைத்து விட்டனர். சீனு தனது முன்னுள் வரலாற்றை மறந்து விடவில்லை. ஓர் உயர்ந்த இனம் புரிந்த மலையத்தனை கொடுமைகளை யாரும் எளிதில் மறந்துவிட முடியாது. ஒரு பலம் பொருந்திய வல் லரசு உடைந்த இனத்தை ஆட்கொண்டதை மறக்க முடியாது. சீன மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் தொழில் உதவியை யாரிடமிருந்தும் பெற மக்கள் விரும்புகின்றனர்.

தொழில் துறையில் அபிவிருத்தி மிக்கவுள்ள மேற்கு ஐரோப்பாவும், அமெரிக்காவுமே பொதுவுடைமை நாடுகளைவிட அவர்களுக்குப் பெருவாரியாக உதவி அளிக்கமுடியும். அரசாங்கக் கொள்கைகளில் தலையிடாதவாறு முயற்சிகள் எடுக்கலாம். தலையிடும் என்ற காரணத்தால் அத்தகைய உதவிகள் மறுக்கப்படுவது, தனது அரசாங்கத்தின் பலமின்மையை - திறமையில் நம்பிக்கையின்மையை - ஒப்புக்கொள்வது போல் ஆகும்.

பிரிட்டிஷாரைப் பற்றிச் சீனு எதுவும் தீர்மானிக்கமுடியாத நிலையில் இருக்கின்றது. மேல்நாட்டு வாணிபப் பொருட்களைச் சீனர்கள் வரவேற்கின்றனர். ஆனுல்,மேல்நாட்டாரது முன்னைய ஆதிக்கத்தையும், சுரண்டலையும் அவர்கள் மறந்துவிட வில்லை. ஆகவே, வெளிநாட்டாரை வருக என இனிதாக அழைத்தாலும், அவர்கள் உள்ளத்தில் குமுறும் பழிவாங்கும் எண்ணம், வெளிநாட்டாரைச் சீனுவிலிருந்து விரட்டுகின்றது. சீனுவிலிருக்கும் பிரிட்டிஷ் தொழிலதிபர்களை மீட்டுக்கொள்ள அனுமதி கேட்டுப் பிரிட்டிஷார் ஒரு கடிதம் அனுப்பினர். மக்கள் வங்கி அதிகாரியான நான் ஹன்சென்னிடம் வெளிநாட்டாருடைய மூலதனத்தின் நிலையைப் பற்றி ஒரு கேள்வி விடுத்தேன். அவர் கூறினுர்: "இப்பொழுது இருக்கின்ற வெளிநாட்டுத் தொழிலதிபர்களும், வணிகர்களும் இந்நாட்டில் தொடர்ந்து இருக்கலாம். அவர்கள் சட்ட வரம்பிற் குட்பட்டு நிற்பார்களே யானுல், இரு நாட்டினர்க்கும் நலமேற்படும் வகையில், சமத்துவத்துடன், வெளிநாட்டு மூலதனத்தை வரவேற்கின்ரோம்." இதே பதில் தான் வெளிநாட்டு உதவி யமைச்சரால், பிரிட்டிஷாருக்கும் தரப் பட்டது. இந்த வார்த்தைகளில் உண்மை இல்லை. ஏனெனில், வெளிநாட்டார் சட்ட வரம்பிற் குட்பட்டுப் பணியாற்றினுலும் படிப்படியாக அவர்கள் வெளியேற்றப்படுகின்றனர்.

அவர்களை வெளியேற்றும் முறை மிகக் கொடுமையானது. முன்பு யாரை இன்னலுக் குட்படுத்தி லாபம் ஈட்டினுர்களோ, அவர்களாலேயே இன்று பல இன்னலுக்காளாயினர். சீனுவைச் சுரண்டி வந்த வெளிநாட்டார் இன்று தங்கள் உடைமைகளை விட்டுச்செல்ல முடியாது தவிக்கின்றனர். முன் செய்த வினைக்கு இன்று பயனை அனுபவிப்பதாகச் சீனு கருதுகின்றது.

இன்று பிரிட்டிஷார் உட்படப் பல வெளிநாட்டினர் தங்கள் சொத்துக்களை விட்டுவிட்டுச் செல்ல விரும்புகின்றனர். பாவம், அவர்களால் முடியவில்லை! உலகப் புகழ்பெற்ற 'கத்தே ஓட்டல்' உடைமையாளர்கள் தங்கள் சொத்தைச் சீனர்களிடம் ஒப் படைத்து விட்டுச்செல்ல விரும்பினர் என்பது எனக்குத் தெரியும். அதன் கடன்களைத் தீர்க்கவும், அரசாங்கத்துடனுள்ள வரவு செலவுகளைச் சரி செய்யவும் அதன் நிர்வாகிக்கு இரண்டு ஆண்டுகள் பிடித்தன. அதன் பின்னரே விடுவிக்கப்பெற்று வெளியேற அனுமதி பெற்றார். பேர் பெற்ற சர்வதேசப் புகை யிலைக் கம்பெனி நிர்வாகிக்கு அத் தொழிற்சாலையை ஒப்புவிக்க ஓர் ஆண்டு ஆயிற்று. இன்னும் வெளியேறும் அனுமதி அவருக்குக் கிட்டவில்லை. வரிகளும், தொழிலாளர்களைத் தள்ள முடியாதாகையால் அவர்கள் கூலியும் கொடுக்கவேண்டியிருக் கின்றது; அதனால் கடன் ஏறிக்கொண்டே போகின்றது. அத் துடன், கடன்களைத் தீர்க்க வேண்டிய பொறுப்பும், சிப்பந்தி களின் நேர்மையற்ற செய்கையால் ஏற்பட்ட பொறுப்பும் நிர் வாகியின் தலைமீதே சுமத்தப்படுகின்றது. அதனால் அவரது நிலை அபாயகரமானது.

ஷாங்காய் சென்றிருந்தபோது, பல வெளிநாட்டுத் தொழி லதிபர்களையும், வாணிக வல்லுநர்களையும் சந்தித்தேன். அவர்கள் சீனாவின் பழைய கையாட்கள். புரட்சிக்குப் பின்னர் ஷாங்காயை விட்டு வெளிச்செல்ல முடியாது இருந்தனர். ஆகவே, அவர் களுக்குப் புதிய சீனாவைப் பற்றி ஒன்றும் தெரியாது. இன்னும் உள்நாட்டு மக்கள்மீது முன்புள்ள இழிவு மனப்பான்மையையே கொண்டுள்ளனர். அவர்கள் தனித்து வாழ்தலால் என்னை மிக அன்புடனும் ஆர்வத்துடனும் வரவேற்றனர். பலவற்றிற்கு அவர்கள் இந்தியத் தூதராலயத்தின் நற்பணியையே நம்பி யிருக்கின்றனர். அதனால் என்னை அவர்கள் வரவேற்கவில்லை. 'நான் ஒரு பத்திரிகையாளன்; அவர்கள் குறை கேட்பேன்; பொய்யின்றி மெய் மொழிவேன்' என்றதனால்தான் வரவேற்க வில்லை போலும்!

நான் தனியாக எவ்விதத் தடையுமின்றி அவர்கள் அலு வலகம் சென்றேன். நான் துணிவுடன் சென்றது கண்டு ஒரு தொழிலதிபர் வியப்படைந்தார். என்னைப் பாதுகாக்க இருக்கும்

சீனர்கள் நான் சுற்றுவதை விரும்பவில்லை யென்பதை நான் அறிந்திருந்தேன். நான் வெளியேயிருந்து திரும்பும் ஒவ்வொரு முறையும், 'நான் எங்கே சென்றேன்?' என்று என்னைக் கேட்டார்கள். ஆனால், நான் பல வணிகர்களைச் சந்தித்த வண்ணமிருந்தேன். கடைசியாக இந்தியத் தூதராலயத்தார் என் போக்கு அபாயகரமான தென்றும், அவர்களுக்கு அதனால் அவமானம் என்றும் கூறினார்கள்.

ஷாங்காயில் ஒரு வாணிப நிலையத்திற்கு நான் சென்று கொண் டிருந்தபோது, ஒரு வெளிநாட்டு முதலாளி யடைந்த கதியைப் பார்த்தேன். நிர்வாகியின் அறைக் கதவில் எழுதப் பட்டிருந்த படம் அது. ஊழல் மலிந்த - தடியான - ஒரு சுரண் டல் முதலாளி, வெற்றி பெற்ற தொழிலாளியின் துப்பாக்கி முனையால் குத்தப்பட்டிருந்தார். இதே படத்தை அந் நிர்வாகி அறையினுள் நுழையும்போதெல்லாம் பார்த்தார்; அப் படத்தை அகற்ற முடியாதவராகவும் இருந்தார்.

'இருநாட்டினருக்கும் பயன் தருவதாகவும், சமத்துவமுடைய தாகவும், சட்ட வரம்பிற் குட்பட்டும் தொழில் நடத்துவதானல் வெளிநாட்டார் தொடர்ந்து இருக்கலாம்' எனக் கூறப்பட்டதில் பொருளில்லை என்பதை ஷாங்காயில் பார்த்தேன். சீனர்கள் இழந்த இரத்தத்தைத் திரும்பப் பெற்றுவிட்டு, மீதி உடலை எறிந்து விடுவது எனத் துணிந்திருந்தனர். எப்படி அவர்கள இச் செயலைச் செய்தார்கள்? அது ஒரு வியப்பான கதை. ஏனெனில், அவர்களை விடுவிக்க வேறு ஒரு வழியுமில்லை.

சீனவில் சுமார் எழுநூறு ஆங்கிலேயர் இருந்தனர். பிரிட்டிஷ் கடிதத்தில், தங்களால் இனிமேல் தங்கள் வாணிபத்தை நடத்தவோ, தொழிலை நிலைநிறுத்தவோ முடியாது எனக் குறிப்பிட்டிருந்தனர். உலக நிலை, கொரியப் போர், சீன அரசாங்கத்தின் கொள்கை யாவும் அவர்கள் போகவேண்டும் என அறிவுறுத்தின. பட்சபாதமான வரி, உற்பத்திச் செலவைக் குறைக்க முடியாமை, தனிப்பட்டோர் வாணிபத்தை அரசாங்க உடைமையாக்கல், விலையைக் கட்டுப்படுத்துதல் ஆகியவையே அயல் நாட்டாரைப் பெருந் தொல்லைப் படுத்தின

என்று அவர்களில் பலர் கூறினர். அவர்களிடம் தேவைக்கேற்பக் கொடுக்க நிதியும் இல்லை. கடனெல்லாம் தனிப்பட்டவர்கள் பேரிலேயே இருந்தன. இருக்கும் பொருளை அடமானமாக வைத்து வங்கிகளில் கடன் வாங்கவும் முடியவில்லை. ஆகவே, கடனுக்காகச் சிறை செல்ல வேண்டியிருந்தது. தங்கள் நாட்டில் பவுனுக்குப் பத்தொன்பது ஷில்லிங் கொடுக்க வேண்டியிருந்தபோது கலங்காதவர்கள், சீனாவில் 30 சத வீதம் வருமான வரி கொடுப்பதற்குத் தயங்கினார்கள். ஒருவர் கூறினார்: "எங்களுக்கு லாபம் உண்டோ இல்லையோ, நாங்கள் வரிச் செலுத்த வேண்டும். பொதுவாக லாபமே இல்லை."

சீனாவிலுள்ள அயல் நாட்டு நிறுவனங்கள் தங்கள் சொத்துக்களையும், இருப்புப் பொருட்களையும், புது மதிப்பீடு செய்ய அனுமதிக்கப்படுவதில்லை. ஆகவே, 1949 ஆகஸ்டு 31-ஆம் தேதியிலிருந்த விலையின் மீதே தேய்மானக் குறைவு கழிக்கப்படுகின்றது. ஆனால், ஹாங்காங்கில் டாலர் வீதம் 9.7 மடங்கு உயர்ந்துள்ளது. வெளிநாட்டு நிறுவனங்கள் நிறைய லாபம் தேடியிருக்க வேண்டும் என ஊகித்து, அதிகமான வரி தண்டப்படுகின்றது. பியானோ இறக்குமதி செய்யும் ஒரு நிலையம், அந்த ஆண்டில் ஒரு பியானோ கூட விற்காமல், வரி செலுத்த வேண்டியிருந்தது. ஆனால், சீன நிறுவனங்களோ, தங்கள் சொத்துக்களைப் புதிய நாணய மாற்றுக்குத் தக்கபடி, மதிப்பிட அனுமதிக்கப்பட்டன. வரிகளும் உடனேயே தண்டப்படும். இல்லையெனில், தவறும் நாள் ஒன்றுக்கு 1 சத வீதம் கூடுதலாகக் கட்டவேண்டும்.

தாதுப் பொருட்கள் இல்லாமையால், பல தொழிற்சாலைகள் ஆண்டில் எல்லா நாட்களும் வேலை செய்யவில்லை. எனினும், தொழிலாளர்களுக்கு ஆண்டு முழுமையும் கூலி கொடுக்க வேண்டும். தவிரவும், வேலையில்லை யென்பதற்காக ஒரு தொழிலாளியைக் கூடத் தள்ள முடியாது. தொழிற் சங்க அனுமதியின் பேரில், தொழிலாளிக்கு மூன்று மாதச் சம்பளம் கொடுத்து, அவனை வேலையினின்றும் தள்ளலாம் என்பது கொள்கை. ஆனால், செயல் முறையில் அனுமதி பெறுதல் அரிது. அப்படியே ஒப்புதல் பெற்றாலும், மூன்று மாதச் சம்பளத்துடன்

அவன் வேலே செய்த ஒவ்வொரு ஆண்டிற்கும் ஒவ்வொரு மாதச் சம்பள வீதமும் கொடுக்கவேண்டும். ஒரு நிறுவனம் கலேந்து போவது வரையிலும் ஒவ்வொரு தொழிலாளியும் அங்கேயே வைத்திருக்கப்பட வேண்டு மென்பதே நோக்கம். அதற்கும் மேலாக, தொழிற்சாலேகளிலும், வேளாண்மையிலும் வேலே யில்லாத் திண்டாட்டம் வளர்ந்து விடக்கூடாது என்ற எண்ண மும் உண்டு. கடைசியாக, ஒரு லாபமும் காட்ட முடியாதாகை யால் தனிப்பட்ட தொழிலதிபர்கள் பின் வாங்கி விடுகின்றனர். மேலும், தொழில் முன்னேற்றத்திற்கு வழியில்லே. தாதுப் பொருள்களுக்கும், வரிகளுக்கும், குறையாத கூலித் தொகைக் கும் உடனடியாகப் பணம் கொடுக்க வேண்டும். அதே சமயத் தில் உற்பத்திப் பொருட்கள் சேர்ந்து வருமானத்தைப் பாதிக் கின்றது. துணி உற்பத்தி போன்ற தொழில்களில், அவர் களுக்குச் சமயம் கொடுத்தால், அல்லது வங்கிகளில் கடன் கொடுத்தால், அவர்கள் கடன்களேத் தீர்க்க முடியும். மக்கள் வங்கி கடன் கொடுக்க மறுத்துவிட்டது. ஆகவே, அயல் நாட்டு நிறுவனங்கள், தங்கள் நாட்டிலிருந்து புதிய மூலதனம் கொண்டுவருமாறு வற்புறுத்தப்படுகின்றன ; இல்லே என்ருல் அதன் நிர்வாகிகள் சிறைக்கு அனுப்பப்படுவர். ஏனெனில், சீனச் சட்டப்படி நிறுவனத்தின் கடன் தனிப்பட்டவர்களேயே சாரும்.

ஜார்டின், மாதீசன் கம்பெனி பழைய சீனுவில் ஒரு வாணிப அரசு எனலாம். அவர்கள் கப்பல் போக்கு வரத்து, பொருட்கள் இறக்கும் நிலேயங்கள், துணி, பொறிகள் முதலானவற்றில் வாணிபம் நடத்தி வந்தனர். அவர்களது சாராயத் தொழில் சீன அரசாங்கத்துடனுள்ள ஒப்பந்தப்படி நடைபெறுகின்றது. அதனுடைய முழு உற்பத்தியும் அரசாங்கத்திற்குச் சென்று விடும். 1952 ஜனவரியில் சிக்கனம் கருதி, அரசாங்கம் சாராயம் அருந்துதலேக் குறைக்க, அதன் விலேயைக் குறைத்தது. அதன் பயனுக அக் கம்பெனிக்கு மார்ச்சு மாதம் ஒன்றில் மட்டும் முப்பத்திரண்டாயிரம் பீப்பாய் சாராயம் இருப்பில் இருந்து விட்டது. அதற்குரிய விலேயும் முடங்கி விட்டது. அதன் நிர்வாகி திரு. கார்டன் என்பவரால் கம்பெனியின் கடனேத் தீர்க்க முடியவில்லே ; தொழிலாளர் சம்பளமும் கொடுக்க முடியவில்லே.

பல இலட்சம் பவுன் விலை பெறும் சொத்துக்களின் பேரிலும், இருப்புப் பொருளின் பேரிலும் கடன் கேட்டார். ஆனால், வங்கி கொடுக்க மறுத்து விட்டது. லண்டனிலிருந்து பணம் தருவிக்க வேண்டும்; அல்லது சிறை செல்ல வேண்டும். கார்டன் லண்டனிலிருந்து பணம் பெற மறுத்தார். ஏனெனில், நிலைமை திருந்தியதும், அப் பணத்தை லண்டனுக்குத் திருப்பிக் கொடுக்க சீனா ஒருபோதும் ஒப்புக் கொள்ளாது என அவர் வாதாடினார்.

சீனாவிலுள்ள வெளிநாட்டு வணிகர்களுடன் இருக்கும் தொழில் - வாணிகக் கூட்டுறவை அறுத்து அவரைக் கைது செய்ய வேண்டும்; அல்லது சட்டத்தை ரத்துச் செய்யவேண்டும் என்ற சிக்கலான நிலை சீனாவிற்கு ஏற்பட்டது. இருபது நாட்கள் கார்டனுடன் வாதாடினர். "ஜார்டின் போன்ற நிறுவனத்தில் எப்படிப் பணம் இல்லாதிருக்கும்? இரண்டாயிரம் பவுன் தானே. கொடுத்துவிட்டுச் சிறை செல்வதைத் தவிர்ப்பீராக." இது போன்று பல நாட்கள் அவரை வற்புறுத்தினர். ஆனால், பயனில்லை. கடைசியாக, சீனர்களுக்கு அவரைக் கைது செய்ய வேண்டி வந்தது. இதுதான் ஆங்கிலேயருக்குக் கடைசி அடி! 35 கோடி பவுன்களுக்கு மேலாக விலை பெறும் முதலீட்டை விட்டு விட்டுச் செல்ல அவர்கள் தீர்மானித்தனர்.

இது போன்று பல நிகழ்ச்சிகள். ஏனெனில், கடந்த இரண்டாண்டுகளாக, பிரிட்டிஷார் தங்களது பழைய முதலீடுகளைக் காப்பாற்றப் புதிய மூலதனம் தருவிக்குமாறு வற்புறுத்தப்பட்டனர். 1951-இல் ஷாங்காய் பிரிட்டிஷ் நிறுவனங்கள் ஆறு கோடிப் பவுன் கொண்டுவந்தன எனக் கணக்கிடப்பட்டுள்ளது. 1952-இல் அங்ஙனம் கொண்டு வருதல் மாதத்திற்கு இருபத்தையாயிரம் பவுனாகக் குறைக்கப்பட்டது. ஏனெனில்,உற்பத்தியும் தேவையும் குறைந்துவிட்டன. வெளிநாட்டு நிறுவனங்களை வெளியேற்றுவதும், அவர்களது பொருள்களைப் பணம் கொடுக்காமல் சீனாவில் பயன்படுத்துவதும் சீனாவின் கொள்கை என்பது, கார்டனைக் கைது செய்ததிலிருந்து தெளிவாயிற்று.

சீனாவிலுள்ள பிரிட்டிஷாரின் பொறுமை போற்றத் தக்கது. அழகாக உடை உடுத்தி அலுவலகம் சென்றனர்; வாரந்தோறும்

பந்தாட்டம் ஆடினர்; பொறுமையாகக் காத்திருந்தனர். சீனு விற்கு அவர்களது தொண்டு முன்னிலும் இப்பொழுது தேவை யென அவர்கள் நம்பினர்; மாறுபட்ட சூழ்நிலைக்கொப்ப நடந்து கொள்ளச் சித்தமாயிருந்தனர்.

ஹாங்காங்கில் ஜான்கேஸ்விக் என்பாரை நான் சந்தித் தேன். உயரமும், அழகும் உள்ள ஆங்கிலேயர் அவர். சீனப் பொருளாதாரத்தை நன்கு அறிந்திருந்தார். ஆனால், எளிமையாக நடந்து கொண்டார். நெடுநாட்களாகவே அவர் பிரிட்டன் சீனுவுடன் வாணிபம் நடத்த முடியும் எனக் கருதி வந்தார். அவரது நண்பர்களில் பலர் அவரை விளை யாட்டாகக் 'கம்யூனிஸ்ட்' என்றழைத்தனர். சீனு போன்ற ஒரு நாட்டில், நிர்வாகம் அனுபவமற்றதாக இருக்கும் போது, அரசாங்க அதிகாரம் எங்ஙனம் வேலை செய்கின்றது என்பதைத் தியன்ஸ்டீனிலிருந்து அவர் தந்திரமாகத் தப்பிச் சென்ற கதை தெளிவுபடுத்துகின்றது. கேஸ்விக் தியன்ஸ்டீனில் இருந்தார்; இங்கிலாந்து செல்ல விரும்பினர். பல நாட்களுக் குப் பின் அவருக்கு வெளியேறும் அனுமதி கிட்டியது. கேஸ்விக் சீனுவை விட்டுச் சென்றுல், சீனுவில் அதிக மூலதனம் கொண்டு வருமாறு ஆங்கில நிறுவனங்களை வற்புறுத்தும் ஒருவர் இல்லை யென்பதை உள்நாட்டுத் துறையிலுள்ள ஒருவர் அறிந்தார். கேஸ்விக்கும் கப்பலில் ஏறிவிட்டார். உடனே, ஒரு போலீஸ் அதிகாரி அவரிடம் சென்று, கப்பலினின்றும் இறங்கி வீடு செல்லுமாறு கூறினர். அதற்குரிய காரணங்களும் விளக்கப்பட வில்லை.

மறுத்தால், அவர் பலாத்காரமாகக் கப்பலினின்றும் இறக்கப்படுவார் என்பதைக் கேஸ்விக் உணர்ந்தார். ஆகவே, அவர் வீடு சென்று, போலீஸ் அதிகாரியை எதிர்நோக்கிக் காத்திருந்தார். இரண்டு மூன்று நாள் கழித்துத் தனது சீன வேலையாளை அனுப்பித் தனக்கு நியாயமாக வரக்கூடிய அந்த வெளியேறும் அனுமதிச் சீட்டை வாங்கி வருமாறு கூறினர். போலீஸ் அதிகாரிக்கு அச் சீட்டைப் பறித்துக் கொள்ளுமாறு கட்டளையில்லை. ஆகவே, அவர் திருப்பிக் கொடுத்துவிட்டார். இரு வாரங்கள் காத்திருந்தார். போலீசாரிடமிருந்து அழைப்பே வரவில்லை.

மீண்டும் ஒரு கப்பல் தியன்ஸ்டீனிலிருந்து ஹாங்காங் செல்ல இருந்தது. அது புறப்பட ஒரு மணி நேரத்திற்கு முன் கேஸ்விக் போலீஸ் அதிகாரிக்கு ஒரு கடிதம் அனுப்பினார். தான் போலீஸ் அழைப்பிற்காக இரு வாரங்கள் காத்திருந்ததாகவும். யாதொன்றும் வராததால் தான் புறப்பட்டுச் செல்வதாகவும் அதில் குறிப்பிட்டிருந்தார். தான் இனிமேல் காத்திருப்பதில்லை; தன்னிடம் வெளியேறும் அனுமதிச் சீட்டும் இருக்கின்றது எனக் கூறியிருந்தார். போலீஸ் அதிகாரிக்கு என்ன செய்வ தென்று தெரியவில்லை. பீகிங்கிலிருந்து தகவல் தருவிப் பதற்கும் சமயம் இல்லை. சரியான தருணத்தில் பொருத்த மானதைச் செய்யும் ஆற்றல் இருந்தமையால் கேஸ்விக் சீனாவிலிருந்து தப்பிச் சென்றார்.

அமெரிக்காவும் பிரிட்டனும் முதல் உலகப் போருக்குப்பின், போல்ஷிவிக்கருக்கு எதிராக வெள்ளை ருஷ்யருக்கு உதவி செய்தன. என்றாலும், சோவியத் ருஷ்யா தனது நாட்டின் தொழில் வளர, அவற்றுடன் தொடர்புகொண் டிருந்தது. சீனாவும் ஏன் அம் மாதிரி செய்யக்கூடாது? சீனாவிற்கு அம் முறையில் கெட்ட அனுபவமுண்டா? அல்லது சீனாவின் எதிர்காலத்தைத் தடுத்துச், சீன மக்களின் நல்வாழ்விற்கு உலைவைக்கும் சக்தி கள் ஏதேனும் உளதா?

# 6. வளரும் தொழில்

"புதிய சீனுவைத் தொழில் மயமாக்குவதே எங்கள் குறிக்கோள். அந்தக் குறிக்கோளை அடையவே நாங்கள் முயற்சிக்கின்ருேம்" என்ருர் நிதி - பொருளாதாரக் குழுவின் தலைவரான திரு. சென்யுன்.

"சீனப் பொருளாதாரத்தை முறையாக முன்னேற்றுவதற்கு முன் அதனைச் செப்பம் செய்ய மூன்று முதல் ஐந்தாண்டுகள் பிடிக்கும். மூலதனம், உள்நாட்டுத் தேவை, தொழில் முறை போன்ற தொழிலுக்கு அவசியமான நிலைமைகளைத் தோற்றுவிப்பதில் நாம் முழுக் கவனம் செலுத்த வேண்டும்" என்ருர் சூயென்லாய்.

இவை 1950 செப்டம்பரில் மக்கள் அரசியல் ஆலோசனைக் குழுவின் தேசியக் கூட்டத்தில் தரப்பட்ட அறிக்கைகள். சீனத் தொழிற்சாலைகளை 1951-இலும் 1952-இலும் பார்வையிட்டேன். ஆகவே, அம் முயற்சிகள் யாவை, எந்த அளவிற்கு வெளியிடப்பட்ட வாக்குறுதிகள் நிறைவேற்றப்பட்டுள்ளன என்பதை நான் நேரில் பார்த்தேன். சீன மக்களது வறுமையை ஒழிக்க வேண்டுமானுல், அது தொழில் மயமாக வேண்டும். ஆனுல், அதற்குப் பல தொல்லைகள். அவற்றில் பல அபிவிருத்தி யடையாத நாடுகளிலும் காணப்படுபவை. ஏனையவை, சீனுவிலேயே தோற்றுவிக்கப்பட்டவை; அல்லது உலகக் குழப்பத்தால் ஏற்பட்டவை.

சீன சில தொல்லைகளைக் கடந்து விட்டதாகக் கூறப்படுகின்றது. அது தொழில் உற்பத்தியிலும், தொழில் திறமையிலும் மிக முன்னேற்றமடைந்துள்ளது எனச் சொல்கின்றனர். இந்தியாவில் நடைபெற்ற ஒரு தொழிற் கண்காட்சியில், சீனக் கடையில் யந்திரக் கருவிகளும், பிற பொருட்களும், பார்வையாளர்களைக் கவர்ந்தன. சீனச் செய்தித் தாள்களும், பத்திரிகைகளும் அதன் தொழிலாளர்களின் நூற்றுக் கணக்கான 'கண்டுபிடிப்பு'க்களைப் பற்றி அறிவிக்கின்றன. சீனத் தலைவர்கள்,

தொழில் உற்பத்திப் பெருக்கப் புள்ளி விவரங்களைக் காட்டி மக்களை மகிழ்விக்கின்றனர். துரதிருஷ்டவசமாக அப் புள்ளி விவரங்கள் எதையும் தெரிவிக்கவில்லை. ஏனெனில், விவசாயப் புள்ளி விவரங்களைப் போன்று அவையும் 1949-க்கும், 1950-க்கும் உள்ள சத வீதப் பெருக்கமே.

ஒரு காலத்தில் சீனு உலகத்தின் ஒதுக்குப் பகுதியாக இருந்தது. பணப் பெருக்க காலத்தில் சீனுவின் பலவகைப் பொருட்கள் குவிக்கப்பட்டதனுலும், பதுக்கப்பட்டதனுலும், பஞ்சம் தலைதூக்கியது. இன்று பிற வழிகளில் பொருட்கள் கிட்டாதாகையால், அப் பொருட்கள் மக்களின் தேவையை நிறைவேற்றுகின்றன. ஐந்து, பத்து ஆண்டுகட்கு முன் தோற்றுவிக்கப்பட்ட பொருட்கள் கடைகளில் நிரம்பியுள்ளன. உள் நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட சிகரட்டு, சோப்பு, துணி போன்றவை ஏராளம். ஆனுல், அவற்றின் உபயோகத்தைக் கட்டுப்படுத்த விலையை உயர்த்தியிருக்கின்றனர். மருந்துகள் யாவும் பழையனவே; ஒரு வேளை பயனற்றதாகவும் இருக்கலாம்.

சீனப் பொருளாதாரத்தின் உறுதி, மக்களின் தேவையை அது நிறைவேற்றுவதில் இருக்கின்றது. விவசாயம் அபிவிருத்தியடைந்திருப்பதாலும், உழவனே உற்பத்தியில் பெரும் பகுதியைத் தன்னிடத்தில் வைத்துக் கொள்வதாலும் செயற்கை உற்பத்திப் பொருட்களின் தேவை அதிகரித்துள்ளது. இத் தேவைகளை இறக்குமதியாலோ, உள்நாட்டு உற்பத்தியாலோ நிறைவேற்றலாம். நான் முன் குறிப்பிட்ட திரு. சென்யுன் தனது 1950-ஆம் ஆண்டில் வெளியிட்ட அறிக்கையில் தொழில் பலத்தை மதிப்பிட்டுள்ளார்: “ நம்மிடமுள்ள சில புதிய தொழில்கள் தேசியப் பொருளாதாரத்தில் பத்துச் சத வீதமே யாகும். அவையும் பலமற்றவை; நிலையற்றவை.”

சீனுவும் இந்தியாவைப் போல் அபிவிருத்தி யடையாத நாடு. அதன் புதிய தொழில்களில் பெரும்பான்மையானவற்றை வெளிநாட்டுத் தொழிலதிபர்களே வைத்து நடத்தி வந்தனர். அவர்கள் ஷாங்காய், தியன்ஸ்டீன், காண்டன், மஞ்சூரியா ஆகிய இடங்களில் குடியேறியிருந்தனர். சீன அரசாங்கம் அவர்களை வெளியேற்றியது. அதனுல் அதன்

குறைந்த உற்பத்தியைக் கூட நடத்திச் செல்லும் தொழில் திறமையும், நிர்வாக ஆற்றலும் அதனிடம் இல்லை.

மஞ்சூரியாவைச் சீனவுடன் சேர்த்ததால் சீனவின் தொழில் நன்மை யடையும் என்பதை மறத்தலாகாது. மஞ்சூரியா ஜப்பான் கையிலிருந்த பொழுது அது முதலீட்டை மூன்று மடங்காக்கிற்று. அந்த முதலீடு பல பொருளாதாரத் துறை களில் விரவி, அந் நாட்டின் இயற்கை வளத்தை வளர்த்தது. நிலக்கரி, இரும்பு, உருக்கு, செம்பு, ஈயம், தங்கம், எண்ணெய் ஆகியவை தொழில் வளர்ச்சிக்கு உதவின. கொரியா எல்லை யைத் தாண்டி யாலு நதியிலிருந்து மின்சாரம் உற்பத்தி செய்யப்பட்டு, இத் தொழில்களுக்கு வழங்கப்பட்டது. அன்ஷானி லும் முக்டனிலும் இருக்கும் யந்திரக் கருவித் தொழில், துணி உற்பத்தி, மின்சாரக் கருவிகள் யாவும் பெரிதாக்கப்பட்டன. மஞ்சூரியாவின் பொருள் வளம் சீனத் தொழில்களின் வருங் காலத்திற்கு இன்றியமையாதது. இதைக் குறிப்பிட்டதற்காக, தியன்ஸ்டீனிலுள்ள நாங்காய்ப் பல்கலைக் கழகம், ஜப்பானியர் களால் குண்டு எறிந்து அழிக்கப்பட்டது.

ஆகவே, நான் மஞ்சூரியா செல்வதில் மகிழ்ச்சியடைந்தேன். போர் முடிந்த பின், இந்தியாவிலுள்ள செய்தி நிறுவனங்கள், இப் பகுதியை ருஷ்யர் பிடித்துக் கொண்டதைப் பற்றியும், எவ் வாறு அவர்கள் அதன் தொழிற்சாலை யந்திரங்களை அழித்தனர் என்பதைப் பற்றியும் விரிவாக எழுதியுள்ளன. கோமிண்டாங் போர்ப் படையினரே' அவற்றை அழித்தனர் என்றும், ருஷ்யர் அல்லரென்றும் பீகிங்கில் நான் கேள்விப்பட்டேன். "ருஷ்யர்கள் சில யந்திரங்களை எடுத்தார்கள்; ஆனல், யாவற்றையும் திருப்பித் தந்து விட்டனர்" என்ருர் ஓர் அதிகாரி. இன்னொருவர், " 'பெரும்பாலானவற்றை' ருஷ்யர்கள் திருப்பித்தந்து விட்டனர்" என்று கூறினர். கம்யூனிசத்தின் கீழ் ஒவ்வொரு கேள்விக்கும் பல தரப்பட்ட விடைகள் கிடைத்தன. உண்மையை அறிவ தற்கு மிக்க முயற்சி வேண்டும். சீனவிலுள்ள சில தொழில் வல்லுநர்கள், "ருஷ்யர்தாம் தொழிற்சாலை யந்திரங்களை யகற்றி னர். உண்மையில் எதையும் திருப்பித் தரவில்லை.

கோமிண்டாங் படையினர் அக் கொடுமையைப் பெருக்கினர்" என்று அறிவித்தார்.

நாட்டின் குறுக்கே இரயிலில் பிரயாணம் செய்ததால் சீனுவைப் பற்றி அதிகம் தெரிந்துகொள்ள வாய்ப்பேற்பட்டது. பீகிங்கில் மாசேதுங், சூயென்லாய், இன்னும் பல கட்சித் தலைவர்கள் இருந்தனர். சீனு ஒரு கண்டம். ஒரு தற்கால ராஜ்யத்திற்கான அமைப்பு அங்கில்லை; பரம்பரையாக ஒரே மாதிரி வாழ்க்கை நடத்துவதால் ஒன்றுபட் டிருக்கின்றனர். மாறுக, சர்வாதிகார ஆட்சிக்கு அகன்ற - ஒன்றுபட்ட - உறுதியான நிர்வாகம் வேண்டும். குறுகிய காலத்திற்குள் எத்தகைய ஆட்சிமுறை அமைக்க முடிந்ததோ, அதைப் பொறுத்தே பீகிங்கின் பலமும் இருந்தது.

தொழில் மிகுந்த வடகிழக்குப் பகுதிக்கு நான் சென்ற போது, முக்டனில் தொழில் விவசாயப் பொருட்காட்சி நடைபெற்றது. வட கிழக்குப் பகுதியின் உற்பத்திப் பொருட்களே பொருட் காட்சியில் முக்கியமாக வைக்கப்பட் டிருந்தன; ஏராளமான தொழிற் கருவிகளும், பயன்தரும் பொருட்களும் வைக்கப் பட்டிருந்தன. எல்லாவிதமான எஃகு, யந்திரக் கருவிகளான கடைசல் யந்திரம், சுழலும் யந்திரம், சக்தி உற்பத்திக் கருவி, மின்சார மோட்டார், கம்பிகள், கனமான - கனமற்ற - ரசாயனங்கள், செயற்கை எரி எண்ணெய், எண்ணெய்ப் பொருள்கள், கண்ணுடிச் சாமான்கள், மண்பாண்டங்கள், துணிகள் யாவும் காட்சியளித்தன. தொழிற்சாலைகளின் மாதிரிகள் சிறிய அளவில் வைக்கப்பட்டு, அவை வேலை செய்யும் முறைகளும் காட்டப் பட்டன. கண் காட்சித் தொழில் பூரணத்துவம் பெற்றிருந்தது. பார்வையாளர்கள் தொழில்களைக் கற்று, ஆர்வம் காட்டும் வகையில் மிக்க கவனத்துடன் ஏற்பாடு செய்யப்பட் டிருந்தது. ஒவ்வொரு கடையிலும், சிறுவர் சிறுமியர் காட்சிப் பொருட்களுக்கு விளக்கம் தந்தனர். ஆனல், அவர்களுக்கு அவ் விளக்கத்தின் கருத்துத் தெரிந்திருப்பதாகத் தோன்றவில்லை. பக்கத்திலிருக்கும் மாவட்டங்களிலுள்ள மக்கள் வந்து கண்டு மகிழ்ச்சியுடன் திரும்பினர். அது போலவே ஆசியப் பார்வையாளர்களும். ஏனெனில், அவர்கள் சாதாரண தொழிற்சாலையினுள் சென்று

9

கண்டதில்லே. தொழில் திறமை பற்றி அவர்களுக்கு அவ்வள வாகத் தெரியாது. ஒரு சிறிய வேலேக்கு அனுபவமுள்ள தொழி லாளர்கள் எவ்வளவு பேர் வேண்டுமென்பதும் தெரியாது. அவர் களுக்குத் தெரிந்திருந்தால், அங்கு வைக்கப்பட்டிருந்த அதிசய மான யந்திரங்கள் சீனவில் செய்யப்பட்டவை யல்ல என்பதை உணர்ந்திருப்பார்கள். அந்தக் கண்காட்சி கம்யூனிஸ்டுப் பிர சாரமே தவிர வேறன்று; பூரணமான விளக்கம், ஆற்றலில் தெளிவு, எதைப் புரிந்து கொள்ளமுடியாதோ அதை நம்பும் மனித மன நலிவைப் பயன் படுத்தும் திறமை!

காரீயம், செம்பு ஆகியவை உருக்கும் தொழிற்சாலேயையும், சுரங்க யந்திரங்கள், வண்டிச் சக்கரங்கள் செய்யும் தொழிற்சாலே யையும் நாங்கள் பார்த்தோம். அந்தத் தொழிற்சாலேகள் கட்சி உறுப்பினர்களாலேயே நிர்வகிக்கப்பட்டு வந்தன. ‘ஏனன்’ காலத்திலிருந்தே அவர்களுக்குக் கட்சியிலிருந்த பற்றுதல் அவ் வதிகாரத்தைக் கொடுத்தது. சிப்பந்திகளில் தொழில் திறமை மிக்கவர்களோ, வல்லுநர்களோ இல்லே. அவர்களுக்கு எழும் சிக்கல்களே, முக்டனிலிருந்த ருஷ்ய வல்லுநர்களேக் கேட்டுத் தெளிந்துகொண்டார்கள். தேவைப்பட்டால் ருஷ்ய வல்லுநர்கள் தொழிற்சாலேக்குச் சென்று, வேண்டிய ஆலோசனே கூறி, வழி காட்டுவார்கள். ஒரு தொழிலாளி ‘மாதிரித் தொழிலாளி’யாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதும் அவன் உடனே ‘தொழில் நுணுக்கம் தெரிந்தவர் பட்டியலில்’ சேர்க்கப்படுகிறுன். இந்த ‘நுணுக்கத் தொழிலாளர்கள்’தாம் நாங்கள் சென்றபோது அங்கு இருந்தனர். அவர்களுக்கு உயர்ந்த சம்பளம் கொடுக்கப்பட்டு, பல வசதி களும் தரப்பட்டுள்ளன. அவர்களது உயர்வு மற்றத் தொழி லாளிகட்குத் தூண்டுகோலா யிருக்கின்றது. ஜப்பானிய ஆதிக்க நாளில் திறமையுள்ள தொழிலாளிகள் யாவரும் ஜப்பானியர் களாகவே இருந்தனர். ஆனுல், இன்று, பாதுகாப்பு நட வடிக்கைகளாலும், ஆரோக்கியம் பேணுதலாலும், திறமை யுள்ள தொழிலாளிகள் தேவையில்லே எனக் கருதுகின்றனர்!

பெரும்பான்மையான வேலேயும் மனித உழைப்பாலேயே செய்யப்பட்டது. சுரங்க யந்திரத் தொழிற்சாலேயின் பெரும் பகுதி காலியாகவே இருந்தது. ஒரு பெரிய தொழிற் கூடத்தில்

ஓர் உடைந்த உயர்த்தும் கருவி மட்டுமே காணப்பட்டது. பிறிதோரிடத்தில் காற்றுச்சுற்றியின் உதவியால் அடிக்கும் முறையைத் தொழிலாளர்கள் கற்றுக்கொண் டிருந்தனர். மூன் றுவது தொழிற்சாலையில் வண்டிச் சக்கரங்களைக் கையால் வார்த் துக்கொண் டிருந்தனர். ஒரே ஒரு தொழிற்சாலையில் மட்டும் சில கடைசல் யந்திரங்களும், வெட்டும் கருவிகளும் இருந்தன. தொழிற்சாலை முறைகளைத் தொழிலாளர்கள் பயிலும் பொருட் டும், அவர்களுக்கு வேலை கொடுக்கும் பொருட்டுமே அந் நிலையில் அத் தொழிற்சாலை பயன்பட்டதாகத் தெரிந்தது. கம்யூனிசப் பொருளாதாரத்தில் உற்பத்திச் செலவு கணக்கிடப் படுவதில்லை. அதன் விளம்பரத்திற்குக் கொடுக்கும் மதிப்பே முக்கியம். அந்தக் கண்காட்சியிலிருந்து சீன சுரங்க யந்திரம் உற்பத்தி செய்ததாக அறிந்தேன். அதை உற்பத்தி செய்வ தாகக் கூறப்பட்ட தொழிற்சாலையில் நான் இருந்தேன். ஆனல், அங்குப் பூர்த்தி செய்யப்பட்ட யந்திரம் ஒன்று கூடக் காண வில்லை. யந்திரத்தை இணைக்கும் முறையை நான் பார்க்க விரும்புவதாகக் கூறினேன். "ஒரு யந்திரம் முற்றுப்பெற்றதும் அது உடனே அனுப்பப்பட்டு விடும். ஏனெனில்,எங்கள் தேவை மிக்க அவசரமானது" என்று சொல்லிவிட்டார்கள். காரீயம்-செம்பு உருக்கும் தொழிற்சாலை சிறிது நல்ல நிலையில் இருந் தது. ஆனல், அதில் பெரும்பாலான வேலையும் உடலுழைப்பா லேயே நடைபெற்றது. அங்கே வகுப்பாரும் வழிகாட்டுவாரும் இல்லை!

ஏன் எங்களை அத் தொழிற்சாலைகட்கு அழைத்துச் சென் றார்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. எத்தனை இன்னலுக் கிடையே சீன வாழ்கின்றது என்பதை எங்களுக்கு உணர்த்து வதற்காக இருக்கலாம். எல்லாத் துயரங்களையும் கடந்து செல் வோம் என்ற அவரது உறுதி என் மனத்தில் நிலைபெற்றது. சர்வ தேச ஒற்றுமைக்கு வழிகோலும் வகையில் முயன்றல் அவ் வின்னல் களைய முடியாதோ என நான் எண்ணினேன். சீன மக்கள் நல் வாழ்வுக்கு ருஷ்ய உறவு வேண்டும் என்ற நிலையைச் சந்தர்ப்பம் தோற்றுவித்ததா? தன்னுடைய நலனுக்காகச் சீனவின் கதியற்ற நிலையை ருஷ்யா பயன்படுத்து கின்றது என்பதில் ஐயமில்லை!

நான் இரண்டாம் முறை,எட்டு மாதங்கட்குப் பின்னர் முக்டனுக்குச் செல்லும்போது, தொழில் அமைப்பிலும் திறனிலும் முன்னேற்றம் காணலாம் என்று நம்பினேன். ருஷ்யாவும், கிழக்கு ஐரோப்பாவும் அடிப்படைத் தேவையான மூலதனப் பொருட்களைக் கொடுத்தன. மேலும், ருஷ்யா, சீன - சோவியத் ஒப்பந்தத்தின் கீழ் ஆண்டொன்றுக்கு ஆறு கோடி டாலர் வீதம் கடனாகக் கொடுத்தது. அங்ஙனம் ஐந்தாண்டுகள் ஒரு சத வீத வட்டிக்குக் கடன் கொடுக்கும் மின்சார சக்தி நிலையக் கருவிகள், உலோகப் பொருள் தொழிற்சாலை யந்திரம், நிலக்கரி - தாதுப் பொருட்கள் வெட்டி யெடுக்கும் சுரங்க யந்திரங்கள், ரயில்வே, பிற போக்குவரத்துக் கருவிகள், இன்னும் சீனப் பொருளாதார அபிவிருத்திக்கு வேண்டிய சாமான்கள் யாவும் ருஷ்யாவால் கடனாகக் கொடுக்கப்பட்டன. அவ் வொப்பந்தத்தில் ஏதேனும் உண்மை இருக்குமானால், சீனா தனது நொறுங்கிய தொழிலை உருவாக்குதற்கு வேண்டும் உதவியைப் பெற்றுக் கொண்டிருக்க வேண்டும். எனினும், நான் பெரிய அளவில் உதவியை எதிர்பார்க்கவில்லை. ஏனெனில், சீனா எந்த இயந்திரமும் பெறமுடியவில்லை; அதனிடமிருக்கும் கருவிகள் கீழ் ஐரோப்பாவிட மிருந்து நீண்ட காலக் கடனில் வாங்கப்பட்டவை என்று பீகிங்கில் நான் கேள்விப்பட்டேன்.

நான் இரண்டாம்முறை முக்டன் சென்றபொழுது இயங்கும் வண்டித் தொழிற்சாலையையும், யந்திரக் கருவித் தொழிற்சாலையையும் பார்க்குமாறு நிகழ்ச்சியில் குறிப்பிடப்பட் டிருந்தது. முதன் முறையைப் போலவே தொழிற் கண்காட்சியைப் பார்த்தோம். இயங்கும் வண்டித் தொழிற்சாலை மறந்துவிடப்பட்டது. மஞ்சூரியாவில் ஒரு தொழிற்சாலையைப் பார்க்கவேண்டுமென வற்புறுத்தினோம். ஒரு நிலக்கரிச் சுரங்கத்தைப் பார்வையிட ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதாகக் கூறினார்கள். முன்பு குறிப்பிட்ட தொழிற்சாலை, ‘வண்டிகள் செய்யவில்லை; ரயில் பெட்டிகளைப் பழுது பார்த்தது ; சக்கரங்கள் உற்பத்தி செய்தது’ என்று அறிவித்தார்கள். நான் முன்னர் ஒரு முறை கண்ட தொழிற்சாலையை நினைத்துக்கொண்டேன். பார்வையாளர்களை மீண்டும் அங்கே அழைத்துச் செல்லலாகாது என்ற சீனர் கருத்தை நான் புரிந்துகொண்டேன்.

நிலக்கரிச் சுரங்கத்தையும், ஷேல் எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலையையும் நான் பார்வையிட்டேன். சீன - ஜப்பான் போருக்கு முன் சீனு, ஜப்பானுக்கு நிலக்கரி ஏற்றுமதி செய்து வந்தது. ஆனால், இப்பொழுது ஏற்றுமதி எதுவும் இல்லை. விலைவாசியை உறுதிப்படுத்துவதற்கு நிலக்கரி ஒரு முக்கியப் பொருளாகும். சீனு, தனது நிலக்கரி உற்பத்தியை மீண்டும் ஆரம்பித்து, போருக்கு முன்னிருந்த நிலையில் உற்பத்தியைக் கொண்டுவந்தால், அதன் தொழிற்சாலைகளுக்கு எரிபொருள் கிட்டும்; ஏற்றுமதியும் செய்யலாம். சீன மாத வெளியீடு ஒன்றில், சீனுவின் தாதுங் சுரங்கத்தில் 1950 விட 1951-இல் 284 சத வீதம் உற்பத்தி பெருகி யிருப்பதாகக் காட்டப்பட்டிருந்தது. இது உண்மையன்று என நான் தெரிந்து கொண்டேன். ஏனெனில், சில கழுதைகள் மீது நிலக்கரிப் பொதி ஏற்றித் தாதுங் சுரங்கத்திலிருந்து கொண்டு செல்வதை நான் கண்டேன். பூஷன் நிலக்கரிச் சுரங்கத்தைப் பார்த்தது அரிய வாய்ப்பு எனத் தோன்றியது.

முக்டனிலிருந்து பூஷனுக்குச் செல்லும் பாதை மேடு பள்ளமாக இருந்தது. மஞ்சூரியாவிலுள்ள ஜப்பான் தொழிற்சாலைகளி லிருந்து புகைக்கூண்டு வழியாகப் புகை வந்துகொண்டிருந்தது. பூஷன் முக்டனைப் போல் ஒரு ஜப்பானிய நகரம். அதன் பெரிய சாலைகள் நிலக்கரித் தூள் படிந்து சாம்பல் நிறமாக உள்ளன. மக்கள் வசிக்கும் பகுதியில் குதிரைப் பந்தய நிலையம் உட்பட எல்லா நவீன வசதிகளும் உள்ளன. புகழ்பெற்ற லிங்புங் சுரங்கத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டோம். பருத்திப் பஞ்சால் வாயை அடைத்துக்கொண்டு சுரங்கத்தின் உள்ளே சென்றோம். அடிப்பகுதியிலிருந்து நிலக்கரி ஏற்றி மேலே வந்த வண்டியைக் கவனித்தோம். அச் சுரங்கம் எவ்வாறு வேலை செய்தது, எவ்வாறு அதன் உற்பத்தி நான்கு மடங்காக விடுதலைக்குப் பின் உயர்ந்தது என்பதை எங்களால் கண்டு கொள்ள முடியவில்லை. அந்தத் தொகையை நாங்கள் ஒப்புக் கொள்ள வேண்டியிருந்தது. அங்கே பதினாயிரம் தொழிலாளர்கள் வேலை செய்தனர்; எல்லா வசதிகளும் நிரம்பிய வீடுகளில் வசித்தனர். திருப்தியுடன் முக்டன் திரும்பினோம்.

எங்களில் சிலர் பூஷனிலேயே இருந்தோம். மாலையில் நாங்கள் நிலக்கரி சேமிக்கும் குழியைச் சென்று பார்த்தோம். இது ஒரு மகத்தான காட்சி. அது 7000 கஜம் நீளமும், 300 முதல் 1200 கஜம் அகலமும், 170 கஜ ஆழமும் இருந்தது. மெது நிலக்கரி 80 முதல் 90 மீட்டர் ஆழத்தில் படிந்திருந்தது. நிலக் கரியின் மேல் ஷேல் (ஒரு வகை மண்) இருந்தது. அக் குழி யின் ஓரத்தில் ஷேல் எண்ணெய் சுத்தம் செய்யும் தொழிற்சாலை இருந்தது. நான் வடகிழக்கில் பார்த்த பிற தொழிற்சாலைகளைப் போலன்றி அது முழு வேலையாட்களுடன் வேலை செய்தது. அச் சுரங்கத்தின் தொண்ணூறு சத வீதமும் புதிய சீன அரசாங் கத்தால் புனர் நிர்மாணம் செய்யப்பட்டதாகக் கூறப்பட்டது. போருக்கு முன் இருந்த அளவு உற்பத்தியும் மீட்கப்பட்டதாம்.

இன்னும் நாங்கள் கடைசல் - வெட்டுதல் யந்திரங்களை உற் பத்தி செய்யும் தொழிற்சாலையைப் பார்க்க வேண்டி யிருந்தது. அவை எளிதான யந்திரங்கள்; செய்வதற்கு மிகுந்த திறமை வேண்டியதில்லை. முதல் தடவையாக ருஷ்ய யந்திரங்களை இங்கு நான் கண்டேன். ஒரு யந்திரத்தைத் தவிர எல்லா யந்திரங்களிலுமுள்ள பெயர்த் தகடுகள் சீன எழுத்துக்களில் மாற்றப்பட் டிருந்தன. பொருட்காட்சியில் நாங்கள் கண்ட சீன யந்திரங்களின் உண்மையை அவை விளக்கின. நான், 'அந்த எந்திரங்கள் எங்குச் செய்யப்பட்டவை?' என்று வினவினேன். அன்ஷான் யந்திரக் கருவித் தொழிற்சாலையில் செய்யப்பட்ட தாகக் கூறினார்கள். அது நாங்கள் பார்க்காத தொழிற்சாலை களில் ஒன்று. இதிலிருந்தும், பிற காரணங்களாலும் சீனாவில் யந்திரங்கள் உற்பத்தி செய்யப்படவில்லை என்று தெளிந்தேன்.

துணித் தொழில் முற்றிலும் மாறுபட்டது. ஷாங்காயி லிருக் கும் பிரிட்டிஷ் தொழிலதிபர்கள், சீனர்களிடம் அத் தொழிலைத் திறம்பட நடத்தும் ஆற்றலிருப்பதாகச் சொன்னார்கள். பல ஆலைகள், குறிப்பாக ஷாங்காயில் நெடுஞ்சுவருக்குள்ளே இருக் கின்றன. பிற சிறு தொழில்களைப் போன்று அவையும் தனிப் பட்ட முதலாளிகள் கையில் இருந்தன. பிரிட்டிஷ் ஆலைகளும் உண்டு. அவை யாவும் அரசாங்க அமைப்பான சீனப் பருத்தி நூல் - துணிக் கம்பெனியின் கட்டுப்பாட்டின் கீழ் இருக்கின்றன.

அக் கட்டுப்பாட்டின்படி அரசாங்கம் பருத்தி வழங்கி, நெய்த துணியை வாங்கிக் கொள்ளும்; உற்பத்திச் செலவைக் கொடுத்து விடும். துணி ஒரே ரகமாக உற்பத்தி செய்யப்படுவதால், புது ரகமோ, லாபமோ இல்லாமல் போகின்றது. தியன்ஸ்டீனில் தனிப்பட்ட தொழிலதிபரால் நடத்தப்படும் ஓர் ஆலையையும், ஷாங்காயில் அரசாங்கத்தாரால் நடத்தப்படும் ஓர் ஆலையையும் நான் பார்த்தேன்.

உணவிற்கு அடுத்தபடியாகச் சீன மக்களுக்குத் தேவைப் படுவது உடை. பொருளாதார உறுதிக்குப் போதுமான துணி கிடைக்க வேண்டும். தேசிய நாணயத்தின்மீது மக்களுக்கு நம்பிக்கை உண்டாக்க வேண்டுமாயின், நாணயச் சம மதிப்பு நிதி உறுதியாக இருக்கவேண்டும். ஆலைத் தொழிலுக்குச் சீனா வின் புனர் நிர்மாணத்தில் ஒரு முக்கிய பங்கு உண்டு. துணி யைப் பொறுத்தவரை சீனா குறைபாடின்றித் திருப்தியாயுள்ளது என்று கூறப்படுகின்றது. உழவர்களும் வழக்கத்தைவிட அதிக மாகத் துணி வாங்குகின்றனர். மக்களின் செல்வச் செழிப்பிற்கு உணவையும் உடையையும் மாதிரிகளாகக் காட்டுகின்றனர். " நிலச் சீர்திருத்தத்தின் காரணமாக உழவர்களின் பண மதிப் பும் உயர்ந்துவிட்டது. ஆகவே, 1949-இல் ஆள் ஒன்றுக்கு 10·8. அடி துணி வாங்கி வந்த உழவன் 1951-இல் தலைக்கு 24 அடி துணி வாங்கினான் " (அரசாங்க அறிக்கைப்படி ஆளுக்கு 16 கஜம்.) என்று பீகிங் நகர சபைத் தலைவர் பெங்சன் சொன்னார்.

வடகிழக்கே, கவோகாங் என்ற கிராமத்தில் ஒரு வீட்டி லுள்ள உழவன் பெருமையாக வந்திருந்தவர்களிடம் கூறினான் " விடுதலைக்கு முன்னர் என்னிடம் தைக்கப்பட்ட கந்தலாடை தான் இருந்தது. இன்று ஐந்து புதிய உடைகள் உள்ளன !" —அது சீன மக்களின் பொருளாதார மனத் திருப்தியைக் காட்டிற்று.

ஆனால், முன்னாளில் சீனாவில் பருத்தியும் துணியும் பற்றாக் குறையாக இருந்தன. ஆதலால், அவற்றைச் சீனா ஜப்பானி லிருந்து பெரும் அளவில் இறக்குமதி செய்தது. சீனத் தொழி லுக்கு இந்தியா வழக்கமாகப் பருத்தி ஏற்றுமதி செய்து வந்தது. சீனாவின் ஆலைகளில் ஐம்பது லட்சம் கதிர்களுக்கு மேல் இல்லை.

1951-இல் பருத்தி இல்லாமையால் பல ஆலைகள் ஆறு வாரங்கள் வேலை செய்யவில்லை. எல்லாக் கதிர்களும், ஆண்டின் எல்லா நாட்களிலும் வேலை செய்தாலும் அவர்களால் 20,000 லட்சம் கஜம் துணிக்குமேல் உற்பத்தி செய்யமுடியாது என்பது எனக்குத் தெரிந்தது. தடை செய்யப்பட்டிருப்பதால், இனிமேல் இறக்குமதி இல்லை. சீன ஆலைத் தொழிலாளர்களின் திறமை எவ்வளவுதான் உயர்ந்தாலும், அம் மக்களுக்குத் தேவையான துணியை அதனுல் உற்பத்தி செய்ய முடியாது. சீனுவில் உற்பத்தியாகும் துணியே மக்களுக்கு வழங்கப்படுகிறது. அதனுல் துணி ஒரே ரகமாக்கப்பட்டு, விலையுயர்ந்து, பற்றுமலும் இருக்கின்றது. ஒரு கஜம் சாதாரண துணியின் விலை நாற்பத்திரண்டு சென்ட். ஆகும்.

எங்களுக்கு உதவியாக இருந்த இளம் அதிகாரி நாள்தோறும் அதே நீல உடையைத் துவைக்காமலும்,தேய்க்காமலும் அணிந்திருந்தார். ஏனெனில், அவருக்கு ஆண்டிற்கு ஓர் உடைதான் கொடுக்கப்பட்டது. சீனு எவ்வாறு உடைத் தேவையை நிறைவேற்றுகின்றது ?

தியன்ஸ்டீனிலுள்ள ஹெங்குயன் ஆலையின் நிர்வாகியான பியன்ஷிசிங் ஒரு தனிப்பட்ட மாதிரி முதலாளி. அவர் ஒரு மாதிரித் தொழிற்சாலையின் சொந்தக்காரர். நெடு நாட்களுக்கு முன்பே எது சரியான செய்கை என்று அறிந்து நடந்த முன்னேற்ற முதலாளி. 1951 அக்டோபரில் என்னை வரவேற்ருர். தலை வழுக்கையாக இருந்தாலும், மிகவும் கவர்ச்சிகரமாக இருந்தார். சீன அதிகாரிகளின் அடர்த்தியற்ற வளைந்த மீசை அவரிடமும் இருந்தது. கண்ணுடி யணிந்திருந்தார். ஆனுல், சீனத் தேசிய முதலாளிகளைப் போல் அன்றி, நீல சன்யாட்சன் உடையணிந்திருந்தார். ஆனுல், அது சுத்தமாகவும் நன்ருகவும் தைக்கப்பட் டிருந்தது. அவருடைய உறுதியான கைகளும், அமைதியான தன்மையும் அவர் தொழிலாளர் தலைவர்களை நடத்தும் முறையைத் தெரிந்திருந்தார் என்பதைக் காட்டின. நாங்கள் சீனுவில் அருந்திய தேநீரில் மிகச் சுவையான தேநீர் என்று சொல்லக்கூடியது, அவர் எங்களுக்கு வழங்கிய தேநீர்தான். 1950-இல் அவர் பருத்தி பற்றமையாலும், தனி மனிதனுக அதைப் பெறுவதிலுள்ள தொல்லைகளாலும்,

ஏற்பட்ட அனுபவத்தைக் கூறினர். அரசாங்கப் பருத்தி நூல் - துணிக் கம்பெனிக்குச் சென்ருர். அரசாங்கம் அவருக்குப் பருத்தியும், செய்வதற்குள்ள செலவையும் கொடுத்தால், அவர் உற்பத்தி செய்த துணி யாவையும் அவர்களிடம் கொடுத்து வடுவதாக ஓர் இரண்டாண்டு ஒப்பந்தம் எழுதிக் கொடுத்தார். அரசாங்கம் அதை ஒப்புக் கொண்டது. துணிக்கும் நூலுக்கும் உள்ள வரியை அரசாங்கமே ஏற்றுக் கொள்வதாகவும் கூறிற்று. துணி மீதுள்ள வரி அதன் விலையில் 17 சதவீதமாகும். இந்த ஒப்பந்தம் திருப்திகரமாக இருந்தது. ஷிசிங் கம்பெனிப் பங்கு உடைமையாளர்களுக்கு $7\frac{1}{2}$ சத வீதம் லாபமாகக் கொடுத்தார். லட்சம் கோடி யுவான் (448,000 டாலர்) பங்கிடப்படாத லாபமாக வைத்துக் கொண்டார். ஒரு மாதிரித் தொழிலதிபராகிய திரு. ஷிசிங் தொழிலாளர் உறவையும் பெற்றிருந்தார்.

வழக்கம் போல் நாங்கள் சென்றதும் தொழிற் சங்கத் தலைவர்களும், மாதிரித் தொழிலாளர்களும் எங்களை வரவேற்றனர். அத் தொழிற்சாலை வேலை செய்யும் வீதத்தைப் பற்றி அரசாங்க வார்த்தைகளில் எழுதப்பட்ட அறிக்கையை நாங்கள் பெறவில்லை. திரு. ஷிசிங் பேச விரும்பவில்லை. எங்கள் வினக்களுக்கு விடையளிக்க முயன்ருர். அவரது வேலையை நன்ருகத் தெரிந்திருந்தார். எங்களுக்குத் தொழிற்சாலையைச் சுற்றிக் காட்டி, எங்களது கேள்விகளுக்கும் பதிலளித்தார். இது மற்ற விடங்களி லிருந்து மாறுபட்டது. நான் உற்பத்தி விபரங்களைக் கேட்டதும், அவர் மறைக்கவில்லை. அவர் தமது தொழிலாளர் தலைவர்களைத் திருப்திப்படுத்தி வந்தார் என்பது தெளிவாகத் தெரிந்தது.

நான் தியன்ஸ்டீனுக்கு மீண்டும் வந்தபோது, அரசாங்கத்தையும், தொழிலையும் தூய்மைப்படுத்தும் ஐந்து எதிர்ப்பு இயக்கம் கடைசிக் கட்டத்தை அடைந்திருந்தது. நான் திரு. ஷிசிங்கைப் பார்க்க விரும்பினேன். ஹெங்குயான் ஆலையைப் பார்க்க விழைந்தேன். எனது வேண்டுகோள் ஏற்றுக்கொள்ளப் படவில்லை. ஒரு வேளை மாதிரித் தொழிலதிபர் மறுத்திருப்பார்.

பொதுவான நடைமுறைக்கு மாருக, தியன்ஸ்டீன் ஆலை வேலை செய்து வந்தது. ஷாங்காயின் ஆலைகளில் கொடுக்கப்பட்ட

உற்பத்திச் செலவில் தொழிலதிபர்களுக்கும் லாபம் கிடைத்தது. பொருள், வாணிபத் தொழில், முத்திரைப் பத்திரம் ஆகியவற்றிற் குள்ள வரிகளால், பிரிட்டிஷ் தொழிலதிபர்களுக்கு எஞ்சுவது ஒன்றுமில்லை. ஆனல், அவர்களிடமிருந்து உற்பத்திப் பொருளை வாங்கும் அரசாங்கப் பருத்தி நூல் - துணிக் கம்பெனிக்கு மிகுந்த லாபம் கிடைத்தது. என்றாலும், எல்லாத் தொழில்களையும் விடத் துணித் தொழிலே, இன்றைய அமைப்பில் லாபகரமானது என யாவரும் ஒப்புக்கொள்கின்றனர். அது ஆண்டு முழுவதும் வேலை செய்ய முடிந்தது; வரவையும் செலவையும் சரிக்கட்ட முடிந்தது.

நாங்கிங்கில் எருத் தொழிற்சாலை ஒன்றைப் பார்த்தேன். அது டாக்டர் ஹோ என்ற உலகப் புகழ்பெற்ற தொழில் வல்லுந ரால் நிர்வகிக்கப்பட்டு வந்தது. அவர் பல ஆண்டுகள் அமெரிக் காவில் வாழ்ந்தவர். இன்று யுங்லிங் ரசாயனங்கள் என்ற நிறுவனத்தின் அதிகாரியாக இருக்கின்றார். அரசாங்க ஆலோசகருமாவார். ரசாயனத் தொழிலை அபிவிருத்தி செய் வதற்கான திட்டங்கள் இருக்கின்றன. நான் நாங்கிங் சென்ற பொழுது, அத் தொழிற் சாலையின் நிர்வாகி யந்திரங்கள் வாங்கு தற்குக் கிழக்கு ஐரோப்பா சென்றிருந்தார்.

ஷாங்காயில் நான் வேறு பல தொழிலதிபர்களுடன் பேசி னேன். அவர்களில் பெரும்பான்மையோர் பிறநாட்டினர். தாதுப் பொருள் குறைவு அல்லது தேவையில்லை என்ற காரணத்தால் தொழிற்சாலைகள் மாதத்தில் மூன்று வாரங்கள் அடைபட்டுக் கிடந்தன. இது எனது கருத்து. இது பின்னர் உறுதிப்படுத் தப்பட்டது. சீனர்கள் அதிகமாகப் புகை பிடிப்பவர்கள். என் றாலும், இம்பீரியல் புகையிலைக் கம்பெனியின் பெரிய புகையிலைத் தொழிற்சாலையில் மூன்றில் ஒரு பகுதியே உற்பத்தி செய்யப் பட்டது. ஈவோ சாராயத் தொழிற்சாலையில் பல பீப்பாய் சாராயம் விற்கப்படாமல் கிடந்தது. பல சீனர்கள் நெல்நயினை விட, சாராயத்தையே விரும்பி அருந்தினர்.

சீனவின் தொழிலை மீட்டு, அதனை வளப்படுத்த மூன்றாண்டு களாகச் செய்யும் முயற்சிகள் யாவும் செயலளவில்தான் நின்றனவே தவிர, நிறைவேற்றப்படவில்லை. மூலப்பொருட்

களும் தாதுப் பொருட்களும் பற்றுமையால் சரியான வளர்ச்சி யில்லை. அவசியமும், அவசரமுமான தேவைகளை நிறைவேற்றச் சீனுவிற்குக் கைத்தொழிலை நாடவேண்டி யிருக்கின்றது. சிக்கன வாழ்க்கையாலும், பழம் பொருட்களின் அதிக விலையாலும் சீனு தேவைகளைக் கட்டுப்படுத்தியுள்ளது.

நாங்கிங்கில் ஒரு கடையில், 225 டாலர்களுக்குப் பிரிட்டிஷ் சைக்கிள்களையும், 98 டாலர் முதல் 170 டாலர் வரை விலையுள்ள ஜப்பான் சைக்கிள்களையும் நான் கண்டேன். பழங்கால வண்டி களையும் டிராம் வண்டிகளையும் தவிர, நகரங்களில் சைக்கிள் தான் முக்கிய போக்குவரத்து சாதனம்.

சீனு அதன் மக்களை யந்திரப் பிரியர்களாகச் செய்வதற்கும், தொழிலாளர்களுக்குப் பயிற்சி யளிப்பதற்கும், அதனிடம் இருக் கும் குறைந்த கருவிகளைக் கூடிய அளவு பயன்படுத்துகின்றது. தியன்ஸ்டீனில் நடைபெற்ற மற்றொரு கண்காட்சியில் அதை நான் பார்த்தேன். முன்னுளில் முயலாதவற்றை இப்பொழுது நாடு நிறைவேற்றிக்கொண் டிருக்கிறது என்ற உணர்ச்சியை மக்களுக்கு ஊட்ட அப் பொருட்காட்சி பயன்பட்டது. எளிய சுவரொட்டிகளால் மக்களின் ஒவ்வொரு செயலும் நாட்டின் லட்சியத்தை நோக்கித் திருப்பப்பட்டது. விவசாயம், தொழில், கல்வி, ஆரோக்கியம், கலை, பண்பாடு யாவும் சீனுவின் லட்சியத் தையும், சாதனையையும் எடுத்துக் காட்டின. காட்சிப் பொருட் களில் ஒரு மோட்டார் வண்டியும் இருந்தது. அது சீனத் தொழி லாளர்களின் பொதுவுடைமை ஆர்வத்தின் உதவியால் செய்யப் பட்டது! அது தொழிலாளர் நாட்டில் கருவியும், திறமையு மின்றிச் செய்யப்பட்ட சாதனை! ஆனுல், அந்த வண்டி, சாலையில் ஓடுமா என்பது வேறு விஷயம்! அதன் மேல் மூடியின் கீழ் ஒரு யந்திரம் இருந்தது.

சத வீத உயர்வு விபரங்களை மட்டும் வெளியிடுவதால் பய னில்லை. இடையிடையே உண்மை உருவ அளவில் மாதிரி செய்து மக்களுக்குக் காட்டவேண்டும். தேவைப்பட்டால் ஒரு ஓடும் பொறியுடன் பொருத்திக் கண்காட்சியில் காட்டலாம். அப்போதுதான் மக்கள் தங்கள் கனவுகளைக் நனவாகக் காணமுடி

யும். அவ்வழியில்தான் பிரசாரம் மக்கள் மனத்தில் பதிக்கின்றது. என்னுடைய நண்பர்களில் சிலரிடையே அதன் விளைவை நான் கண்டேன். அவர்கள் இந்தியா திரும்பியதும் சீனு, மோட்டார் வண்டி, செயற்கைப் பெட்ரோல் முதலானவற்றை உற்பத்தி செய்கின்றது எனக் கூறுகின்றனர். ஏழை ஆசியாக்காரனும் அவை அவனருகில் ஒரு நாள் வரப்போவதாகக் கற்பனை செய்கின்ருன்!

# 7. பணப்பெருக்கமும் நிதியும்

**போ**ருக்குப் பின் சீனப் பொருளாதாரம் முற்றிலும் அழிக் கப்பட் டிருந்தது. மஞ்சூரியாவில் இருந்ததுபோல் அதன் பல தொழில்கள் உடைக்கப்பட்டு, யந்திரங்கள் அகற்றப்பட் டிருந்தன. இரயில் பாதைகள் துண்டுபடுத்தப்பட் டிருந்தன. இரயில் வண்டிகள் அவல நிலையில் நின்றன. வேளாண்மை சிதறுண்டிருந்தது; பல பகுதிகளில் பஞ்சம் தலைவிரித்தாடியது. விவசாயிகள் உணவுத் தானியங்களைக் குவித்தனர். நிதியின் சீர்கேடு மக்களின் துயரைப் பெருக்கியது. அவர்களிட மிருந்த பணத்தின் அன்றாட மதிப்பை அவர்கள் அறிந்திலர். விலைகள் மணிக்கு மணி மாறியது. கையிலிருக்கும் பணத்தைப் பொருள் களாக மாற்றுவதைத் தவிர வேறு வழியில்லை. நாணயத்தில் மக்க ளுக்கு நம்பிக்கை யில்லை. ஆகவே, வாணிபம் படுத்துவிட்டது. 1949-இல் உள்நாட்டுநாணயத்தால் நாற்பதில் ஒரு பங்கு வாணி பத்தையே கட்டுப்படுத்தமுடிந்தது என்று மதிப்பிடப்பட்டுள்ளது. தங்கமும் வெளிநாட்டு நாணயங்களுமே பரிமாற்றத்திற்குப்பயன் பட்டன. இதனிடையே கோமிண்டாங் நாணயத் தாள்களை அச்சடித்துக்கொண் டிருந்தது. கடைசியில் விலைவாசிக்கும், பணத்திற்கும் தொடர்பில்லை யென்ற நிலை யேற்பட்டது. நாண யத்தை நம்புவதற்குப் பதில் மக்கள் எண்ணத்தில் நம்பிக்கை வைத்தது. 1949-இல் செலாவணியாகி வந்த நாணயம், போருக்கு முன்னிருந்த நாணயச் செலாவணியை விட 176800 கோடி மடங்கு அதிகம். விலைக் குறியீட்டு எண் 138842,00 கோடி அதிகம். அதாவது, ஒருவனிடம் போருக்குமுன் பதினாயிரம் சீன டாலர்கள் இருந்தால் அவற்றைக் கொண்டு 1949-இல் ஒரு தீக்குச்சி கூட வாங்க முடியாது.

இந்த நிலைமை உற்பத்தியை மிகவும் பாதித்தது. உற் பத்தி, விவசாயத்தில் 30 சத வீதமும், தொழிலில் 50 சத வீதமும் குறைந்தது. இந்தக் குழப்பத்தில் எந்த அரசாங்கமும் தொடர்ந்து நீடிக்க முடியாது. அத் தருணத்தைப் பொது

வுடைமையாளர் மிகத் திறமையாகக் கையாண்டு, குறுகிய காலத்திற்குள் மக்களின் பொருளாதார வாழ்க்கையைச் செப்பனிட்டு நம்பிக்கையை நிலைநாட்டினர். இது அவர்கட்குப் பெருமைதான். சிறிய வணிகர்களும், வாணிபத்தொழில் வகுப்பினரும், இன்றைய சீன அரசாங்கத்தை ஆதரிப்பதன் காரணம், அவர்கட்குக் கிடைத்த இப் பாதுகாப்புத்தான். இன்று விலை உறுதியாக நிற்கின்றது. பொருளாதார சமத்துவ மின்மையால் பணப்பெருக்க நிலை இருந்தாலும், மக்கள் பாதுகாப்புடனும் நம்பிக்கையுடனும் இருக்கின்றனர்.

1950 மார்ச் - ஜூனின் மூன்று மாதங்கள் பணச் சுருக்கப் பணி நடைபெற்றது. போர்க்காலத்திலிருந்து சமாதான காலப் பொருளாதாரப் புனர் நிர்மாணத்தைக் கொண்டுவருவதற்கு வழி கோலப்பட்டது. ஒரு வேளை முழு அதிகாரப் பொருளாதாரத்தில்தான் அத்தகைய வெற்றி விரைவில் கிடைக்கலாம். ஆனால், வெற்றிகரமாக நடத்தப்பட்ட முறை, புதிய அரசாங்கத்தின் நிர்வாகத் திறமையைக் காட்டுகின்றது. நாணயத்தை அதன் சாதாரண நிலைக்குக் கொண்டுவர மூன்று விஷயங்கள் அவசியம். முதலாவது, அரசாங்க வரவு செலவுகள் கட்டுப்படுத்தப்பட்டு, சமன் செய்யப்பட வேண்டும். இரண்டாவது, மக்கள் கையிலிருக்கும் பணத்தின் மதிப்பு நிலையானது என அவர்களுக்கு உறுதி கூறவேண்டும். கடைசியாக, இந் நம்பிக்கையை நிலைநாட்ட விலைகளைக் கட்டுப்படுத்த வேண்டும்.

முதல் நோக்கத்தை நிறைவேற்றத் தேசத்தில் நிதி ஒழுங்கு படுத்தப்பட வேண்டும். எல்லா வரவையும் மத்திய அரசாங்கமே வாங்கிக்கொண்டது; பின்னர்ச் செலவைக் கட்டுப்படுத்தியது. உழவர்களிடமிருந்து உணவுதானியமாகவும், பருத்தியாகவும் வரி தண்டப்பட்டது. தொழில் தொடர்ந்து நடைபெறுமாறு ஆணையிடப்பட்டது. அரசாங்கம் உற்பத்திப் பொருளை வாங்கிக் கொண்டது. 'படைகள் செல்லுமிடங்களில் இரயில் பாதை செல்லும்' என்ற திட்டப்படி இரயில் பாதைகள் போடப்பட்டன. இச் சீர்திருத்தங்களால் தேசத்தின் வருமானம் உயர்ந்தது. மறுபக்கத்தில் செலவு மிகக் குறைக்கப்பட்டது. அரசாங்கப் பணியாட்கள் பலர் சம்பளம் பெறுவதில்லை. அவர்கள் தங்கும்

வசதி, உணவு, குறைந்த பங்கீட்டுப் பொருள்கள், துணி யாவும் பெறுகின்றனர். படை பலச் செலவு தனியாக வைக்கப் பட்டது. மக்கள் வங்கியின் தலைவரான நான்ஹன்சென் என் பவர் கூறினர்: "பத்துக்கோடி டாலருக்குப் பத்திரம் வழங்கப்பட்டு நாட்டின் தேவைகள் நிறைவேற்றப்பட்டன. அதனால் வரவுக்கு மிஞ்சிய செலவு குறைக்கப்பட்டது. அப் பத்திரங்கள் பொருட்கள் அல்லது வெள்ளி டாலர் மதிப்பில் வழங்கப்பட்டன."

இரண்டாவது நோக்கம் நிலையான மாற்று மதிப்பு. அது, 'நாணய சம மதிப்பு நிதி'யால் பெறப்பட்டது. அரசாங்க அமைப்புகளும், நிறுவனங்களும், பள்ளிகளும், ஆயுதப் படையினரும் மூன்று நாள் செலவிற்கு வேண்டும் பணத்திற்குக் கூடுதலாகக் கையில் வைத்திருக்கக் கூடாது எனக் கட்டளையிடப் பட்டது. மக்கள் தங்களிடமுள்ள எஞ்சிய பணங்களை வங்கியில் போடுமாறு கேட்கப்பட்டனர். அங்ஙனம் போடப்பட்ட பணம் மதிப்பிடப்பட்டு, விலைவாசி எப்படியாயினும் அதன் மதிப்புக்கு உறுதி யளிக்கப்பட்டது. நாணயச் சம மதிப்பு நிதி நெல், துணி, எண்ணெய், வீட்டு நிலக்கரி ஆகிய பொருள்களில் அடங்கும். தங்கப் பரிமாற்றம் சட்டவிரோதம் என அறிவிக்கப் பட்டது. அதனை மக்கள் அரசாங்க வங்கியில் கொடுத்துவிட வேண்டும் என ஆணை பிறந்தது. வங்கி அதனை மிகக் குறைந்த விலைக்கே வாங்கியது. அது போன்ற வெளிநாட்டு நாணயங்களும் அகற்றப்பட்டன. அவைகளுக்குப் பதிலாக வழங்கப்பட்ட நாணய வீதத்திற்கும் விலைவாசிக்கும் தொடர்பில்லை. கடைசி இரண்டு வழிகளாலும் அரசாங்கத்திற்கு இறக்குமதிப் பொருட்களின் விலையைக் கொடுக்க முடிந்தது. நாணயத்திலும் வாணிபத்திலும் சூது நடவாமலிருக்கச் சீனவின் எண்ணூறு தனிப்பட்ட வங்கிகள், மக்கள் வங்கியின் நிர்வாக அதிகாரத்தின் கீழ் கொண்டுவரப் பட்டன.

கடைசியாக ஒரு மத்திய அதிகாரத்தின் கீழ் உணவு தானியங்கள், துணி, நிலக்கரி, பிற முக்கியமான பொருட்கள் ஆகியவற்றின் வாணிபம் கொண்டுவரப்பட்டு விலை கட்டுப்படுத்தப் பட்டது. அரசாங்கமே பொருட்களை வாங்கிச் சேர்த்து, அரசாங்கக் கடைகள் மூலம், குறிப்பிட்ட விலைக்கு விற்றது.

உணவுப் பொருளே முக்கிய பிரச்சினை. ஏனெனில், மற்றப் பொருள்கள் மக்களின் நம்பிக்கை பிறந்ததும் குவியலிலிருந்து வெளிவந்தன. அரசாங்கத்திற்கு வரியாக ஏராளமான தானியங்கள் கிடைத்தன. இங்ஙனம் பெறப்பட்ட தானியம் ஆண்டொன்றிற்கு, நாலரைக் கோடி மக்களுக்கு உணவாகும். ஆனால், நகர்ப் புறங்களிலும், பஞ்சப் பகுதிகளிலும், ஆறு கோடி மக்களுக்குத் தேவையான உணவு தானியம் வேண்டியிருந்தது. ஆகவே, அரசாங்கம் மக்களிடமிருந்து உணவுப் பொருட்களை விலைக்கு வாங்கியது. 1949-க்கும் 1950-க்கு முள்ள வரியை அவ்வாண்டிலேயே தண்டிற்று. ஏற்றுமதி யில்லாததால் போதுமான நிலக்கரி இருந்தது. வெட்டியெடுக்கப்பட்ட நிலக்கரி நாட்டின் தேவைக்குப் போதுமானதாக இருந்தது.

1951, அக்டோபரில் பீகிங் வந்திருந்த விருந்தினருக்குப் பணப்பெருக்கத்தைச் சீனு கையாண்ட முறைபற்றி விளக்க நான்ஹன்சென் வந்தார். மக்கள் வங்கியின் தலைவர் என்ற முறையில் அவர் சீனுவின் நிதி - நாணயக் கொள்கைகளைப் பரிபாலித்தார். கோமிண்டாங் ஆட்சியின்போது அவர் சீன வங்கியில் ஒரு குமஸ்தாவாக இருந்தார் என்று கூறப்பட்டது. மிகப் பெரிய பொருளாதார இன்னல்களைக் கடந்து சம நிலையை எய்த அவர் நம்பிக்கையுடன் திறம்பட உழைத்து வருகின்றார். விலைவாசிகளை நிலைநிறுத்தும் பொருட்டு, நாணயங்களை வெள்ளம்போல் பெருக்குவதும், மீண்டும் அவற்றைத் திருப்பி அடக்குவதும் அவரது திறமையான பணியே. அவர் மூன்று மணி நேரம் வந்திருந்தவர்களுடன் அதைப் பற்றிப் பேசினார். பலருக்கு அது கசப்பாக இருந்தது. என்றாலும், அவர் தமது எளியவிளக்கத்தால் அவர்களது கவனத்தை இழுத்தார். அவரது அமைதியான செய்கைகள் பலரை ஈர்த்தன. அவர் கம்யூனிஸ்டுக் கட்சி உறுப்பினர் என நான் நினைக்கவில்லை. ஆனால், டாக்டர் சாச்சைப் போன்று அரசாங்கத்திடம் பற்றுதலாக இருக்கின்றார். வல்லுநர் என்ற முறையில் சீனுவின் கொள்கைகளை நிறைவேற்றச் சித்தமாக இருக்கின்றார்.

அவருடைய கொள்கையின் வெற்றியை விளக்கினார்: "எங்களிடம் இப்போது பொருளைக் குவித்தலோ, பற்றாமையோ

இல்லை. எங்களுக்குத் தேவையற்ற உணவு தானியத்தையும், துணியையும் எங்கள்மீது திணிப்பதையும், இறக்குமதி செய்வதையும் தடுத்தோம். அவைகளின் தேவையைப் பெருக்கி, தொழில் விவசாய உற்பத்திக்கு ஊக்கம் அளித்தோம். அதனால் வாணிபம் உயர்ந்தது. அத்துடன் நாணயப் புழக்கமும் அதிகமாயிற்று. எங்கள் வரவு செலவைச் சரிக் கட்டினோம். வெளி நாட்டு நாணயமாற்று திருப்தியாக இருக்கின்றது. கடந்த ஆண்டிற்குப் பின் நிதியும் விலையும் நிலைபெற்று நிற்கின்றன. சில சமயங்களில் பொருட் குறைவினால் சில இடங்கள் பாதிக்கப் படும். அவற்றிற்கு உடனே பரிகாரம் தேடினோம். தொழில் களின் படைப்பாற்றலைத் திருத்தி யமைத்து, மீட்டுக் கொணர்ந் தோம். நாட்டின் பொருளாதாரத்திற்கும், மக்களுக்கும் அது மிக உதவியாக இருக்கின்றது. ஹுவாய் நதித் திட்டம் போன்ற நீர்ப்பாசனத் திட்டத்தை மேற்கொண்டுள்ளோம். அதனால் பஞ்சம் பாதிக்கின்ற 2 கோடி ஏக்கர் பிரதேசத்தை எழுபது லட்சம் ஏக்கராகக் குறைத்தோம். இன்னும் விவசாயப் பொருள் விலைக்கும், தொழிற் பொருள் விலைக்கும் வேறுபாடு உளது. அதைக் குறுகிய காலத்திற்குள் களைய முடியாது. அதை நீக்க விரைவில் தொழிலைப் பெருக்குவோம்.''

1951 அக்டோபரில் வந்திருந்த விருந்தினர்க்கு அளிக்கப் பட்ட சிறந்த பத்திரம் அது. தேச நாணயத்தின் மீது மக்களுக்கு நம்பிக்கை ஏற்படுத்துவதே அடிப்படைத் தேவை. வெளிநாட்டு நாணயங்களையும், தங்கத்தையும் மாற்று நாணயமாக உபயோகிப்பதை அடுத்தபடியாகத் தடை செய்ய வேண்டும். சம சேமிப்பு நிதி, நாணயத்தைக் கட்டுப்படுத்தப்பட்ட நான்கு பொருட்களுடன் இணைத்தது. நிலவரியைத் தானியமாக ஏற்றுக் கொள்ள அரசாங்கம் ஒப்புக் கொண்டதும், கூலி, நெல்லாக அல்லது தானியமாகக் கொடுக்க இசைந்ததும், உழவர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் ஒரு நிரந்தரமான வாழ்க்கைத் தரத்தை உறுதிப்படுத்தியது. ஆனால், வாழ்க்கைத் தரம் குறைவாகவே இருந்தது. அதை உயர்த்துவதற்கு உற்பத்தி பெருக வேண் டும். வருமானமன்று. மற்றப் பொருட்களின் விலைகள், இப் பொருட்கள் கிடைப்பதைப் பொறுத்தும், மக்கள் கையில் எஞ்சும் பணத்தைப் பொறுத்தும் இருக்கின்றன.

மக்களின் நம்பிக்கையைப் பெறுதற்கு அரசியல் உறுதிப் பாடும் வேண்டும். பணப் பெருக்கத்தைத் தடை செய்ய முயன்ற போதிலும் அது நீடித்து இருந்து வந்தது. 1950 பிப்பிரவரியில் மாசேதுங் சீன சோவியத் ஒப்பந்தத்துடன் திரும்பியதும் நாணய மதிப்பில் மாறுதல் காணப்பட்டது. புதிய ஜனநாயகம் உறுதியாக ஆட்சி பீடத்தில் அமர்ந்தது. அதனை ஓர் உலகப் போர்தான் அசைக்க முடியும். பதுக்கப்பட்ட தங்கமும் வெளி நாட்டு நாணயங்களும் மக்கள் வங்கியில் குறைந்த விலைக்குக் கொடுக்கப்பட்டன. அதனால் அரசாங்கம் தனது நிதிக் கொள் கையை நிறைவேற்ற முடிந்தது.

ஆனால், விலைவாசியின் நிலை தொடர்ந்து நிற்கவில்லை. சீனா, பிற சர்வாதிகாரங்களைப் போன்று, நாணயங்களை அச் சடித்தே வாழ்க்கை நடத்துகின்றது. ஐம்பது லட்சம் படை வீரர்களை வைத்திருத்தலும், நாட்டின் வருமானத்திலிருந்தே நீண்ட காலத் திட்டங்களுக்குப் பணமளித்தலும், ஏகாதிகார ஆட்சிக்கு வேண்டிய பெரிய நிர்வாகத்தை நடத்தலும், அபி விருத்தியடையாத நாட்டின் குறைந்த செல்வத்தைப் பாதித் தன. அரசாங்க வரவு செலவின்* உண்மையான எண்கள் கிடைக்காமல் இருந்தாலும், அதன் வரவு செலவைச் சரிக் கட்டுவதற்குப் போதுமானதல்ல என்பதில் சந்தேகமில்லை. அதிக நாணயங்கள் புழங்குவதற்கு வெளியிடப்பட்டுள்ளன என்

---

1953 பிப்பிரவரி கடைசியில் பீகிங் அரசாங்கம் முதல் தடவையாக தேச வரவு செலவு கணக்கை அறி வித்தது. நிதியமைச்சர் போயிபோ, 1952-இல் வரவு 800 கோடி டாலர் என்றும், அவ் வாண்டில் செலவு போக மிஞ்சியது ஒரு கோடி டாலர் என்றும் அறிவித் தார். அமெரிக்க நாணயப்படி இதற்கு ஒரு பொருளில்லை. ஏனெனில், வெளி நாட்டு நாணயமாற்று அவர்கள் விருப் பப்படி ஏற்படுத்தபட்டு அதற்கும் விலைக் குறையீட்டிற் கும் அல்லது வாணிப ஏற்றத் தாழ்விற்கும் எத்தகைய தொடர்பும் இல்லாது இருக்கின்றது. எனது கேள்விக்குப் பதில் அளிக்கும்போது நான்ஹன்சென் கூறினார்: 'சீனா வின் இன்றைய விலைவாசிக் குறையீடு 1937-ஐ விட இருபத்தையாயிரம் மடங்கு உயர்வு' என்று. தவிர, நாட் டில் தொழில் தேசிய மாக்கப்பட் டுள்ளது; வெளி நாட்டு

பதற்கு ஆதாரம் உளது. 1950-51-இல் விலைவாசி உயர்ந்தது. சீன அரசாங்கம் கூறுகின்றதுபோல் விவசாயப் பொருட்களில் 13 சத வீதமும், தொழிற் பொருட்களில் 19 சத வீதமும் விலைவாசி உயரவில்லை. உண்மையில் ஓர் உயர்தர அதிகாரி அறிவித்தது போல் 40 சத வீதமாகலாம்; அல்லது தனிப்பட்டோர் சொல்வது போல் 100 சத வீதமும் ஆகலாம்.

சீனாவில் கூலி, சம்பளம் யாவும் நெல், தானியங்களாகவே கொடுக்கப்படுகின்றன. அவையும் கொடுக்கப்படும் நாளில் நிலவும் விலையைப் பொறுத்துப் பணமாகவே கொடுக்கப்படுகின்றன. ஆகவே, விலைவாசி உயர்வென்பது, உணவு தானியங்கள் நீங்கலாக உள்ள பிற பொருட்களுக்கே பொருந்தும். உணவுப் பொருள்களின் விலை அதன் தேவைக் கொப்ப உற்பத்தியால் சரிக்கட்டப்படுவதில்லை. எனவே, அவற்றின் விலை உயர்வு என்றால், நாணயத்தின் மதிப்புக்குறைவு என்பதுதான் பொருள். என்றாலும், நாணயத்தின் வாங்கும் சக்தி மிஞ்சவில்லை.

'மக்கள் சீனா' என்ற பத்திரிகை இதை விளக்கி எழுதுகின்றது:

> சில தொழிலுற்பத்திப் பொருட்களின் விலை சிறிது ஏறியது. ஏனெனில், மக்களின் வாங்கும் சக்தி, அதிலும் குறிப்பாக உழவர்களின் வாங்கும் சக்தி ஏறிக்கொண்டே வந்தது. உற்பத்திப் பொருட்கள் மக்களின் தேவைக்கேற்ப உயரவில்லை. பொருளாதாரப் புனரமைப்புப் பாதையில் இது போன்ற ஏற்றத் தாழ்வுகள் தோன்றுவது

வாணிபத்திலும், உள்நாட்டு வாணிபத்தில் பெரும் பகுதியிலும் அரசாங்கத்திற்கு எதிர்ப்பாரற்ற ஏகபோக உரிமை இருக்கின்றது ; இதை மனத்தில் கொண்டே நாம் கோமிண்டாங் ஆட்சியின் வரவு செலவையும், இன்றைய வரவு செலவையும் வேறுபடுத்திப் பார்க்கவேண்டும். வருமானத்தில் பாதி வரிகளே யெனப் போயிபோ ஒப்புக்கொண்டார். மீதி தேசியத் தொழில்களி லிருந்தும், மூன்று எதிர்ப்பு, ஐந்து எதிர்ப்பு இயக்கங்களி லிருந்தும் பெறப்படுகின்றது. 1953-இல் 16·51 சத வீத வருமானம் ' கழிந்த ஆண்டில் மிகுந்ததும், பிற இனங்களிலிருந்து கிடைத்தது'மாகும். பிற இனங்கள் எனப்படுவது, செலவு மிஞ்சிய பொருளாதாரமாக இருக்கலாம்.

இயல்பே. ஆகவே. கழிந்த ஆண்டில் 13·8சதவீதம் உயர்ந்த பொருட்களின் விலை உண்மையில் மக்களின் வாங்கும் சக்தி பெருகியதால் வந்த விளைவே.

தொழிலாளர்கள் சம்பளம் உயர்ந்தது. அதனால், அவர்கள் வாங்கும் சக்தியும் உயர்ந்தது. இது உண்மை. ஆனால், அதே போன்று உற்பத்தியும் பெருகியதாகக் கூறப்படுகின்றது. அப்படியானால், விலைகள் உயராமல் அதிகரித்த தேவையை உற்பத்தி சமன் செய்திருக்க வேண்டும். வரவு செலவுக் கணக்கில் நாணயங்களையும் சேர்க்க வேண்டும். அதனால், நாணயத்தின் மதிப்புக் குறைகின்றது. வரவை மிஞ்சும் செலவு நிதியில் இது இயல்பாக உள்ளது.

தேசிய வரவு செலவு சமன் செய்யப்படவில்லையென நான் நம்புகிறேன். படை பலத்திற்கு ஆகும் பெருஞ் செலவும், தேசியத் திட்டச் செலவும், நாணய நோட்டுகள் அச்சடிப்பதால் சரிக்கட்டப்படுகின்றன. அங்ஙனம் அச்சடித்தலும் மக்கள் வாழ்க்கைமீது அரசாங்கம் செலுத்தும் கட்டுப்பாடு இருக்கும் வரையில்தான். நாணயத்தின் மதிப்பு பொருட்களின் விலையைப் பொறுத்திருக்கவில்லை. அது அரசாங்கத்தின் ஆணை வழி நிற்கின்றது.

விலைவாசியை நிர்ணயிப்பதைத் தவிர அரசாங்கம் மக்கள் கையிலிருக்கும் பணத்தையும் கவனித்து வருகின்றது. மக்களிடமிருந்து நன்கொடையாகப் பணம் வசூலிக்கப்படுகின்றது. கழிந்த மூன்றாண்டுகளில் அது போன்று மூன்று இயக்கங்கள் தோன்றின. முதலில், பத்துக் கோடி டாலர் பத்திரங்கள் கிளம்பின. பின்னர், கொரிய உதவி நிதியும், அமெரிக்க எதிர்ப்பு நிதியும், போர் விமான நிதியும் வந்தன. கடைசியில், 1952 ஆரம்பத்தில், சான்பான்வுபான் போன்ற வியக்கங்கள் மூலம் மக்களிடமிருந்து பெரும் தொகை வசூலிக்கப்பட்டது. இல்லையெனில், அத் தொகை புழக்கத்திற்கு வந்திருக்கும். பணத்தின் மதிப்பு எப்படியாயினும் அவை பொருளாதாரத் தேவைகள் தாம்.

மறுமுறை சென்றபோதும் நான் ஹன்சென்னைப் பார்த்தேன். வழக்கம்போல் எனது வினாக்களை முதலில் அனுப்பி

விட்டேன். பல நாட்களுக்குப் பின் அவரிடம் அழைத்துச் செல்லப்பட்டேன். அவர் கூறினர்: "எங்களது வருமானம் மூன்று வழிகளிலிருந்து கிடைக்கின்றது: (1) பொருள் வரி, வாணிப வரவு செலவு வரி, வருமான வரி, விற்பனை வரி. (2) அரசாங்கம் நடத்தும் தொழில்களிலிருந்து கிடைக்கும் வருமானம், (3) நில வருமானம். நில வருமானம் வரவில் முக்கிய பகுதியன்று. நாங்கள் வரவையும் செலவையும் சரிக்கட்டி விட்டோம். இவ் வாண்டு செலவு போக மிஞ்சும் என நம்புகின்றோம். மக்களிடமும் சேமிப்புத் தொகை இருக்கின்றது. அபிவிருத்தித் திட்டங்களுக்கு நாங்கள் வரவிலிருந்தே செலவு செய்கின்றோம். எங்கள் நிதி மத்திய அரசாங்கத்தால் திறமையாகக் கையாளப் படுகின்றது. முன் எற்பாடு செய்யப்பட்ட திட்டங்களின்படி மாகாணங்களுக்கு நிதி ஒதுக்கப்படுகின்றது. பணப் பெருக்கம் இப்போது இல்லை. விலைகள் உற்பத்தியாலும் தேவையாலும் நிர்ணயிக்கப்படுகின்றன. வாங்குவோருக்கும் உற்பத்தி செய்வோருக்கும் நலம் பயக்கும் பொருட்டு, அரசாங்கமே ஏராளமான பொருட்களை இருப்பில் வைத்து விலைகளைக் கட்டுப்படுத்து கின்றது. விவசாய உற்பத்திக்கும், தொழில் உற்பத்திக்கும் உள்ள வேறுபாட்டால் விலையைக் கட்டுப்படுத்த வேண்டிய அவசியமில்லை. சீன நாணயம் சம சேமிப்பு நிதியிலுள்ள எந்தப் பொருட்களுடனும் இணைக்கப்பட் டிருக்கவில்லை. உண்மையில் புழங்கும் நாணயத்தைவிட மூன்று மடங்கு பொருட்கள் கைவசமுண்டு."

நான் அவருடன் ஒரு மணி நேரத்திற்குமேல் பேசிக் கொண் டிருந்தேன். நான் முன்பு அனுப்பி வைத்த கேள்விகளுக்கே விடையளித்தார். பணப் பெருக்கம் இருந்தது; அல்லது அரசாங்கம் தனது தேவைப்படி நாணயம் அச்சடித்தது; பின் மக்களிடமிருந்து 'கட்டாய நன்கொடை' மூலம் எஞ்சியிருந்த வாங்கும் சக்தியைப் பெற்றுக் கொண்டது என்பதை நான் ஹன் சென் மறுத்தார். போன ஆண்டு என்னிடம் விலைக் கட்டுப்பாடு உளது என்ருர். இப்போது மறுத்தார். அவரது கூற்றிலிருந்து ஒரு விலைக் கட்டுப்பாடு திட்டம் உண்டு என்றும், மக்களிடமிருந்தே உற்பத்தி மூலம் தேசிய வருமானத்தின் மூன்றில் இரண்டு பகுதிகளை அரசாங்கம் பெற்றுவிட்டது என்றும் நான்

அறிந்து கொண்டேன். ஏறிய விலைகளும், வாழ்க்கை நடத்தத் தேவையான சக்தியும் சேர்ந்து அரசாங்கத்தின் அத் திட்டத்தை வெற்றிகரமாக்கியது. நாணயத்திற்கும் வாழ்க்கைச் செலவிற்கும் யாதொரு தொடர்பும் இல்லையென்பதும் தெளிவாயிற்று. பணமே அரசாங்கத்தின் சக்தி ; அது அரசாங்கத்தின் நோக்கத்திற்கேற்ப அச்சடிக்கப்பட்டது. அதற்கு மதிப்பும் அவ்வளவாக இருக்கவில்லை !

## 8. சீனப் பொருளாதாரம்

சீனப் பிரதம மந்திரி சூயென்லாய் கருத்துப்படி சீனப் பொருளாதாரம் ஐந்து பகுதிகளைக் கொண்டது; சமதர்மத் தன்மை யுடையது; அரசாங்கத் தலைமையின்கீழ் நடைபெறுவது. 'தாதுப் பொருள்கள் வழங்கல், விற்பனை, தொழிலாளர் நிலைமை, தொழிற் படைகள், பொது நிதித் திட்டங்கள் முதலானவற்றை அவற்றின் வலிமைக்கேற்ப ஒன்றுபடுத்தி ஒழுங்குபடுத்துவதே அரசாங்கத்தின் பணி'யாகும்.

இவ் வைந்து பகுதிகளில் ஒவ்வொன்றும் தனிப் பொருளாதார இயல்புடையது. அவையாவன: குடும்பப் பண்ணையும் எல்லாக் கைத்தொழில்களும்; தனிப்பட்ட முதலாளிகளின் தொழில்; அரசாங்க மூலதனமும், தனிப்பட்டோர் மூலதனமும் சேர்ந்த அரசாங்கத் தொழில்; கூட்டுறவுத் தொழில்; தேசியத் தொழில். கடைசியாகக் கூறப்பட்ட தேசியத் தொழிலில் ஜப்பான் போன்ற வெளிநாட்டு முதலாளிகளின் தொழிலும், அவர்கள் துரத்தப்பட்டவுடன் சேர்க்கப்பட்டுள்ளது. இவ்வாறாகக் கனரகத் தொழில்களில் 80 சத வீதமும், சிறிய தொழில்களில் 30 சத வீதமும் தேசிய மயமாக்கப்பட்டுள்ளன.

தனிப்பட்டோர் விவசாயமும் தொழிலும் உடன் இருந்து வருகின்றன. இந் நிலை, முன்னாள் பிரபுத்துவச் சீரவிற்கும், தூய சமதர்மச் சீரவிற்கு மிடையேயுள்ள தற்காலிக நிலை. 'புதிய ஜனநாயகம்' என்ற பத்திரிகையில் மா எழுதியுள்ளார்: "முதல் நிலை புதிய ஜனநாயகம். அடுத்தபடி சமதர்மம். முதற்படி நீண்டகாலம் செல்லும்." புதிய ஜனநாயகப் புரட்சியின் அரசியற் பொருளாதராத் தன்மையை விளக்கும்போது அவர் எழுதினர்:

"பொருளாதார ரீதியில், பெரிய முதலாளித்துவத் தொழில்களையும், ஏகாதிபத்தியவாதிகள், துரோகிகள், ஆதிக்கவாதிகள் ஆகியோரது பெரிய தொழில்கள் யாவற்றையும் தேசியமாக்கவும், பெருநிலப் பகுதிகளைப் பங்கிட்டு உழவர்களுக்கு வழங்கவும், அதே சமயத்தில் தனிப்பட்டோரின் சிறிய நடுத்தரத் தொழில்களை ஆதரிக்கவும், பெரிய விவசாயிகளின் பொருளாதாரத்தை

அழிக்காமல் இருக்கவும் சீனு முயல்கின்றது. இத்தகைய புதிய ஜனநாயகம் முதலாளித்துவத்தை அகற்றுகின்றது. அது போன்று சமதர்மத்திற்கு ஒரு புதிய வழிகாட்டியாகவும் அமைகின்றது.

லாபம் பெற அனுமதிக்கப்பட்ட தனிப்பட்டோர் உடைமைகள் கொண்ட கலப்புப் பொருளாதார நாடு கம்யூனிஸ்ட் சீனு என்று பார்ப்பவர்களுக்குத் தோன்றுகின்றது. தனிப்பட்ட முதலாளிகள் 15 சத வீதம் லாபம் பெறுவதையும், ஒன்றுபட்ட நிதிக் கம்பெனிகள் 8 சத வீதம் லாபம் பங்கிடுவதையும் அரசாங்கம் அனுமதிக்கின்றது எனக் கூறப்படுகின்றது. இது தவிர, லாபத்தில் பத்துச் சத வீதம் சேமிப்பாக வைக்க வேண்டுமெனச் சட்டம் வற்புறுத்துகின்றது. மீதியில் 60 சத வீதம் பங்குதாரர்களுக்குப் போனஸாக வழங்கப்படலாம். 15 சத வீதம் தொழிலாளர்களுக்குப் பயன்படுத்தப்படலாம். ஹெங்குயான் ஆலை ஒரு லாபம் தரும் தொழிலாகக் கூறப்படுகின்றது. விடுதலைக்கு முன்னர் அது கஷ்டமடைந்து, மூலதன மில்லாமல் சிதறியது என்றும் சொல்கின்றனர்.

ஆனுல், சீனுவிலுள்ள பிரிட்டிஷ் தொழிலதிபர்கள் தொழிலில் லாபம் இல்லை என்று உறுதியாகக் கூறுகின்றனர். துணிக்குத் தேவையிருக்கின்றது. ஆனுல், ஆலைகள் கஷ்டமடைகின்றன. ஏனெனில், அவை தங்கள் உற்பத்தியை அரசாங்கத்தினிடம் செலுத்திவிட்டு, அதற்கான செலவைப் பெறுகின்றன. லாபம் அரசாங்கத்திற்குச் செல்கின்றது. அப்படியே அரசாங்கம் விற்பதற்கு அனுமதியளித்த போதிலும், வாங்குகின்றவர்கள் கொஞ்சமாகவே வாங்குகின்றனர். அதனுல், உற்பத்தி தேங்கி விடுகின்றது. தனிப்பட்ட வணிகர்களிடம் வாங்குவாரில்லை. வாணிபம் அரசாங்கத்திடம் அல்லது கூட்டுறவுக் கடைகளிடம் சென்று விட்டது. நான் சென்ற நகரங்களில் அரசாங்க விற்பனை நிலையங்களில் மக்கள் குழுமி நிற்பதைப் பார்த்தேன். பிற கடைகளுக்கு யாரும் செல்லக் காணேன்; கடைகளில் விலை கட்டுப்படுத்தப்பட் டிருக்கின்றது. ஆனுல், வணிகர்கள் தங்கள் பொருட்களை மிகக் குறைந்த விலைக்கு வாங்குவோரின் வீடுகளில் கொண்டு சேர்க்கச் சித்தமாக இருக்கின்றனர்.

ஹெங்குயான் ஆலை அதன் சேமிப்பு நிதியிலிருந்து சியான் என்னுமிடத்தில் மற்ருெரு ஆலை கட்டத் தீர்மானித்துள்ளது. கட்டடம் கட்டப்பட்டது; யந்திரம் வாங்கப்பட்டது. ஆனல், நிர்வாகிகளுக்குச் சியானில்தொழில் திறமையாளர்களோ,தொழிலாளர்களோ கிடைக்கவில்லை. ஆனல், அவர்கள் கடற்கரையோரப் பகுதியிலிருந்து திறமையுள்ள தொழிலாளர்களைக் கொண்டு சென்ருல் அவர்களுக்குக் கூலி அதிகம் கொடுக்க வேண்டும். ஆகவே, பியன்சின் பொருளாதார - நிதிக் குழுவினரிடம் இத்தகைய குறையை எடுத்துக் கூறினர். குழுவினர் அத் தொழிற்சாலையை எடுத்துவிட முடிவு கட்டினர்கள்.

இது நிலச் சீர்திருத்தத்தால் ஏற்பட்ட விளைவு. உழவன் தனது நிலத்தை விட்டு விட்டு, கூலித் தொழிலாளியாக மாறுவதற்கு மனமில்லாதவனுக இருந்தான். ஆனல், கரையோரப் பகுதியில் நிலைமை வேறு விதமாக இருந்தது. அங்கே தலைக்கு 1·7 மோக்கள் நிலமே இருந்தது. ஆகவே, அங்கு வேலையில்லாமை அச்சுறுத்திக்கொண் டிருந்தது.

இதனிடையே அரசாங்க வாணிபம் விரைவாக அபிவிருத்தி செய்யப்பட்டது. ஏற்றுமதி இறக்குமதியில் பெரும்பான்மையும் அரசாங்கமே மேற்கொண்டது. உணவு தானியங்கள், நிலக்கரி, பருத்திப் பொருட்கள், உப்பு, சீனி, எஃகு, மரம், சிமின்ட் ஆகியவற்றின் மொத்த வாணிபத்தில் 40 முதல் 100 சத வீதம் அரசாங்க வாணிகக் கம்பெனிகளாலேயே நடத்தப்பட்டது. சில்லறை வாணிபத்திலும் 30 சத வீதம் அரசாங்கத்திடமும், கூட்டுறவுச் சங்கங்களிடமும் இருந்தது. பல பெரிய தொழிற்சாலைகள் தங்களுடைய முழு உற்பத்தியையும் அரசாங்கத்திற்கே விற்பதாக ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளன.

சீனப் பொருளாதாரம் கலப்புப் பொருளாதார மன்று; அரசாங்க நோக்கத்திற்குப் பணிந்து நடக்கும் முறையில், தனிப்பட்ட தொழில் கட்டுப்படுத்தப்பட்டு, ஒழுங்கு படுத்தப்பட் டிருக்கின்றது. உற்பத்தியையும் மூலப் பொருட்களையும் கட்டுப்படுத்தியும், ரொக்கமாகவும் கடனகவும் பணம் வைத்திருத்தலை வரையறுத்தும், தொழிலுக்கும் வாணிபத்திற்கும் வரி விதித்தும், லாபம் வழங்குதலை ஒழுங்குபடுத்தியும் விளங்கும் தனிப்பட்ட

நிறுவனங்கள் அரசாங்கத்தின் குத்தகையாளர் போல் கருதப்படு கின்றன. பொருட்களை மொத்தமாக வாங்குவதாலும், சிறிய வாணிபத்தையும் நடத்துவதாலும், அரசாங்கத்திற்கு விலையைக் கட்டுப்படுத்தும் வன்மை யிருக்கின்றது. அதனால் அது விலையை நிர்ணயிக்கின்றது.

தனிப்பட்டோர் வாணிபம் குறுகி வருகின்றது. பொதுத் திட்டத்தின் 31-வது பிரிவில் இது பற்றிக் கூறப்பட்டுள்ளது. தேவைப்படும்போது, முடிந்தவரையில் தனிப்பட்டோர் மூல தனம், அரசாங்க மூலதனமாக அபிவிருத்தி யடைவதற்கு ஊக்க மளிக்கப்படும். அதனால், தேச உடைமை நிறுவனங்கள் தோற்றுவிக்கப்பட்டு, தேசிய உடைமைச் செல்வங்கள் பயன் படுத்தப்படும்.

சான்பான்வுபான் இயக்கங்களால் தனிப்பட்ட வணிகர்கள் பெரிதும் பாதிக்கப்பட்டனர். அவர்களது சேமிப்பு பறிக்கப் பட்டது. சிறிது கடன் வசதியுடன், லாபம் ஏதுமின்றி அவர்கள் சிறிய வணிகர்களாகத் தேய்ந்து வருகின்றனர். அரசாங்கத்தின் கணக்குப்படி 'அபிவிருத்தியடையும்' தனிப்பட்ட நிறுவனங் களின் இம் மாறுதல் சீனா முழுவதும் காணப்படுகின்றது. மாசேதுங், தேசியப் பிரபுக்களை, 'எஞ்சிய ஆதிக்க வர்க்கம்' என்று அழைக்கின்றார். 'சமதர்மத்தை உணரும் காலத்தில்' அவர் கள் மக்கள் படை, போலீஸ், நீதி மன்றங்கள் ஆகியவற்றால் கல்வி போதிக்கப்பட்டுத் திருத்தப்படுவார்கள். 'விடுதலை' பெற்ற இரண்டாண்டுகளுக்குள் பிரபுக்கள் ஒழிக்கப்படவேண்டும் என்ற பொதுவுடைமைத் தத்துவம் மாவிற்கு வழிகாட்டுகின்றது. மாவின் பொருளாதாரத் திட்டம் செயல் முறையில் போய்க்கொண் டிருக்கின்றது.

மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்குச் சீனா ஐந்தாண்டுத் திட்டம் ஒன்றை அறிவித்துள்ளது. அதன்படி கன ரகத் தொழில்கள் அபிவிருத்தி செய்யப்பட்டு, யந்திரத் தின் மூலம் விவசாயம் நடத்தப்படும். ஆனால், நான் பார்த்த வற்றிலிருந்து, வெளிநாட்டின் உதவியின்றி, சீனாவில் தொழில் திறமையும் மூலதனச் சேமிப்பும் இல்லையென்பது தெளிவாயிற்று.

சீனுவில் வாழ்க்கைத்தரம் நிலைபெற வேண்டும். பெரும்பான்மையும் அது மக்கள் தேவைக்கும் குறைவாகவே இருக்கின்றது. ஆனுல், மக்களுக்கு வேலை, மூலதனம், தொழில் திறன், எல்லாவற்றிற்கும் மேலாக எத் தியாகத்தையும் செய்யச் சித்தமாக இருக்கும் மக்களின் உள்ளம் யாவற்றையும் சீனு பெற்றுள்ளது. சர்வாதிகாரம் மக்கள் மீது பல சுமைகளை ஏற்ற முடியும். என்ருலும்,அது மக்களின் அன்ருட வாழ்க்கையில் ஏதேனும் சில நன்மைகளை வழங்கவேண்டும்; அவர்கள் வாழ்க்கைத் தரத்தை வளர்க்க வேண்டும். தங்களது அற்புத சாதனைகளைப் பற்றிய அறிவிப்புக்களை அவர்கள் கேட்கின்றனர். அவர்கள் மனத்தில் தோன்றும் சில துயரங்களிலிருந்து அவர்களது கவனத்தைத் திருப்ப ஒரு பகைவனைக் காட்டவேண்டிய திருக்கின்றது. சுதந்தர மக்கள், தாங்களாகவே தியாகம் செய்ய முன்வரும்போதுதான், ஒத்துழைக்கும் எதிர்காலத்தைத் தோற்றுவிக்க முடியும்.

ஆசியாவின் அபிவிருத்தியடையாத நாடுகளில் அரசாங்கம் நல்ல எதிர்கால நம்பிக்கையை ஊட்டி மக்களை மேலும் இன்னலுக்கு ஆளாக்க முடியாது. மக்களின் துயரங்களைப் போக்க அந் நாடுகள் தங்கள் செல்வத்தை ஒன்று திரட்டி, அமைதியுடனும் நட்புடனும் மனமுவந்து ஒத்துழைத்தாலன்றி, அம் மக்களால் அபிவிருத்தியடைந்து பொருளாதார நலம் பெற முடியாது. ஆசிய நாடுகளிடம் சேமிப்போ, கருவியோ இல்லையாதலால் அவற்றிற்கும் பிற நாட்டு உதவி தேவை.

கம்யூனிஸ்டு சீனு இன்னெரு பாதையில் செல்ல எண்ணுகின்றது. தற்காலம் சீனுவின் சர்வாதிகாரம், வரவிற்கு மிஞ்சும் செலவாலும், இயன்றவரை மக்களிடமிருந்து பெறும் வரியாலும், தனது பெரிய நிர்வாகத்தையும், படையையும் நடத்தி, நொறுங்கிய பொருளாதாரத்தையும் செப்பனிடுகின்றது. ஆனுல், எளிய - வற்புறுத்தப்பட்ட - தொழிலாளர்களால் ஹூவாயில் ஆரம்பப் பணிகள்தாம் செய்ய முடியும். அதனுல் நிலத்தை விரும்பும் மக்கள் தொகையைக் குறைக்க முடியாது; தங்களது சிறு உடைமையைப் பயந்து காத்துநிற்கும் உழவனின் பிரச்சினையைத் தீர்க்க முடியாது; அவர்களுக்கு வேலை கொடுத்து, தொழிலையும் அபிவிருத்தி செய்ய முடியாது.

உழவர்களின் மனத்தில் எழும் சந்தேகங்களைப் பிரசாரத்தால் மாய்த்துவிடச் சீனு எண்ணுகின்றது. அமெரிக்கா அதன் புதிய பகைவன். சீனு, எளிய மக்களின் வெறுப்பைத் தூண்டிவிட்டு அவர்களது கவனத்தைத் திருப்புகின்றது. தனியுடைமை, அமைதியையும் இன்பத்தையும் விரும்பும் தனிக் 'கலகக்காரன்,' அல்லது நிலத்தை வைத்திருக்க விரும்பும் உழவன் — இவர்களுக்கு எதிராக இயக்கம் தொடங்கப்படலாம். ஆனுல், துன்பத்தைப் பொறுக்கும் மனிதனுக்கும் ஓர் எல்லையுண்டு. தங்களது சுதந்தரத்தை மீண்டும் நிலைநாட்டச் சீன மக்கள் எழுவார்களா? அல்லது அவர்களது உடைந்த நம்பிக்கையை மறக்கச் செய்யும் பொருட்டு, அவர்களது 'ஜனநாயக சர்வாதிகாரம்' அவர்களைத் தென் கிழக்கு ஆசியாவில் ஏவுமா? பொதுவுடைமைச் சீனு கடைசியாகத் தென் கிழக்கு ஆசியாவில் வசிக்கும் சீனர்களைத் தங்கள்பால் நண்பராக்க முயலும் என நான் நம்புகின்றேன்.



# ஆழ்ந்த அமைதி

## 1. மதி மயக்கம்

பொதுவுடைமைத் தத்துவத்தை அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டும். அது பற்றி வினு வெழுப்புதல் கூடாது. மதி மயக்குதல் என்பது, சிந்தனையைக் கட்டுப்படுத்தும் பொது உடைமைக் கொள்கையில் முக்கியமான பகுதி; எல்லா ஐயங்களையும் எழுப்புதல்; அறிவுச் சுனையை அகழ்தல்; எப்பொருளிலும் மெய்ப்பொருள் காணும் தனி உரிமை. ஆகவே, பொதுவுடைமைச் சீனு கல்வியைக் கட்டுப்படுத்தும் என்பது எதிர்பார்க்கக் கூடியதே. பொதுத் திட்டத்தில்* வகுக்கப்பட்டுள்ளது, 'புரட்சிகரமான தேசிய ஆக்கற் பணி நிறைவேற எங்கும் கல்வி பரப்பப்படும்' என்பதாகும். புதிய புரட்சியின் நோக்கங்களை நிறைவேற்றுதற்குக் கல்வி ஒரு வழியாகும்.

அப் பணி மகத்தானது; சீன மக்களின் பழைமைக் குணத்தையே மாற்றுவது. சகிப்புத் தன்மை யின்மையையும், கொடுமையையும் வெறுக்கும் வாழ்க்கைத் தத்துவத்தைப் பல நூற்றுண்டுகளாகக் கைக்கொண்டவர்கள் சீன மக்கள். தனியுடைமை அறிவுடன் கலந்து வாழ்க்கையில் மலர்ந்துள்ளது. ஆழ்ந்த கல்வி,

* பிற்சேர்க்கை காண்க.

எளிய வாழ்க்கை, தம் மினத்தாரைத் தெரிதல் ஆகியவற்றின் உருவே சீன அறிஞன். எத்தகைய கொள்கையும் அங்குத் திணிக்கப்பட்டதில்லை. புத்தரின் பண்பட்ட துறவி முகத்தில் கூட அமைதியான அருள் மறைந்து, புன்னகையும் கருணையும் மலர்ந்துள்ளன. புதிய சீனாவில் வெறியூட்டப்பட்டுள்ளது; கொடுமையும் இன்னலும் குடிகொண் டுள்ளன.

ஷாங்காயில் திருமதி சன்யாட்ஸன் நடத்தி வரும் பள்ளியில் நான் இக் கொடுமையைப் பார்த்தேன். மூன்று முதல் ஏழு வயதுள்ள குழந்தைகள் இருநூறுக்குமேல் அங்கிருந்தன. இந்தியக் குழுவினர் அப் பள்ளியைக்காண அழைத்துச் செல்லப் பட்டனர். திருமதி சன்யாட்ஸன் தனது முழு உழைப்பையும் சமூகப் பணிக்கே நல்கியுள்ளார்கள். எங்களுக்குக் குழந்தைகளின் பல விளையாட்டுக்கள் காட்டப்பட்டன. மக்கள் விடுதலைப் படையினர் போன்று அவர்கள் அணிவகுத்து நடந்தார்கள். அவர்களது துப்பாக்கிகள் 'அமெரிக்க விமான'த்தை நோக்கியிருந்தன. வெறுப்பதற்கும் கொல்லுவதற்கும் அவர்கள் கற்றிருந்தனர். வகுப்பில் ஐந்து வித அன்பு கற்பிக்கப்படுகின்றது: தந்தையர் நாட்டு அன்பு, மக்கள்மீது அன்பு, உழைப்பில் அன்பு, விஞ்ஞானத்தில் அன்பு, பொதுச் சொத்து பாது காத்தல் ஆகியவை. பெற்றோரிடமோ, குடும்பத்தினிடமோ அன்பு இல்லை. அக் குழந்தைகட்கு அது கற்பிக்கப்படவில்லை. அக் குழந்தைகள் எங்களைக் கட்டிக் கொண்டனர்; தழுவி முத்தமிட விரும்பினர். சில குழந்தைகளை எடுத்துத் தட்டிக் கொடுத்த போது அவர்கள் கண்களில் நீர் வெளிப்பட்டது. கொடுமையின் தன்மையை நான் உணர்ந்து கொண்டேன்.

எங்களைச் சுற்றிக் குழுமிய குழந்தைகளிடையிலும், சிறிது பாசத்தையும், நட்பையும், மக்கட் பண்பையும் விரும்பும் ஆண் பெண்களின் முகத்திலும் நான் பலமுறை அத் துயர் கண்டேன். நட்புத் தவழும் உள்ளத்தைப் புதிய சீனாவில் நான் கண்டதில்லை. 'வறுமையினிடையிலும் சிரிக்கும் சீனர்கள்' என்று அவர்களுடன் பல ஆண்டுகள் வாழ்ந்தவர் கூறக் கேட்டிருக்கின்றேன். இப்பொழுது முகங்களில் கடுமையும் கவலையும் காணப்படுகின்றன. புதிய ஜனநாயகத்தில் சீனக் குழந்தையின் அழுகையைக் கோபத்தின் குரல்' என ஒரு நண்பர் விளக்கினார்.

திருமதி ஸன்னின் குழந்தைப் பள்ளியில் அவர்கள் தொட்டிலிலேயே கம்யூனிஸத்தைக் கற்றனர். கல்வி முறைகளை அறிந்து கொள்ள நான் விரும்பினேன். ஏனெனில், மக்களின் சேவை உணர்ச்சியை வளர்க்கும் தேசியக் கல்வி போதிக்கப்படுகின்றதெனக் கூறுகின்றனர். ஆகவே, நடுநிலைப் பள்ளிகளுக்கும், பல்கலைக் கழகங்களுக்கும், தொழிலாளர் - உழவர் நடுநிலைப் பள்ளிகளுக்கும், மக்கள் பல்கலைக் கழகங்களுக்கும் நான் சென்றேன்.

பீகிங்கிலுள்ள எட்டாவது நடுநிலைப் பள்ளியில் தொள்ளாயிரம் மாணவர் பயின்றனர். தொழிலாளர்-உழவர் மைந்தர்களுடன் உதவிப்பிரதமர் குவோமோஜோவின் மைந்தனு மிருந்தான். பழைய புத்தகங்கள், பாட முறைகள் யாவும் அகற்றப்பட்டு விட்டன. ஏனெனில், அப் பள்ளி 'மக்களின் நலனுக்காக'ப் பணியாற்றியது; சோவியத் முறையே கையாளப்பட்டது. சிறுவர் யாவரும் இளைஞர் சங்கத்தில் உறுப்பினர்கள். அவர்கள் அரசியல் நடவடிக்கைகளில் கலந்து கொண்டனர்.

ஒரு வகுப்பில் எங்களுடனிருந்த நண்பர் ஒரு கேள்வி கேட்டார்: " சோவியத் ருஷ்யா சீனவைத் தாக்கினல் நீங்கள் என்ன செய்வீர்கள் ?"

" அது ஒரு போதும் நடக்காது " என்று ஒரு பையன் பதிலளித்தான்.

" கன்பூசியஸ் யார் ?"

" அவர் இக் காலத்திற்கு ஒவ்வாத பிரபுக்களின் தத்துவ ஞானி " என்ருன்.

உழவர்களுக்கும் தொழிலாளர்களுக்கும், ஆறு ஆண்டின் நடுநிலைப் பள்ளிப் படிப்பு மூன்று ஆண்டுகளாகக் குறைக்கப் பட்டிருக்கின்றது. புரட்சியில் கலந்து கொண்ட தொழிலாளர்களுக்கும் உழவர்களுக்கும் சீனவில் நாற்பது பள்ளிகள் உள்ளன. அவற்றில் பதினையாயிரம் பேர் படிக்கின்றனர். கட்சி ஒழுக்கம் பற்றியும், கிராம ஆட்சி பற்றியும் அவர்களது கல்வி அமைந்திருந்தது. எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டதும் அவர்களுக்கு மார்க்ஸிசம், பௌதிகம், ரசாயனம், புரட்சி வரலாறு ஆகியவை கற்பிக்கப்படுகின்றன. அவர்கள் சிறிய அறைகளில்

தங்கியிருக்கின்றனர். 'ஒருவர் சிந்தனை'மேல் மற்றவர்கள் கவனமாக இருக்கவேண்டும் என எதிர்பார்க்கப்படுகின்றது. ஆயிரம் வார்த்தைகள் எழுதத் தெரிந்துகொண்டதும் அவர்கள் அன்றாடமும் நாட் குறிப்பு எழுத வேண்டும். அதில் தங்கள் எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் குறிப்பிட வேண்டும். அந் நாட் குறிப்புக்கள் கூட்ட விவாதத்தின்போது பரிசீலனை செய்யப்பட்டன. தவறான கருத்துக்கள் 'திருத்தப்படும்.' இவ்வாறாக, மதி மயக்கம் தொடங்குகின்றது.

1951 அக்டோபர் 23-இல், மக்கள் அரசியல் ஆலோசனைக் குழுவில் பேசும்பொழுது மா குறிப்பிட்டார்: "பல தரப்பட்ட அறிவையுடைய மக்களின் கொள்கைகளை மாற்றுதல், ஜனநாயகச் சீர்திருத்தங்களைக் கொண்டு வருவதற்கு இன்றியமையாதது." இம் மாற்றம் ஐந்து படிகளை யுடையது. முதற்படி, பிறர் குறை காணலும், தன் குறை காணலும். சூயென்லாய் தன்னைக் கொண்டே இதனைத் தொடங்கினார். இரண்டாவது படி, நண்பர்களையும், பகைவர்களையும் தெரிந்து கொள்ளுதல்; ஆதிக்கக் கருத்துக்களை வேறுபடுத்தி அதனை வேருடன் களைதல். இப்படியைத் தொடங்கி வைத்தவர் பீகிங் நகர சபைத் தலைவர் திரு. பெங்சென். அவர் நிலச் சீர்திருத்தம், கோமிண்டாங் உளவாளிகள், அமெரிக்க ஏகாதிபத்தியம் ஆகியவை பற்றிப் பேசினார். மூன்றாவது நான்காவது படிகள், மாசேதுங்கின் பொதுவுடைமைச் சிந்தனைகளும், சீனப் பொருளாதார அமைப்பும் பற்றியவை. கடைசியாக ஒவ்வொருவரும் தன்னுடைய சொந்தக் கருத்தைத் தெரிவிக்க வேண்டும். அது பரிசோதிக்கப்படும்.

இம் முறையால் பேராசிரியர்கள், எழுத்தாளர்கள், பிற சிந்தனையாளர்கள் தங்கள் கருத்தைத் திருத்திக் கொண்டனர். ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் பயின்ற கல்வியை மறக்க முயன்றுகொண் டிருந்த பொருளாதாரப் பேராசிரியர் ஒருவரை நான் சந்தித்தேன். ஸின்ஹுவா பல்கலைக் கழகத்துத் தத்துவப் பேராசிரியர்களான டாக்டர் பாங், டாக்டர் லிங் இருவரும் 'பழைய சீனத் தத்துவம் காலத்திற் கொவ்வாப் பிரபுக்கள் தத்துவம்' எனக் கூறுகின்றனர். அவர்கள் எழுதியவற்றையெல்லாம் அவர்களே பழிக்கின்றனர். இன்று பொதுவுடைமை லோகாயதத் தத்துவத்தைப் பயின்று வருகின்றனர்.

கவிஞரும் வரலாற்று ஆசிரியருமான சீன உதவிப் பிரதமர் குவோமோஜோ, என்னுடைய கேள்வி ஒன்றிற்குப் பதிலளித்தார் : "பெரும்பான்மை மக்களான தொழிலாளர், உழவர், படைவீரர் ஆகியோரது நலன்களுக்குப் புரியும் எழுத்தாளர் சுதந்தரம் சீனுவில் உண்டு."

மக்கள் பல்கலைக் கழகத்தில்தான் இம் மதி மயக்குதல் பெரும் அளவில் நடைபெறுகின்றது. பல்கலைக் கழகத்தின் தலைவர் வுயுசாங் பொதுவுடைமைக் கட்சியின் செயற்குழு உறுப்பினரில் ஒருவர். அப் பல்கலைக் கழகம் 1950-இல் நிறுவப்பட்டது. அங்குப் பயிலும் 2800 மாணவர்களில் 2000 பேர் சீனப் படையைச் சார்ந்தவர்கள். அவர்களது பண்பாடு குறைந்த தரத்திலிருந்ததால், அவர்கள் ஓராண்டுப் படிப்பிற்காக அங்கு வந்திருந்தனர். சீனுவில் பண்பாடு என்றால், மார்க்ஸிசம். அப் படையினருக்கு இக் கொள்கையில் பற்றுதல் குறைவாக இருந்தமையால் அவர்கள் அங்கு இருந்தனர். அங்கிருந்த இரண்டாயிரம் மாணவர்களில் 71·7 சத வீதம் பேர் மூன்று முதல் ஏழு ஆண்டுகள் வரை அரசாங்கத்தில் வேலை பார்த்தவர்கள். அவர்கள் கோமிண்டாங் ஆட்சியில் வேலை செய்து, இப்போதும் தொடர்ந்து வேலையில் இருப்பவர்கள்; அல்லது போர் காரணமாகப் படிப்பை நிறுத்தியவர்கள். மீதியுள்ளவர்களில் 22 சத வீதம் பேர் சிந்தனையாளர்கள். ஏனையோர் தொழிலாளர்கள்.

குறுகிய காலப் பயிற்சி யென்பது தத்துவக் கல்வியும், உற்பத்தித் தொழிலும் ஆகும். பொருளாதாரம், நிதி, வங்கித் தொழில், வாணிபம், கூட்டுறவு, தொழிற்சாலை நிர்வாகம், அரசியல் ஆகியவை கற்பிக்கப்படுகின்றன. ஆனால், அவர்கள் காலத்தில் எழுபது சதமானமும் உற்பத்திச் செய்கை மூலம் பயிற்றுவிக்கப்படுகின்றது. முழு நேர மாணவர்கள் மேற்கூறிய பொருட்களுடன் பொருளாதாரத் திட்டம் வகுத்தல், சட்டம், ருஷ்ய மொழி ஆகியவற்றையும் கற்கின்றனர். பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சிப் பயிற்சிக் குழு புதிதாக ஏற்படுத்தப்பட்டுள்ளது. அது போன்று முப்பத்தேழு குழுக்கள் உள்ளன. பயிற்சித் திட்டத்தின் பயனைப் பரிசோதித்தலும், பயிற்சி முறை, மார்க்ஸிஸம், மயோயிஸம் ஆகியவற்றை ஆராய்தலும், சிப்பந்திகளைக் கவனித்தலும் அக் குழுக்களின் வேலைகள். இக் குழுக்கள்

தாம் மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கு மிடையே இணைப்பு ஏற்படுத்துகின்றன.

நாம் பல்கலைக் கழகம் சென்றதும், வழக்கம்போல் மாதிரிகளாகக் காட்டப்படும் சில மாணவர்களைத் தவிர வேறு யாரையும் காண முடியாது. மக்கள் விடுதலைப் படையிலிருந்து, பின்னர் ஜப்பானியரால் பிடித்துக்கொண்டு போகப்பட்ட ஒரு பதினேழு வய்து விவசாய மாணவனைக் கண்டேன். மற்றொருவன் நிலக்கரிச் சுரங்கத்தில் வேலை செய்பவனுடைய மகன். அவன் தொழிற் சங்கத்தின் செயற்குழு உறுப்பினன். அவன் மாதிரித் தொழிலாளியாக இருந்தான். அப்பொழுது அவன் மக்கள் அரசியல் ஆலோசனைக் குழுவில் அங்கம் வகித்தான். மாணவர் பணிகள் கண்காட்சியாகக் காட்டப்பட்டன. அவற்றுள் அவர்களது நாட் குறிப்புகளு மிருந்தன. அவர்கள் தங்கள் நாட் குறிப்புக்களை வகுப்பிற்கு எடுத்துச் செல்லும்போதும், அவை விவாதிக்கப்படும்போதும் அவர்களுக்குண்டாகும் அச்சத்தை எளிதில் ஊகித்துக் கொள்ளலாம். மாணவர்கள் தங்கும் அறையும் பக்கத்திலேயே இருந்தது. ஒவ்வொருவரும் மற்றவரின் கவனத்தில் இருந்தனர்.

தலைவர் வு, அங்கு ஆசிரியர்கள், பயிற்சிக் கருவிகள், நூற்கள் முதலியன குறைவு என்பதை ஒப்புக் கொண்டார். பழைய புத்தகங்கள் யாவும் அழிக்கப்பட்டன. மாணவர்கள் வகுப்புக்களில் தாங்கள் எடுத்துக் கொண்ட குறிப்புக்களைப் படித்தனர். ருஷ்யாவில் பயிற்சி பெற்ற பேராசிரியர்களும், ஆசிரியர்களும் படிப்புக் குறிப்புக்கள் எழுதி வைத்திருந்தனர். அக் குறிப்புக்களே நாடு முழுவதிலு முள்ள பல்கலைக் கழகங்களில் வழங்கப்பட்டன. ஆசிரியர்களும், பேராசிரியர்களும் 'சிந்தனை மறுமலர்ச்சி' பெற்றவர்கள். உலகத்தின் பல பாகங்களிலும் பயின்ற அவ் வாசிரியர்கள் தாங்கள் கற்றவற்றை மறக்க முயன்றனர். பள்ளிப் படிப்பு சிறப்பாகக் கருதப்படுவதில்லை. கட்சியின் மதிப்பைப் பெற்றவர்களே கல்வியை வகுத்தனர். முக்டனிலுள்ள மருத்துவக் கல்லூரியின் தலைவர், முப்பத்தைந்து வயது நிரம்பிய இளைஞர். அவர் தமது கல்வியைக் கூட முழுவதும் படிக்கவில்லை. 'விடுதலைப் போர்க் காலத்தில் வெளிநாட்டு நண்பர்களின் மேற்பார்வையில்' அவர் மருத்துவம் பயின்றார்.

நான் பீகிங்கில் சிங்குவா, எஞ்சிங், பீகிங் தேசியப் பல்கலைக் கழகங்களைப் பார்த்தேன். தியன்ஸ்டீனில் நங்காய்ப் பல்கலைக் கழகத்தையும், நாங்கிங்கில் நாங்கிங் பல்கலைக் கழகத்தையும் பார்வையிட்டேன். சீனு இளைஞர்மீதே கவனம்செலுத்துகின்றது. ஏனெனில், நாட்டில் வளர்ந்து வரும் நிர்வாகத்தை நடத்துவதற்கும், அதன் அபிவிருத்திக்கு விஞ்ஞான-தொழில் நுட்பத் தொழிலாளர்களை நல்குவதற்கும் தக்க ஆட்கள் தேவை. இப் பல்கலைக் கழகங்கள் ஒரு காலத்தில் தூய முற்போக்குச் சிந்தனைக் கருவூலங்களாக இருந்தன; ஏகாதிபத்தியத்திற்கு எதிராகத் தோன்றிய மே நான்காம் நாள் இயக்கத்தையும் வளர்த்தன. இன்று இளைஞரின் அணிவகுப்பு காலை முதல் மாலை நெடு நேரம் வரையிலும் நடைபெறுகின்றது. முரசின் ஒலியும், ஜாலரின் ஓசையும் கேட்கின்றன. அவை அமெரிக்காமீது வெறுப்பையும், ஏகாதிகாரப் புதிய சீனுமீது நேசத்தையும் பறைசாற்றுகின்றன.

சான்பான்வுபான், கொரிய உதவி, அமெரிக்க எதிர்ப்பு இயக்கங்களின்போது, இளைஞர் சங்கத் தலைவர்களுடன், மாணவர்களுக்குப் புதிய சீனுவின் தத்துவமும் செயலும் கற்பிக்கப் பட்டன. நான்கு மாதங்கள் கல்லூரிகளும், பல்கலைக் கழகங்களும் மூடப்பட்டன. அப்போது மாணவர்களும் பேராசிரியர்களும் விவாதித்து, ஒருவர் குறைகளை மற்றவர் எடுத்துக் காட்டினர். சில சமயம் குறைகளை ஒப்புக்கொண்டு திருந்தினர்கள். கட்டுரை எழுதுவதற்குப் பிற்போக்கான பொருளைக் கொடுத்ததற்காக ஒரு வெளிநாட்டுப் பேராசிரியர் மாணவர்களால் இகழப்பட்டார். அதைவிடக் கிருமிப் போராட்டம் பற்றிக் கட்டுரை எழுதலாமென அவர்கள் வற்புறுத்தினர்.

நாங்கிங்கில் ஒரு பெண்கள் கல்லூரியில் திருமதி வு ஒரு பேராசிரியர். அவர் அழகும் அறிவும் திறமையு முடையவர். எங்கள் நண்பரொருவர் அவருக்கு அறிமுகக் கடிதம் வைத்திருந்தார். நாங்கிங் சென்றபோது நாங்கள் அவரைப் பார்க்க முயன்றோம். அவர் கல்லூரியினின்றும் வற்புறுத்தி விலக்கப்பட்டார் என்று கூறப்பட்டது. ஷாங்காய் சென்றிருப்பதாகவும் சொன்னார்கள். ஒரு வேளை அவர் இம் மதி மயக்கத்தில் மூழ்க மறுத்திருக்கலாம்! ஷாங்காயில் நாங்கள் அவ் அம்மையாரைக் காண முயன்றோம். டெலிபோனில் அழைத்தோம். ஒரு மாது பயந்த

குரலில் கலக்கத்துடன் பேசினர். அதுவும் சீக்கிரத்தில் முடிக்கப் பட்டது. சில தினங்கள் கழிந்ததும் அவர் தற்கொலே செய்து கொண்டதாக அறிந்தேன்.

ஓர் இயற்கை நூல் பேராசிரியரும் அதே கதியை அடைந்த தாகத் தெரிகின்றது. அவர் வேருெரு கல்லூரியிலும் பாடம் நடத்தினர்; அதற்குச் சம்பளமும் பெற்ருர். இதுதான் அவர் செய்த குற்றம். 1952 ஏப்பிரல் 19-இல் தியன்ஸ்டீனிலுள்ள ஒரு நாள் செய்தித் தாள் அவரைக் 'கள்வன்' என்று குறிப்பிட்டது. அதில் எழுதப்பட்டிருந்ததாவது: "நமது இளைஞர்களைப் பின் தங்கச் செய்வது தவிர அப் பேராசிரியரால் வேறு என்ன செய்ய இயலும்? நேர்மையுள்ள எல்லா மக்களும், மக்களுக்குச் சேவை செய்ய விரும்பும் எல்லாத் தொண்டர்களும், தத்துவப் புனரமைப்பில் ஆர்வம் காட்டி, ஊழல் மலிந்த பிரபுக்கள் தத்து வங்களை எதிர்க்க வேண்டும்."

கல்லூரிகளிலும், பள்ளிக்கூடங்களிலும் படிப்பு மார்க்ஸிசத் தில் ஆரம்பித்து, மயோயிசத்தில் முடிகின்றது. நாடு முழுவதும் அரசாங்க அலுவலகங்களிலும், முக்கியமான பதவிகளிலும் இளைஞர்களே இருப்பதைக் கண்டேன். கல்வி முற்றுப் பெறு முன்பே அவர்கள் அரசாங்க அலுவல்களில் நுழைந்து விட்டனர். ஒருவன் எஞ்சினியராக விரும்புகிருனு, டாக்டராக வர எண்ணுகிருனு, பேராசிரியராக விளங்க நினைக்கின்ருனு என்பதைப் பற்றிக் கவலையில்லை. படித்தவர்கள் என்றழைக்கப் பட்ட மக்களுடைய தொண்டு சீனுவிற்குத் தேவை. கல்வி என்ற வாய்ப்பு ஒரு சிலருக்கே கிட்டும். சீனுவில் இன்று 135,000 மாணவர்கள் எல்லாப் பல்கலைக் கழகத்திலும் பயின்று வருகின்றனர். அடுத்த வருடம் 150,000 மாணவர்களுக்கு இட வசதி செய்யப்படுமென நம்பப்படுகின்றது.

கோமிண்டாங் ஆட்சிக் காலத்தைப் போன்று, கல்லூரி யிலும் பள்ளியிலும் இலவசமாகவே கல்வி கற்பிக்கப்படுகின் றது. பல்கலைக் கழகங்களில் பயிலும் வாய்ப்பைப் பெற்றவர் கள் மத்திய இணைப்பு அதிகாரியால் நாட்டின் பல விடங்களுக்கும் பிரித்து அனுப்பப்படுகின்றனர். கல்வியின் தரமும் குறைவே. விவசாயத்தில் அல்லது தொழிலில் எழும் அன்ருடப் பிரச்சினை

களுக்குத் தக்கவாறு, விஞ்ஞானக் கல்வி அல்லது தொழில் நுட்பக் கல்வி வரையறுக்கப்பட் டிருக்கின்றது. திறமை வாய்ந்த விஞ்ஞானிகள் அண்மையில் கிடைக்கும்| மூலப் பொருட்களி லிருந்து 'டி. டி. டி.' போன்றவற்றை உற்பத்திசெய்வது பற்றிப் பரிசோதனை நடத்துகின்றனர். புகழ் பெற்ற வல்லுநர்கள் சீன மொழியில் விஞ்ஞானச் சொற்களைக் கண்டு பிடிக்க முயல் கின்றனர்.

என்றாலும், சிங்கியாங் என்னுமிடத்தில் அணு விஞ்ஞான ஆராய்ச்சி செய்யப்படுவதாகக் கூறுகின்றனர். இத்தாலியில் இருக்கும்போது ஓடிப் போன பிரிட்டிஷ் அணு விஞ்ஞானி டாக்டர் புரூனே பான்டக்கார்வோ சீனாவில் பணியாற்றுவதாக வதந்தி உலவுகின்றது. காண்டனில் நடைபெற்ற இயற்கை வனப் பொருட் காட்சியில் ஓர் உரேனியக் கல் துண்டு வைக்கப் பட் டிருந்தது. ஆராய்ச்சி, கண்டு பிடிப்பு, கல்வி, விஞ்ஞான அறிவு ஆகியவற்றைப் பற்றிய பேச்சுக்குச் சீனாவில் இடமில்லை. ஏனெனில், அங்கு உண்மைக் கல்வி இல்லை. பொதுவுடைமை யின் பெரு வெற்றிக்கு இளைஞரது பணிவும், கொள்கைப் பற்று தலுமே தேவை.

எங்களுடைய பெண் மொழிபெயர்ப்பாளருள் ஒருவர் நியூயார்க்கிலுள்ள கொலம்பியா பல்கலைக் கழகத்தில் பயின்றவர். பல நாட்களுக்குப் பின்பே நாங்கள் அவர் வெளிநாட்டில் படித்த வர் என அறிந்து கொண்டோம். அறிந்ததும், நாங்கள் அவரிடம், "அமெரிக்காவில் இருந்தபொழுது எத்தனை மகிழ்ச்சியுடன் இருந்தீர்கள்?" என்று கேட்டோம். "நான் அந்த ஒவ்வொரு நிமிடத்தையும் வெறுக்கின்றேன்" என்று பதிலளித்தார். அவரது பெற்றோர் நாங்கிங்கில் இருப்பதாக நாங்கள் அறிந் தோம். ஓர் ஆண்டிற்கு மேலாக அவர் அவர்களைப் பார்க்கவில்லை. நாங்கள் அங்குச் சென்றதும் திருமதி பண்டிட், அவர் தன் பெற் றோரைப் பார்த்து வரட்டு மெனச் சொன்னார்.

திருமதி பண்டிட், தான் அந்த விடுதியை விட்டுச் செல்ல வில்லை என்று உறுதி கூறியும், அவர் பண்டிட்டைத் தனியாக விட்டுச் செல்ல மறுத்து விட்டார்.

வெளிநாட்டு அலுவலகத்திலிருந்தும், பிற மொழிகள் கற்பிக்கும் நிலையங்களிலிருந்தும், தூதுக் குழுவினருடன் வந்த இளம் ஆண் - பெண் மொழிபெயர்ப்பாளர்களின் முகங்களில் முறுவல் தவழும் நட்பு வெளிப்பட்டதில்லை ! ஒரே ஒருவர் மட்டும், நாங்கள் அவருடன் ஆறு வாரங்கள் பழகிய பின் சிறிது அன்பைக் காட்டினர். நாங்கள் பிரிந்த நாளன்று எங்களைச் சுற்றிச் சுற்றி வந்தார் ; இறுகத் தழுவினர் ; விடை பெறும்போது அவர் கண்களில் நீர் மல்கியது. அவரது இந்த அன்பு உள்ளத்தைச் சீன அதிகாரிகள் பார்க்கவில்லை யென நம்புகின்றேன். இல்லாவிடில், அவர் மீண்டு மொருமுறை மதி மயக்கும் செயலுக் காட்படுவார்.

திரு. சாங், எங்கள் மொழிபெயர்ப்பாளர். அவர் ஷாங்காய்ப் பட்டதாரி. ஆங்கிலமும், சிறிது பிரஞ்சும் பேசினர். அவர் உணர்ச்சி வசப்படாதவர்; நகைச்சுவை யற்றவர். சீனுவில் எங்களது கடைசி நாள். காண்டன் மிக வெப்பமாக இருந்தது. கொசுக்கள் மிகுதி. ஒரு பழைய பிரிட்டிஷ் விடுதியில் ஒரு சிலரே இரவில் தூங்கினர். காலையில் சிற்றுண்டி உண்ணும் போது களைப்புடன் மகிழ்ச்சி குன்றி இருந்தோம். எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் இருக்கும் ஒரு நண்பர் மட்டும் சுறுசுறுப்பாக இருந்தார். அவர் சாங்கிடம் சொன்னர்: " நான் இரவில் கண் மூடவில்லை. கொசுக்கள் என் இரத்தத்தை உறிஞ்சி விட்டன. நான் அவற்றை நிலப் பிரபுக்கள் என அழைப்பேன்." சீனுவில் நிலப் பிரபுக்களே இல்லை. ஆகையால், சாங்கிற்குக் கோபம் வந்தது. அவர் உடனே பதிலளித்தார்: "இல்லை; நிலப் பிரபுக்களில்லை. அவை அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் படை வீரர்." நாங்கள் சிரித்தோம். அவர் அமைதியாக இருந்தார்.

நாட்டுக்குத் தங்களை அர்ப்பணம் செய்த பல தன்னலமற்ற இளைஞர்களைச் சந்தித்தேன். பலர் வெளிநாடு சென்று திரும்பியவர்கள். இன்று குறைந்த சம்பளத்துடன் துயர் மிக்க தூய வாழ்வு வாழ்கின்றனர். எல்லா மத நம்பிக்கைகளும் தன்னலமற்ற பக்தியை ஊட்டுகின்றன. சீனப் பொதுவுடைமையும் அதற்கு விலக்கன்று. ஆனல், இளைஞருக்கே இயல்பாயுள்ள துடிப்பும் கவலையின்மையும் அங்குக் காணப்படவில்லை. அன்பு உள்ளத்தின் களிப்பு இல்லை; உடைந்த உள்ளத்தின் துயரம்

இல்லை. ஒற்றாலும், அறிவித்தலாலும், குற்றம் சாட்டுதலாலுமே ஒருவரது நாட்டுப் பற்றையும், கொள்கைப் பற்றையும் வெளியில் காட்ட முடியும்.

ஒரே ஒரு வகைக் கல்வியில் மட்டும் சீனு வெற்றியடைந்துள்ளது. முதியோர் கல்வி ஒரு பெரும் பிரச்சினை. அதைக் கையாண்ட முறை நல்ல பயனைக் கொடுத்திருக்கின்றது. சீன மொழி எளிமைப் படுத்தப்பட்டது. ஒருவருக்கு எண்ணூறு முதல் ஆயிரம் வார்த்தைகள் தெரிந்திருந்தால் அவரால் எளிய நடையிலுள்ள செய்தித் தாள்களைப் படிக்க முடியும். அவர்கள் வாழும் நாட்டைப் பற்றி ஓரளவு அறிந்து கொள்ள முடியும். மக்கள் விடுதலைப் படையினர் தாங்கள் அணிவகுத்துச் செல்லும் போதே, எழுதவும் படிக்கவும் கற்றுக் கொண்டனர். இப்பொழுது, நகரங்களிலும், கிராமங்களிலும் ஆண்களுக்கும் பெண்களுக்கும், மாணவர்கள், கடைக்காரர்கள், நிர்வாகிகள் கல்வி கற்பிக்கின்றனர். நாள்தோறும் இதற்கென இரண்டு மணி நேரம் ஒதுக்கப்பட்டுள்ளது. அவ்வாறு படித்தவர்கள் தங்கள் அறிவுத் திறமையை மற்றவர்களுக்குப் பெருமையுடன் காட்டுகின்றனர்.

மக்கள் மனத்தை மாற்றியமைக்கும் பணி மகத்தானது. பொறுமையின்மையும், சொன்னதை அப்படியே ஒப்புக் கொள்வதும் சீன மக்களிடம் பரம்பரையாகவே இல்லை. பல அறிஞர்களும் பேராசிரியர்களும் மதி மயக்குதலையும், அத்துடனுள்ள அச்சத்தையும் ஒப்புக் கொள்கின்றனர். ஏனெனில், அவ்வாறு இருந்தாலும் அவற்றால் சீனுவிற்கு நன்மையுண்டு. கட்டுப்பாட்டையும் ஒழுங்குபடுத்துவதையும் யாவரும் ஏற்றுக் கொண்டுள்ளனர். உலகத்தில் சில மக்களுக்கே தங்களது பிறந்த நாட்டில் அவ்வளவு மிகுதியான பற்றுதல் உண்டு.

இளைஞர்கள் நாட்டுக்காக உழைக்க முன் வரும்போது, வாழ்க்கையில் ஆர்வம் பிறக்கின்றது. இளஞ் சீனு, பொதுவுடைமைத் தத்துவத்தையும், அதன் செயல் வகையையும் அறிந்து கொள்ளத் துடிக்கின்றது. இளைஞர்கள் தங்களை உணர்ந்து கொண்டார்கள். அதனால் களிப்புடனும் உறுதியுடனும் நிற்கின்றனர். ஷாங்காயிலுள்ள ஆங்கில மதவாதி ஒருவர் கூறினார்: " எனது இருபத்தெட்டு வருட அனுபவத்தில், கல்வியில்

இதைவிட மேலான ஆர்வத்தை நான் கண்டதில்லை. தங்களுக்கு நேரம் கிடைக்கும் பொழுதெல்லாம் பெரிய மாணவர்கள் தொழிலாளர்களுக்கு இலக்கியப் பாடம் கற்பிக்கின்றனர். சிறிய மாணவர்கள் தொடக்கக் கல்வியைக் கற்பிக்கின்றனர். நூற்றுக் கணக்கான இளைஞர்கள் கொடியேந்தி வுபான் கூட்டத்திற்குச் செல்வதையோ, ஞாயிற்றுக்கிழமை இன்பச் செலவு செய்வதையோ நான் பார்த்ததுண்டு. இலட்சியத்தை அடைவதில் உறுதியும், தளராத ஊக்கமும் அவர்களிடையே இருப்பதைக் கண்டேன். அதிக நேரம் அவர்கள் உழைத்து, தங்கள் நாட் குறிப்புக்களை மேலதிகாரிக்கு அனுப்புவதற்காக எழுதுவதை நான் பார்த்திருக்கின்றேன். ஆனால், நான் மகிழ்ச்சியைக் காணவில்லை. சீன இளைஞன், வருங்காலம் அவனுடையதே எனத் தெரிந்திருக்கின்றான். அந்த வருங்காலத்தில் அவன் ஏகாதிகார அரசாங்கத்தின் ஒரு யந்திரமாக இருந்தால்தான் அவனுக்கு அங்கு இடமுண்டு.''

## 2. உழைப்பு மூலம் சீர்திருத்தம்

ஏராளமான மக்கள் அழிக்கப்படுகின்றனர் என்று சீனக் கம்யூனிஸ்டு அரசாங்கத்தின்மீது ஜனநாயகப் பத்திரிகைகள் குறை கூறுகின்றன. உள்நாட்டுப் போரில் பல லட்சம் மக்கள் இறந்தனர். சீன மக்கள் அரசியல் ஆலோசனை மாநாட்டின் துவக்கக் குழுக் கூட்டத்தில் மாசேதுங், சீன மக்கள் விடுதலைப் படை மூன்று ஆண்டுகளில் 5,900,000 கோமிண்டாங் படையினரைக் கொன்றது என்பதை ஒப்புக் கொண்டார். அப்போது அவர் கூறினர்: " இப்பொழுது கோமிண்டாங் படையில் ஒழுங்கும், ஒழுங்கற்றதுமான படையினரையும், பின் பலமாகவுள்ள படையமைப்புக்களையும் சேர்த்துப் பதினைந்துலட்சம்பேர் உள்ளனர். எஞ்சியவர்களையும் ஒழிப்பதற்கு இன்னும் சிறிது காலம் செல்லும்." 1951 செப்டம்பரில் பிரதமர் சூயென்லாய் அந்தப் பதினைந்து லட்சமும் அழிக்கப்பட்டதாகக் கூறினர். ஆகவே, அக் குற்றங்களைச் சுமத்துதல் வியப்பன்று.

1951 அக்டோபரில் காண்டனில் மக்கள் விசாரணை நடப்பதாகவும்,அதில் 676 பிற்போக்காளர் சம்பந்தப்பட் டிருப்பதாகவும் பீகிங் பத்திரிகையில் படித்தேன். திஹுவாவில் அதே சமயத்தில் 234 பேர் அதே குற்றத்திற்காக விசாரணை செய்யப்பட்டனர். இவ் விசாரணைகள் பற்றி உள்ளூர்ப் பத்திரிகைகள் மிக்க கவனம் செலுத்தவில்லை. ஆகவே, இந்த அழிப்பு முயற்சி பற்றி அறிந்து கொள்ள ஆவல் கொண்டேன். அதைப் பற்றி ஒன்றும் தெரிந்து கொள்ள முடியவில்லை. வதந்திகளையும், பேச்சாக வரும் செய்திகளையும் கேட்டுக்கொண்டு பின்னர் அதனை அலசிப் பார்த்தேன்.

சியாங்கால் விடப்பட்ட கோமிண்டாங் படையினர் தேச முழுவதும் பரவியுள்ளனர்; தங்கள் படைக் கருவிகளை மறைத்து வைத்துள்ளனர். சீனவில் பல இரகசியச் சங்கங்கள் உண்டு. பலர் அச் சங்கங்களில் சேர்ந்து விட்டனர். தெற்கே நிலச் சீர்திருத்தத்தால் மறைந்து வரும் நிலப் பிரபுக்கள் அச் சங்கங்களைப் பலப்படுத்தினர். குடியரசு நிலைநிறுத்தப் பட்டதும் சீன

அரசாங்கம் கோமிண்டாங் படையில் இருந்தவர்கள் யாவரும் தங்களைப் பதிவு செய்து கொள்ள வேண்டும் எனக் கட்டளையிட்டது. அவ்வாறு செய்தால் அவர்கள் கருணையுடன் நடத்தப்படுவார்கள் என்று அரசாங்கம் வாக்குறுதி யளித்தது. பணிய மறுத்தவர்கள் கைது செய்யப்பட்டனர். நிலச் சீர்திருத்தம் நடைபெறும்போது நிலப் பிரபுக்களும், அவர்களது தனிப்பட்ட படையினரும் பல விடங்களில் எதிர்த்தனர். ஷாங்காயில் மூன்று முதல் ஐந்தாயிரம் மக்கள் பொறுக்கப்பட்டுச் சுடப்பட்டதாக நான் கேள்வியுற்றேன்.

1949-இல் மா கூறினர்: "சீன மக்கள் அரசாங்கத்தின் தற்போதைய பணி, மக்கள் படை, மக்கள் போலீஸ், மக்கள் நீதிமன்றங்கள் யாவற்றையும் பலப்படுத்த வேண்டும். ஏனெனில், படை, போலீஸ், நீதிமன்றம் போன்ற அரசாங்க அமைப்புக்களால்தான் ஓர் இனம் மற்றொன்றை அடக்குகின்றது." மக்கள் அரசாங்கத்திற்குப் பிற இனத்தார்மீது கருணையுடன் நடந்து கொள்ளும் எண்ணமில்லையென்று அவர் சொன்னர். அதே பேச்சைத் தொடர்ந்து அவர் பேசினர்: "பிற்போக்காளர்களிடத்திலும், எதிர்ப்பவர்களிடத்திலும் இரங்கும் கொள்கை நமக்கில்லை. சீன மக்கள் தவிரப் பிறரிடத்தில் நாம் கருணை காட்டுவதில்லை. சீன மக்களிடமே கருணை காட்டுவோம்."

'சீன மக்கள்' என்ற சொல்லில் அடங்காதவர் மீது சீன அரசாங்கம் கடுமையாக இருக்கின்றது. கடைசியில் அவர்கள் ஓர் இனமாக ஒதுக்கப்படுகின்றனர் என்பது தெளிவு. அதற்காக அவர்கள் கையாண்ட முறை, 'அழித்தல் அல்லது உழைப்பு மூலம் சீர்திருத்தல்' என்பதே. மா கூறினர்: "பிற்போக்கு வகுப்பினரைப் பொறுத்தவரை, நாம் அவர்கட்கு நிலம் வழங்குவோம்; வேலை கொடுப்போம்; அவர்களை வாழ விடுவோம். அவர்கள் உழைப்பின் மூலம் புதிய மனிதர்களாகச் சீர்திருந்த அனுமதிப்போம். அவர்கள் வேலை செய்ய விரும்பாவிடில் மக்கள் அரசாங்கம் அவர்களை வேலை செய்யுமாறு வற்புறுத்தும்."

ஒழித்தல் என்ருல், சாகடித்தல் என்று பொருள் கொள்ள வேண்டாம்; சீன வழக்குப்படி, பயனற்றதாகச் செய்தல் என்றே பொருள். காண்டனில் நடைபெற்ற விசாரணையில் 22 பேருக்கு மரணத் தீர்ப்பு வழங்கப்பட்டது. 11 பேருக்கு மரணத் தீர்ப்

பளிக்கப்பட்டாலும், அத் தீர்ப்பு இரண்டாண்டுகட்குத் தள்ளி வைக்கப்பட்டது. 16 பேர் விடுதலை பெற்றனர். மீதமுள்ள 627 பேர் சிறைத் தண்டனை பெற்றனர். சிறை யென்றால், அரசியல் கைதிகளுக்கான தனிக் கூடம். திருவாவில் 18 பேர் மரண தண்டனையும், 6 பேர் இரண்டாண்டுகளுக்குப் பின் மரண தண்டனையும், 11 பேர் விடுதலையும், 199 பேர் வெவ்வேறு கால அளவு சிறைத் தண்டனையும் பெற்றனர்.

போலீஸ் பாதுகாப்பு அலுவலகத்தாரே அவ் விசாரணையை நடத்தினார்கள். உண்மைகளைச் சேகரித்தலும் பொது மக்களிட மிருந்து மன்னிப்பு அல்லது குற்றச்சாட்டுகளை ஏற்றுக்கொள்ள லும், குற்றம் சாட்டப்பட்டவர் மேல் முறையிடுதலும் அவ் வலு வலகத்தின் வேலைகள். தண்டனையைக் கூட அதுவே சிபாரிசு செய்தது. பின்னர் ஒரு குழு அம் முறையீட்டை ஆராய்ந்து தீர்ப்பளித்தது. கடைசியாக ஒரு பொது விசாரணை நடை பெற்றது. அங்குச் சாட்சிகள் தங்கள் குற்றச்சாட்டுகளுடன் வந்தார்கள். விசாரணையின்போது குற்றவாளி தனக்காக வாதாட முடியாது. ஏனெனில், அவனைப் பேச விடவில்லை. போலீஸ் விசாரணையின் போதுதான் அவன் தன் குற்றத்தை மறுக்க முடியும். எதிர் விசாரணையும் இல்லை. அவனது நலங் கருதும் வழக்கறிஞரும் இல்லை. பொது விசாரணை யென்பது, பயத்தையும், பணிவுடைமையையும் தோற்றுவிக்கும் ஒரு பிர சார யந்திரம். சிறைத் தண்டனை பெற்றவர்கள் தனிச் சிறைக் கூடத்திற்குள் அடைக்கப்பட்டனர். அச் சிறைக்கூடம், 'உழைப் பால் சீர்திருந்தும் கூடம்' என இனிமையாக அழைக்கப்படு கின்றது.

நாங்கிங்கில் இருக்கும்போது, அக்டோபரில் ஒரு நாள், பெயர் பெற்ற 'ஷின்குவாபோ' என்ற நாள் செய்தித் தாளில் அக் கூடம் பற்றி விவரிக்கப்பட்டிருந்தது; 'புரட்சிப் பகைவர் களுக்குச் சிங்காப் பண்ணை' என்று தலையங்கம் தரப்பட்டிருந்தது. அக் கட்டுரை மொழிபெயர்ப்பாளரால் ஆங்கிலத்தில் ஆக்கப் பட்டது. அது படித்தற்குரியது:

> புரட்சிப் பகைவர்களைச் சீர்திருத்தும் பொருட்டு, மக்கள் பாதுகாப்பு மன்றத்தார் சிங்காப் பண்ணையை ஓர் ஆண் டிற்கு முன் துவக்கினர். இப்பொழுது அவர்கள் பொருளா

தாரத் துறையிலும், அரசியல் துறையிலும் வெற்றி பெற்றுள்ளனர். பல குற்றவாளிகள் ஆக்க வேலையில் ஈடுபட்டிருந்ததனுல், தங்கள் பிற்போக்குக் கொள்கையைத் திருத்திக் கொண்டனர். பல குற்றவாளிகள் உழைப்பில் ஆர்வம் காட்டுகின்றனர்; தங்கள் செய்கைக்கு வருந்துகின்றனர்; மலர்ந்த உள்ளம் பெற்றுள்ளனர். சிங்காப் பண்ணை 1950, மார்ச்சு மாதம் நிறுவப்பட்டது. அப்போது அந்த இடம் வெட்ட வெளியாக, பாழாகக் கிடந்தது. இந்தப் பண்ணை அங்கு 8 கிராமங்களைத் தோற்றுவித்தது; 2500 அறைகள்* கட்டப்பட்டன. 1,500,000 கன அடி கொண்ட வாய்க்கால் வெட்டப்பட்டது. 20 லி. நீளமுடையது. மின்சாரம் வழங்குதற்கும், 50,000 மோக்கள் நிலம் பாசன வசதி பெறுதற்கும், தண்ணீரை மேலேற்றுதற்கும் வேண்டிய மின்சார நிலையம் ஒன்றைக் கட்டியிருக்கின்றனர். இப்போது அங்கு டெலிபோன், ஆஸ்பத்திரி, எஞ்சினியர் குழு, போக்குவரவுக் குழு, ஆய்வுக் கூடம், யந்திரக் குழு, செங்கற் சூளை, அரிசி மாவு மில் யாவும் ஏற்படுத்தப்பட்டுள்ளன; வைக்கோற் பைகள் செய்யப்படுகின்றன.

அக் குற்றவாளிகள் அப் பண்ணைக்கு வந்தபோது அவர்களில் பெரும்பாலோர்க்கு ஒரு வேலையும் தெரியாது; உற்பத்தித் திறமை யில்லை. பலர் உழைப்பதற்குப் பயந்தனர்; அதனை வெறுத்தனர். பலர் மறைமுகமாக வேலை நிறுத்தம் செய்தனர். சான்றாக, மண் சுமக்கும்போது அவர்கள் கீழே விழுந்தது போன்று நடித்து, ஓய்வு பெற்றனர்; அல்லது கழுவும் அறையில் நீண்ட நேரம் கழித்துவிட்டு வேலை செய்யாது இருந்தனர். சிலர் வெளிப்படையாக வேலை செய்ய மறுத்தனர். குற்றவாளிகள் தப்பிச்

* 10,000 கைதிகள் அப் பண்ணையில் இருந்தார்கள் என்பதை இது குறிக்கின்றது. பொதுவாக, சீனத் தொழிலாளியின் வீட்டில் பதினன்கு முதல் பதினறு பேர் வரை ஓர் அறையில் வசித்தனர். 10 × 8 சதுர அடி பரப்பளவுள்ள ஓர் அறையில் நான்கு பேர் தூங்குவதற்கு 8 × 6 சதுர அடியில் திண்ணை ஒன்று இருந்தது.

செல்ல உதவியளித்தும், கருவிகளை உடைத்தும் அழிவு வேலை செய்தனர். உழைப்பில் பங்கெடுப்பதாலும், சிந்தனைக் கல்வி பயில்வதாலும், அக் குற்றவாளிகள் மனத்தில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. பலர் தங்கள் குற்றங்களை ஒப்புக் கொள்கின்றனர்; தங்களைச் சீர்திருத்த விரும்புகின்றனர். தங்கள் தண்டனைக் காலம் முடிந்த பின்னரும் சிலர் அப் பண்ணையை விட்டுச் செல்ல மறுக்கின்றனர்; அங்கிருந்தே உழைக்க விரும்புகின்றனர்.

இத்தகைய மாற்றம் அப் பண்ணையில் எவ்வாறு உண்டாயிற்று? அரசியல் சீர்திருத்தத்துடன் உழைப்பும் சீர்படுத்தப் படவேண்டும் என்ற கொள்கையைப் பின்பற்றியதால்தான். அவர்கள் மனத்தை மாற்றுவது ஒரு கடுமையான போராட்டமே. பகுத்தறிவுக் கல்விக்கு அதிகமாகப் பாடுபட வேண்டும். தலைவர் மாசேதுங்கின், 'மக்கள் ஜனநாயக சர்வாதிகாரம்' அவர்களுக்கு முதலில் விளக்கப்பட்டதும், உழைப்பின் மூலம் அவர்களைச் சீர்படுத்தும் திட்டத்தை அவர்களிடம் கூறியபோதும் அவர்கள் மிகுந்த எதிர்ப்புக் காட்டினர். பலர் அழுதார்கள்; பலர் பட்டினி கிடந்தார்கள்; பலர் கடைசிக் கடிதம் எழுதினார்கள்; சிலர் தற்கொலை செய்யவும், தப்பிச் செல்லவும் முயன்றார்கள்.

பண்ணையிலுள்ள சிப்பந்திகள் குற்றவாளிகளிடம் உழைப்பின் மூலம் சீர்திருந்துவதால்தான் அவர்கள் புது வாழ்வு வாழ முடியும் எனக் கூறினர்; சமூகத்தை அபிவிருத்தி செய்யும் பாடங்களை அவர்கள் கற்பித்தார்கள். உழைப்பினால் எப்படி உலகமும், அதில் உள்ளவைகளும் உருவாயின என்பதை விளக்கினார்கள். உழைப்பை வெறுத்து வந்த குற்றவாளிகளின் தவறான எண்ணத்தைப் போக்கினார்கள். ஆனால், வேலையில் ஈடுபட்ட பின்னருங் கூட அவர்களது சிந்தனை மாறவில்லை; நிலைமை மாறவில்லை. வெளி நிலைமையும் அவர்களைப் பாதித்தது. சான்றாக, அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் கொரியாவில் இறங்கியபோதும், கொரிய மக்கள் படையினர் பின் வாங்கிய போதும், பல குற்றவாளிகள், அமெரிக்க வெற்றி பற்றியும், சியாங்கேஷேக் திரும்ப வருவது பற்றியும் பேசிக் கொண்டிருந்தனர்.

அரசியல் கல்வியால் சிந்தனை மாற்றும் முறைகளை விளக்கிய பின்னர், அந்தக் கட்டுரை தொடர்கின்றது:

> என்றாலும், புரட்சிப் பகைவர்களை எளிதில் திருத்த முடியாது. சிலர் இன்னும் திருந்தாமலே இருக்கின்றனர்; உற்பத்தியை அழித்து, பண்ணையின் ஒழுங்கைக் கலைக்க முயல்கின்றனர்; அவர்களுக்குப் பரிசு - தண்டனை இரண்டிற்குமுள்ள வேறுபாட்டைக் காட்டுகின்றனர். அவர்களிடம் தண்டனை, போதனை ஆகிய இரு முறைகளும் பயன்படுத்தப் படுகின்றன. மாறாக, தங்கள் தவறுகளுக்கு வருந்தி, திருந்தும் எண்ண முடையவர்களின் தண்டனைக் காலம் குறைக்கப்படுகின்றது.
>
> இவ்வாறாக 1950 மார்ச்சு முதல் இன்று வரை திருந்திய குற்றவாளிகளில் இருநூறுக்கு மேற்பட்டவர்களை விடுதலை செய்துள்ளனர். நாற்பது பேர் தண்டனைக் காலம் முடியுமுன்னர் விடுவிக்கப்பட்டனர். அபிவிருத்தி காணப்பட்டவர்களுக்குப் பரிசளிக்கப்பட்டது. வேலை செய்யாதவர்களும், உழைப்பால் திருந்த மறுப்பவர்களும், அல்லது அழிவு வேலை செய்ய முயல்பவர்களும், தப்ப முயல்பவர்களும், தங்கள் குற்றங்களுக்காகத் தண்டிக்கப் பட்டனர். தன்னுடன் ஆறு குற்றவாளிகளையும் சேர்த்துக் கொண்டு தப்பிச் சென்ற கோமிண்டாங் ரகசிய ஒற்றரான துஷிசின் என்பவர், அவ் ஆறு பேர்களுடன் கைது செய்யப்பட்டு, மீண்டும் பண்ணைக்குக் கொண்டு வரப்பட்டு, அங்கு வசிப்பவர்கள் முன்னிலையில் சுட்டுக் கொல்லப் பட்டார்.

இன்றைய சீனப் பத்திரிகைத் தன்மைக்கு இக் கட்டுரை ஒரு சரியான எடுத்துக்காட்டு. இக் கட்டுரையை இத்தனை விரிவாக வெளியிட்டதன் காரணம், இக் கட்டுரையினிடையே எதிர்ப்பு, கட்டாய உழைப்பு, தற்கொலை ஆகிய செய்திகளும் இடம்பெற்றிருப்பதால்தான். செய்தித் தாள்கள் செய்திகளை வெளியிடுவதில்லை. அவை அரசாங்கத்தின் பிரசார யந்திரங்களாகப் பயன்படுகின்றன.

இக் கட்டுரையில் குறிப்பிடப் பட்டவற்றை நான் ஒப்புக் கொண்டேன். அதற்கு முன் எனது மொழிபெயர்ப்பாளரிடம் நான் ஒரு பண்ணையைக் காண விரும்புவதாகக் கூறினேன். என்னுடன் தூதுக் குழுவினருள் இருவர் சேர்ந்து அக் கோரிக் கையை வெளியிட்டனர். அதற்குப் பதில் இல்லை. ஷாங்காயி லிருந்து காண்டனுக்குப்போகும் வழியில், ஒரு ரயில்வே நிலையத் தில் கைதிகள் வரிசையாக நிற்பதைக் கண்டேன். நின்றவர்கள் சுமார் இருநூறு பேர் இருப்பார்கள். இருவர் ஒன்றுகக் கட்டப் பட்டிருந்தனர். வேறு இடத்திற்குச் செல்லக் காத்திருந்தனர். நாங்கள் சென்ற வண்டி அக் கைதிக ளிருக்கு மிடத்திலிருந்து சிறிது தூரத்தில் நின்றது. அவர்கள் யாரென்று அறிய ஆவல் கொண்டேன். எங்களுட னிருந்த அதிகாரியிடம் சென்று கேட் டேன். அவர் எதுவும் தெரியவில்லை யெனக் கூறினர். நான் அவர்கள் கைதிகள் எனச் சொன்னதும், 'இருக்கலாம்' எனப் பதிலளித்தார்.

புரட்சி எதிர்ப்பாளரிடமிருந்து எப்பொழுதும் தொல்லை இருந்தது போலும்! நாட்டின் எதிர்ப்புச் சக்திகளை அழிப்பதற்கு இத்தகைய பயத்தைக் கிளப்பிவிட்டிருக்க வேண்டும். பொதுத் திட்டமே நாட்டின் அடிப்படைச் சட்டம். அதனை எதிர்ப்பவர்கள், ஏற்றுக் கொள்ளாதவர்கள், குறை கூறுபவர்கள் யாவரும் துரோகிகள். பயமுறுத்தலே சர்வாதிகாரத்தின் வெற்றி ஆயுதம். பொதுவுடைமைச் சீனு அதிகாரத்தால் அடக்கியாளு கின்றது. சிறைக்கூடங்கள், நள்ளிரவில் மனிதர்கள் மறைதல், தற்கொலை, பகிரங்க விசாரணை, பகிரங்கக் கொலை யாவும் சீனுவில் அன்றுட வாழ்க்கைப் பகுதிகள்.

நான் பீகிங்கிலிருந்த போது, மூன்று இத்தாலியர், ஒரு ஜர்மானியர், ஒரு பிரெஞ்சுக்காரர், ஒரு ஜப்பானியர், ஒரு சீனர் யாவரும் அடங்கிய விசாரணை பற்றிக் கேள்விப்பட்டேன். 1950 அக்டோபர் முதல் நாளில் தியன்ஆன்மானைக் குண்டுக் கிரை யாக்கத் திட்டமிட் டிருந்ததாக அவர்கள் மீது குற்றம் சுமத்தப் பட் டிருந்தது. அவர்கள் யாவரும் பாசிஸ ஜப்பான், சீனு, அமெரிக்க அரசாங்கம் ஆகியவற்றின் ஒற்றர்கள் எனக் கருதப் பட்டது. ஒருவர் கத்தோலிக்க மதகுரு. அவர்கள் மீது சுமத்

தப்பட்ட குற்றம் வியத்தற்குரியது. வழக்கம்போல், அவர்கள் மன்னிப்புக் கோரியதாகக் கூறப்பட்டது.

மாஸ்கோ விசாரணைகளைப் போன்று, இம் மன்னிப்புக்களும் பயமுறுத்தலினுல் அவர்களைப் பணிய வைத்தலே. சதிகாரர்கள் 1950 செப்டம்பர் 26-இல் கைது செய்யப்பட்டனர். பதினொரு மாதங்கள் பாதுகாப்புப் போலீசார் அவர்களை வாட்டினர். பின்னர் அவர்கள் வழக்கு பாதுகாப்பாளர் அலுவலகத்திற்கு மாற்றப்பட்டது. படை நீதிமன்றத்தில் அவர்கள் விசாரணை செய்யப்பட்டனர். 1951 ஆகஸ்ட் 17-இல் தீர்ப்பளிக்கப்பட்டனர். இந்தத் தேதிகளுக்கும் கொரியப் போரில் சீனர்கள் நுழைந்ததற்கும் தொடர்பு உண்டு. 1950 செப்டம்பரில் சீனு போரில் தலையிட முடிவு கட்டியது என்பது நினைவு இருக்கலாம். 'கேஸாங் ஆயுதப் பரிகரணப் பேச்சு வார்த்தை' தடைப்பட்டது. 1951 ஆகஸ்டு 23-இல் அது முறிந்தது. குற்றச்சாட்டின் நகல் பீகிங்கில் என்னிடம் கொடுக்கப்பட்டது. அப் பத்திரத்திலிருந்து குற்றவாளிகளின் குற்றங்களைத் தெரிந்து கொள்வது கடினம். ஆனுல், அவர்களிடம் காணப்பட்ட சில பத்திரங்கள் பிரசுரிக்கப்பட்டிருந்தன. அவற்றிலிருந்து அவர்கள் குற்றமற்றவர்கள் என முடிவு கட்ட முடியாது. தலைமைக் குற்றவாளிக்கும், அமெரிக்கச் சேனை அதிகாரிக்கும் தொடர்பை நிலைநாட்டுவதாகக் கூறப்படும் ஒரு கடிதம் கீழே தரப்பட்டுள்ளது:

பீகிங்,

29, நவம்பர் 1949.

அன்புள்ள தோனி,

தயவு செய்து நீங்களும், ஒய்யும் என் இருப்பிடத்திற்கு டிசம்பர் 2-ஆம் நாள் வெள்ளிக்கிழமை 12-45 மணிக்கு உணவருந்த வாருங்கள். திரு. கிளப்பும் அழைப்பிற்கு இணங்கியுள்ளார்.

ஒய்க்குத் தனியாக அழைப்பு அனுப்பவில்லை. அதற்காக என்னை அவர் மன்னிக்குமாறு கோருகிறேன்.

குறிப்பிட்ட பொருளை நீங்கள் அனுப்புவது பற்றி அச்சம் கொண்டுள்ளேன். அது சரியென்று படுகின்றதா?

உங்கள் பையனிடமிருந்து ஒரு கடிதம் எடுக்கப்பட்டால் நம் இருவருக்கும் மிகுந்த தொல்லே ஏற்படலாம்.

அப் பொருள் மிக மதிப்பு வாய்ந்தது. அதைப் பெற்ற தற்கு மகிழ்ச்சி அடைகிறேன்.

உண்மையுள்ள,

தேவே.

ஆங்கிலத்தைத் தாய் மொழியாகக் கொண்ட ஒருவர் இதை யெழுதியிருப்பார் என்பதை என்ஞல் நம்ப முடியவில்லே. இது சீன முறையில் அமைந்துள்ளது. விசாரணேயும் தீர்ப்பும் மிகப் பெரும் விளேவைத் தந்தன. ஏனெனில், அவ் வழக்கில் சீஞவி லுள்ள வெளிநாட்டாரும், குறிப்பாக ஒரு ரோமன் கத்தோலிக்க மதகுருவும் ஈடுபடுத்தப்பட் டிருந்தனர். மதச் சங்கங்கள் பட்ட இன்னல் பற்றி அதிகமாகத் தெரியவில்லே. பல மதச் சங்கங்களுக்குப் பிறநாடுகளிலும் உரிமைகள் இருந்தன. சங்கத்தி லிருந்து ஒரு சிறு கடிதம் பெற்று அதன் உதவியால் வழக்கு மன்றங்களில் சீனக் கிறித்தவர் வெற்றி பெற்றிருக்கின்றனர். ரோமக் கத்தோலிக்க குருமார்கள் ஏனேயோரைவிட மிகுந்த தொல்லேக்கு ஆளாஞர்கள். சியாங்கின் ஆலோசகரான கார்டினல் ஸ்பெல்மான்யு பின்னுக்குச் சென்றதையும், அதன் பின்னர் மேரிச் சங்கம் அமைக்கப்பட்டதும் புரட்சி எதிர்ப்பு நடவடிக்கை எனத் திரித்துக் கூறப்பட்டன. ‘பொதுவுடைமை, மதத்தை எதிர்ப்பது. ஆகவே, அது தடுக்கப்பட வேண்டும்’ என ரோமக் கத்தோலிக்கர்களுக்கு அறிவுரை வழங்கப்பட்டதாகக் கூறப்படுகின்றது. கத்தோலிக்க கோவில் அவ் வெதிர்ப்பில் கலந்துகொள்ளவில்லே. ஆஞல், அதன் செல்வாக்கு அவ் வெதிர்ப்பு இயக்கத்தில் மக்களேத் தூண்டிவிட்டது. அது வரை யிலும் மதத்தில் தலேயிடாத சீனப் பொதுவுடைமை, மதகுரு வைத் தண்டித்ததை நியாயம் என ஒப்புக் கொண்டது.

கத்தோலிக்க கன்னியரால் நடத்தப்பட்ட அஞதை இல்லங் களுக்கு எதிராகக் கொடுமை மிக்க குற்றங்கள் நாங்கிங்கிலும், பீகிங்கிலும் கூறப்பட்டன. ஒரு முறை அஞதையின் இல்லத் தின் பழைய வாசிகள், கன்னியருக் கெதிராகச் சாட்சி கூறிஞர் கள். ஆஞல், கல்வி கற்றுக் கொடுக்க முடியாத இளம் குழந்தை

கள், அக் கன்னியர் அவர்களை அன்புடன் நடத்தியதாகக் கூறினர். இது பேன்ற கதைகள் பல சீனவில் உலவுகின்றன. அவை என்னைக் குழப்பமடையச் செய்தன. ஏனெனில், அவை போரை வெறுக்கும் நாட்டில் இருக்கின்றேன் என்ற உணர்ச்சியை எனக்கு ஊட்டின.

இப்போது சீனச் சிறைகளில் சுமார் எழுபது பிறநாட்டார், தாங்கள் இழைத்த தவறு யாதெனத் தெரியாது உழல்கின்றனர். நேர்மையான விசாரணை யில்லை; தங்களுக்காக வாதம் செய்யும் வாய்ப்புக்கூடக் கிடைப்பதில்லை. பொதுத் திட்டத்தின் ஏழாவது பிரிவில், மக்கள் ஜனநாயகத்தை — பொது வுடைமையை — எதிர்க்கும் புரட்சிப் பகைவர்கள் அடக்கப்பட வேண்டும் என்று எழுதப்பட்டுள்ளது. எல்லாக் குற்றச் சாட்டுகளும் மீண்டும் பரிசோதிக்கப்பட்டு ஒன்றுபடுத்தப்படும். அத்தகைய பரிசோதனையை நான் ஷாங்காயில் பார்த்தேன். மின்சாரத் தொழிற்சாலையி லுள்ள ஒரு தொழிலாளி மீது 'புரட்சிப் பகைவன்' என்று குற்றம் சாட்டப்பட்டது. அவனுடன் வேலை செய்யும் மற்றத் தொழிலாளர்கள் அவன் மேலுள்ள வெறுப்பால் எதிராகச் சாட்சி சொன்னார்கள். அவற்றுள் முக்கியமான குற்றம் அவன் அமெரிக்க வானொலியைக் கேட்டதுதான்.

புரட்சிப் பகைவர்கள், ஒற்றர்கள் என்று குற்றம் சுமத்தப் பட்டவர்களின் கதி இதுதான். ஆனால், பாமரனின் கதி யென்ன? சட்டம் அவன் மீதும் கரத்தை நீட்டுமா? ஒருவனுடைய உரிமை சட்டத்தினல் பாதுகாக்கப்படுகின்றது என்பதே ஜன நாயகத்தின் அடிப்படைத் தத்துவம். சீனவில் ஒருவனுக்கு, தான் குழுவில் ஓர் உறுப்பினன் என்பதைத் தவிர வேறு எவ்வித உரிமையும் இல்லை. பிறரோடு அவனுக் குள்ள உரிமை, அரசாங்கத்தோடு அவனுக் குள்ள தொடர்பினல் வரையறுக்கப் பட் டிருக்கின்றது. பொதுத் திட்டத்தின்படி அமைக்கப்பட்ட அரசாங்கம்தான் முக்கியம்; தனி மனிதனல்லன். நீதி வழங்கல் அரசாங்க அதிகாரத்திற் குட்பட்டது; தனித் திருப்பதன்று. உயர் தர நீதி மன்றத்தின் தலைமை நீதிபதி அரசாங்கத்தின் ஓர் உறுப்பினர். அடிக்கடி அவருக்கு அரசியற் பணிகளும் தரப்படுவ

துண்டு. சட்டம் அரசியலுக்குக் கீழ்ப்பட்டது; நியாயத்தின் பாற் பட்டதன்று.

நீதிபதிகளுக்குச் சட்ட அறிவு வேண்டியதில்லை; பீகிங், நாங்கிங், ஷாங்காய் ஆகிய இடங்களிலுள்ள மக்கள் நீதிமன்றங் களில், நீதிபதிகளுக்குச் சட்டத்தின் தொடர்பே இல்லை. அவர் களின் அரசியல் பற்றுதலில் அரசாங்கத்திற்கு நம்பிக்கை உண்டு. இந் நீதிமன்றங்களில் வழக்கு முறை பின்பற்றப்படுவ தில்லை; எடுத்துக் காட்டுவதற்குப் பழைய வழக்குகளு மில்லை. அவற்றில் நூற்களு மில்லை. வாதாடும் வழக்குரைஞரும் இல்லை. தொழிலாளர் நீதிமன்றங்களில் ஒரு தலைமை தாங்கும் நீதிபதி யும், குற்றவாளியின் இனத்தைச் சார்ந்த ஒரு பிரதிநிதியும், குறிப்பெடுப்பவரும் இருப்பார்கள். பழைய சட்டங்கள் யாவும் அழிக்கப்பட்டன. இன்று திருமணச் சட்டம், தொழிற் சங்கச் சட்டம், நிலச் சீர்திருத்தச் சட்டம், எல்லாவற்றிற்கும் மேலாக, பொதுத் திட்டம் ஆகியவையே அரசாங்கத்தின் அடிப்படைச் சட்டங்கள். நீதிமன்றத்தில் வந்திருக்கும் எவரும் நடவடிக்கை களில் கலந்து கொள்ளலாம்; சாட்சியாக வரலாம்; அல்லது குற்றம் சுமத்தலாம்; அதிகத் தண்டனை கோரலாம்.

பீகிங்கில் ஒரு மண முறிவு வழக்கு நடப்பதை நான் பார்த் தேன். தன் கணவனின் கொடுமையைத் தாங்கமுடியாமல், மூன்று குழந்தைகளையுடைய ஒரு தாய் மணமுறிவு வேண்டினாள். கணவனிடம் அது பற்றிச் சிந்திக்குமாறு நீதிமன்றம் கேட்டுக் கொண்டது: "வேறு ஏதேனும் பிற்போக்குக் கருத்துக்கள் உன்னிடம் உண்டா என்று எண்ணிப் பார். உன் மனைவியைக் கொடுமைப்படுத்துவதற்குப் பதில், அவளுக்குக் கல்வி கற்பித்து, அவளுடைய பண்பாட்டை உயர்த்த வேண்டும். சண்டை பிடிக்கும் எண்ணத்தை விட்டு விடு." அத் தம்பதிகள் வழக்கைப் பின்வலித்துக் கொண்டனர்.

நாங்கிங்கில் ஒரு கொலை வழக்கு. 'மாமியார் மருமகளைத் தற் கொலை புரியச் செய்தாள்' என்று குற்றம் சுமத்தப்பட்டது. 'மாம னார், 'மனைவி சொல்லுக்குப் பணிபவர்; அதனால்தான் மருமகளின் தற்கொலையைத் தடுக்கவில்லை' என்று குற்றம் சுமத்தப்பட்டார். இவ் வழக்கு பொதுமக்கள் கவனத்தைக் கவர்ந்தது. குற்றவாளி

வசிக்கும் இடத்திலுள்ள மக்கள் அனைவரும் அங்குக் குழுமினர். நீதிபதி குற்றச்சாட்டுகளைப் படித்தார். பொதுமக்களில் சிலர் முன்வந்து குற்றவாளிகளைக் குறை கூறினர். அவர்கள் சில கொடுமையான செய்கைகளைப் பற்றிக் கூறினார்கள். அவர்கள் அருகில் இருப்பவர்களாதலால் அவர்களுக்கு யாவும் தெரிந்திருந்தன. குற்றவாளி அவர்களை எதிர்க்கேள்வி கேட்கவில்லை. கடைசியாக மாமனார், தன் மனைவி இறந்தவளைக் கொடுமைப் படுத்தியதாக ஒப்புக் கொண்டார். ஜனநாயகப் பெண்கள் சங்கத்தின் பிரதிநிதி சமூகச் சீர்திருத்தம், மாதர் நிலை, குடும்ப வாழ்க்கை ஆகியவற்றைப் பற்றி நீதிமன்றத்தில் சொற்பொழிவாற்றினார். இதன் பின் நீதிபதி குற்றவாளிகளுக்குத் தண்டனை வழங்கினார். அக் கிழ மாமியாருக்குப் பதினைந்தாண்டு சிறைவாசமும், மனைவி சொல்லுக்குப் பயந்ததால் மாமனாருக்கு இரண்டாண்டு சிறைவாசமும் வழங்கப்பட்டது.

ஷாங்காயிலும் ஒரு கொலை வழக்கு. குற்றவாளி, 'பெண் புலி' என்று பெயர் பெற்றவள். வேலைக்காரியைக் கொன்று விட்டதாகக் குற்றம் சுமத்தப்பட் டிருந்தது. கோமிண்டாங் ஆட்சியின் போது இழைத்த குற்றம் அது. அந் நாளைய போலீசார் அவளைக் குற்றவாளியல்லள் என்று கூறி விடுவித்தனர். இப்பொழுது பழைய கதை மீண்டும் அகழப்பட்டு, பக்கத்து வீட்டார் சாட்சி சொல்ல முன்வந்தனர். அவள் மகள் ஜப்பானிய உளவாளி யென்றும், கோமிண்டாங் உளவாளி என்றும் இப்பொழுது அவர்கள் கூறினர். இக் கூற்றுக்கள் குற்றத்திற்கு ஆதாரமானவை யல்ல. அப் பெண் புரட்சியை எதிர்ப்பவளாக மாறலாம் என்று அங்ஙனம் கூறப்பட்டது. எதிர் விசாரணை யில்லை. குற்றவாளி சாட்சியின் கூற்றை மறுத்தார்.

இவ் வழக்குகளிலிருந்து, சீனாவில் தீர்ப்பளிப்பவரும், வழக்குத் தொடர்பவரும் ஒருவரே என்று தெரிகின்றது. குற்றவாளிக்கு மிகுந்த துன்பமுண்டு. ஏனெனில், அவன், தான் குற்றமற்றவன் என்று நிரூபிப்பது வரையிலும் குற்றவாளியே. அங்குச் சட்டம் அதிகாரம் செலுத்தவில்லை. அதனால் ஒருவனுக்குத் தனது ஆதாரங்களால் நியாயம் கிடைக்கும் வாய்ப்பில்லை.

## 3. சான் பான் வு பான்

இரண்டாம் முறை நான் சீனு சென்ற முதல் நாள் காண்டனில் இறங்கினேன். அப்போது வடக்கிலிருந்து ஒரு புதிய இயக்கம் தோன்றி, தேச முழுவதும் பரவியிருந்தது. தெருக்களில் செல்லும்போது அதன் விளைவுகளைக் கண்டேன். 'சட்ட விரோதமான தொழில்' என்ற அரசாங்க முத்திரையுடன் கடைகள் பல மூடப்பட்டிருந்தன. நகரத்தில் பிரிட்டிஷ் பிரதேசத்தைத் தனியாகப் பிரிக்கும் வாய்க்கால் அருகே, சிறிய கடைகள் முன்னுல் மக்கள் கூடிநின்று ஆரவாரம் செய்தனர். எப்பொழுதும் என்னுடனிருக்கும் மொழிபெயர்ப்பாளரோடு நான் அக் காட்சியைக் காணச் சென்றேன். ஒரு மூலையில் நின்று கவனித்தேன். கடையின் உள்ளே, தரையில் முழங்கால் படியிட்டு, கைகளைப் பின்னுல் கட்டிக்கொண்டு, தனது வேலையாட்களுக்குப் பணியும் முறையில் தலையைத் தாழ்த்திக் கொண்டு கடை முதலாளி நின்றுன். "அங்கு என்ன நடக்கின்றது?" என நான் வினவினேன். "ஒரு கூட்டம்" என்று பதிலளித்தார் மொழிபெயர்ப்பாளர். "என்ன கூட்டம்?" என்று கேட்டேன். மறுமொழி இல்லை.

அதேகாலையில், நதிக்கரையோரத்தில், ஒரு மரத்தடியில் அதே காட்சியை மீண்டும் கண்டேன். இளஞ் சிறுவர்களும் சிறுமிகளும் கைகளில் புத்தகம் பென்சிலுடன் எதையோ விவாதித்துக்கொண் டிருந்தனர். அவர்கள் அருகில் சென்று பேசினேன். நகரின் மறுபகுதியில் படிக்கும் மாணவர்கள் அவர்கள். மூன்று எதிர்ப்பு, ஐந்து எதிர்ப்பு, சான்பான்வுபான் ஆகியவற்றைக் கற்பதாகக் கேள்விப்பட்டேன். அவர்கள் ஊழல் பற்றியும், அதிகாரம் பற்றியும், வீணுவது பற்றியும் விவாதித்துக்கொண் டிருந்தனர். "நீங்கள் பள்ளியை விட்டு வந்து, இங்கே வீணுவதைப் பற்றிப் பேசுவது வீண்தானே?" என்று கேட்டேன். "பள்ளி மூடப்பட்டுள்ளது; தவிரவும், இது எங்கள் நாட்டுப் பற்றின் கடமை" என ஒருவன் பதிலளித்தான். எனது மொழிபெயர்ப்பாளர் பேச்சை முடித்துவிட்டு, "நடப்போம்" என்ருர்.

அதே நாளில் காண்டனில் பல தடவை அதைப் பார்த்தேன். சிறுவர் சிறுமியர், தொழிற்சாலைகளிலும் கடைகளிலும் இருக்கும் தொழிலாளர்கள் யாவரும் கைகளிற் கொடியுடன் கொட்டு முழக்கோடு ஊர்வலமாகச் சென்றனர். எங்கும் அது போன்ற ஊர்வலம் சென்றது. 'லஞ்சம், ஊழல் என்ற குற்றம் சுமத்தப்பட்டதற்காக வருந்தித் திருந்துவதைவிட, தற்கொலை மேலானது' எனச் சிலர் கருதினர். சீனர்கள் கூறினார்கள், 'அது அவர்களிடையே ஒழுக்கத்தை வளர்த்தது' என்று. மக்களைத் தூய்மைப்படுத்தும் மன்னிப்பின் ஆர்வம் அதிலிருந்தது; புனிதமாக்கும் அரசியலுணர்ச்சி அதனின்றும் வெளிப்பட்டது.

1951 தொடக்கத்தில், கியாங்ஸி என்ற மாகாணத்தில் ஜுசாவன் என்ற பகுதியில், கட்சி உறுப்பினரின் நடவடிக்கைகள் விரும்பத்தக்கன அல்ல என்று கண்டுபிடிக்கப்பட்டது. போலீஸ் தலைமை அதிகாரியும், பிரச்சாரம் செய்யும் உறுப்பினரும், இன்னும் பல கட்சி உறுப்பினர்களும் ஊழல் மிகுந்தவராகக் காணப்பட்டனர். ஆகவே, அவர்கள் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டனர். ஏப்ரலில் வரி தண்டும் அதிகாரிகளிடையே ஒரு சதி கண்டுபிடிக்கப்பட்டது. சுமார் முப்பத்தொரு கீழ் அதிகாரிகள் (கான்பஸ்) ஏறக்குறைய எழுநூறு கோடி யுவான்களைத் (பத்து லட்சம் யுவான்கள் பதினாறு பவுன்களுக்குச் சமம்; அல்லது நாற்பத்தைந்து டாலருக்குச் சமம்.) திருடியதாகக் கூறப்பட்டது. இவ் வழக்குகள் மற்றவர்களாலும் பின்பற்றப்பட்டன. போக்குவரவு இலாகாவில் பதினேழு கான்பஸ்கள் எண்ணூறு கோடி யுவான்களைத் திருடிவிட்டனர். கிழக்குச் சீனாவில் அதிகாரிகள் சிலர் இரண்டாயிரம் கோடி யுவான்களைத் திருடிவிட்டனர். கட்சியில் யாவும் ஒழுங்காக நடைபெறவில்லை என்பதை இவை எடுத்துக்காட்டின. ஆயிரக்கணக்கான புதிய உறுப்பினர்கள் கட்சியின் கொள்கைப் பலத்தைக் காற்றில் விட்டனர். திடீரென்று அதிகாரம் கைப்பற்றப்பட்டதால் பலவீனம் தோன்றியது. போராட்டத்தின் போதுள்ள புரட்சி ஆர்வம் குன்றியது. சீன மக்களை நெடுங்காலமாகத் துன்புறுத்திய ஊழல், மக்கள் வாழ்க்கை இன்பங்களை விரும்பியபோது மீண்டும் தலைதூக்கியது.

லியு ஷவோசி கருத்துப்படி, "கம்யூனிஸ்டுக் கட்சி அக் கால சமூகத்தின் முன்னேற்றத்தையும், அறிவையும் பிரதிபலிக்கின்றது. பொதுவுடைமைக் கட்சியைச் சார்ந்திருப்பவர்கள் யாவரும் உலகத்தின் அறிவும் திறமையும் திரண்ட மக்கள். அவர்களிடம் ஒழுக்கமும் நற்பண்பும் ஓங்கி விளங்குகின்றன." ஆனால், கட்சியில் தூய்மையும் ஒழுக்கமும் இருப்பதாகத் தோன்றவில்லை. நாடு முழுவதும் வதந்திகள் உலவின. ஏதாவது செய்து அதைத் தடை செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டது. எப்படிச் செய்வது என்பது பற்றி லியு கூறுகின்றார்: "சமூகத்திடையேயுள்ள மாசுகளைக் களையப் போராடுவதுடன், கட்சியின் உள்ளேயிருந்து, அதனைப் பலவீனப்படுத்தும் கேடுகள் பலவற்றைக் களைய வேண்டும். நெடுநாட் போராட்டத்தினால், கொள்கையைத் தவறாகப் புரிந்திருக்கும் தோழர்களைக் கல்வியாலும், குறை கூறுவதாலும் திருத்த முயல்கின்றோம்."

வடகிழக்கு மக்கள் அரசாங்கத்தின் தலைவரும், மக்கள் மத்திய அரசாங்கத்தின் துணைத் தலைவரும், கட்சியின் முக்கிய உறுப்பினரும், அஞ்சா நெஞ்சமும் நேர்மையுமுடையவருமான காவோகாங், கட்சியைப் புனிதப்படுத்த வேண்டுமெனக் குறிப்பிட்டார். 1951 ஆகஸ்டில் மஞ்சூரியாவில் கட்சித் தலைவர்களிடம் சொன்னார்: "வலதுசாரிகளின் கருத்தை, நிலச் சீர்திருத்தத்தின் பின்னர்க் கிராமங்களில் இருக்கும் பொருளாதார நிலையைக் கொண்டே மதிப்பிட வேண்டும். இப்பொழுது கிராமங்கள் நிலச் சீர்திருத்தத்தால் அபிவிருத்தி யடைந்து வருகின்றன; உழவர்கள் பலமடைகின்றனர்; வகுப்புப் பிரிவினையும் வளர்ந்து வருகின்றது; ஆகவே, தமக்குள் உதவி என்ற முறையில் உழவர்களை அமைத்தல் அவசியமில்லை; விவசாயக் கூட்டுறவு என்ற முறையில், தமக்குள் உதவிக் குழுக்களை உயர்த்துவதும் அவசியமன்று எனச் சில தோழர்கள் கருதுகின்றனர். இத் தருணத்தில் இயல்பாகவே வளர்ந்து வரும் உழவர் சக்தியைக் கட்டுப்படுத்த முடியாது எனச் சில தோழர்கள் எண்ணுகின்றனர். உழவர் தமக்குள் உதவும் குழுக்களையும், விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களையும் வளர்ப்பதும், படிப்

படியாக உழவர்களைக் கூட்டுப் பண்ணைக்குத் தயார் செய்வதும் கிராமக் கட்சி உறுப்பினர்கள் கடமையென அவர்கள் உணருவதில்லை. மாருக, கிராமங்கள் நன்னிலைக்கு வந்ததும், கூலிக்கு ஆட்களை ஏற்படுத்திவிட்டு, அவர்கள் பணக்கார உழவர்கள் ஆக வேண்டுவதே தம் கடமையென நினைக்கின்றனர்....

"இது, உழவன் உழைக்கும் வர்க்கத்தின் முதுகெலும்பு என்பதை மறுக்கும் பண்பு; உழைக்கும் வர்க்கம், உழவர்களின் தலைமையை ஒதுக்கிவிடுவதே இதன் விளைவு; அது நலிவையும், கிராமங்களில் வளர்ந்து வரும் முதலாளிக்குப் பணிவையும் காட்டுவதாகும்."

1951 அக்டோபரில் மக்கள் அரசியல் ஆலோசனை மாநாட்டின் மூன்ருவது கூட்டத்தில் பேசும்பொழுது மாசேதுங் சிக்கனத்தையும், உற்பத்திப் பெருக்கையும், கொள்கைத் திருத்தத்தையும் வற்புறுத்திஞர். முதலாளிகளும் தேசியப் பிரபுக்களும் கட்சியில் தலையிட்டு, லஞ்சம் வழங்கி அதனைக் கெடுக்கின்றனர் என்று அவர் குற்றம் சுமத்திஞர். பின் அவர் கூறிஞர் :

"இரண்டாவது தேசியக் குழுக் கூட்டத்தின் இறுதியில் நான் தன் குற்றம் கண்டு, பிறர் குற்றம் கூறித் தன்னைத் திருத்திக் கொள்ள வேண்டும் எனச் சொன்னேன். என் சொல் இப்பொழுது செயல்பட்டு வருகின்றது. ஜனநாயகச் சீர்திருத்தம் எல்லாத் துறைகளிலும் கொண்டு வந்து பின்னர், படிப்படியாக நாட்டைத் தொழில் மயமாக்குதற்குக், கொள்கை புது உருப்பெற வேண்டும். ஆகவே, இச் சுய கல்வி இயக்கத்தின் வளர்ச்சியில் வெற்றி பெறுவோம் என நம்புகின்ருேம்."

எனவே, கட்சிக் கொள்கையில் புகுந்துள்ள கேடுகளைக் களையவும், தவறிழைத்த உறுப்பினர்களை அகற்றவும் போராட்டம் தொடங்கிற்று. அந்த இயக்கம் ஸான்பான் அல்லது மூன்று எதிர்ப்பு இயக்கம் என அழைக்கப்பட்டது. முதலில் அரசாங்கத்தில் தொடங்கப்பட்டது. இம் முறை பொதுவுடைமைத் தத்துவத்தில் உள்ளது. பெரிய அதிகாரிகள் யாவரும் தம் குற்றம் கண்டு மன்னிப்புக் கோருமாறு அழைக்கப்பட்டனர். குற்றச்சாட்டுகளும், விளக்கங்களும் அவர்களுக்குக் கீழ்ப்பட்ட அதிகாரிகளிடமிருந்து பெறப்பட்டன. நான்கு மாதம் நிர்வாகம் செய

லற்று விட்டது. சிறிய அதிகாரிகள் அவரவர் இலாகாக் கூட்டங்களில் தங்களைப் பரிசோதனை செய்து கொண்டனர். குற்றம் சுமத்தப்பட்டவர்களால் மௌனமாகவும் இருக்க முடியவில்லை. ஏனெனில், அவர்களிடம் அவசியமற்ற கேள்விகள் கேட்கப் பட்டன. பின்னர், மன்னிப்புத் தரப்பட்டது. நீதி அமைச்சர் தமக்கு மலர் மீது மிகவும் விருப்பம் என்றும், அரசாங்கச் செலவில் தமது அலுவலகத்தில் நாள் தவறுமல் பூ வைத்திருந்த தாகவும் கூறி மன்னிப்புக் கேட்டார். அவர் ஒரு பெண்மணி. மாவும் சூவும் கூட குழுமுன் வந்து நின்று தங்களது குற்றங்களைத் தெரிவித்து மன்னிப்புக் கோரினர். 1952 ஜனவரியில் அரசாங்கத்தின் 27 இலாக்காக்களி லுள்ள 1670 அதிகாரிகள் தவறு செய்ததாகக் கண்டுபிடிக்கப்பட்டனர். அவர்கள் தங்கள் பிழைகளை ஒப்புக் கொள்ளுமாறு அழைக்கப்பட்டனர். அவர்களில் பலர் 'திருந்தக் கூடியவர்கள்' என்று கருதப்பட்டு, சிறு தண்டனையுடன் விடுவிக்கப்பட்டனர். தவறுகளை ஒப்புக் கொள்ள மறுத்தவர்கள், அல்லது கடுமையான குற்றம் புரிந்தவர்கள் மரண தண்டனை பெற்றனர்; அல்லது பணம் பறிமுதல் செய்யப்பட்டு வறுமையடைந்தனர்.

சீன வங்கிச் சிப்பந்திகள், வணிகர்களிட மிருந்து, பொருளாதார நுட்பங்களைத் தெரிவித்ததற்கு ஒரு கோடி யுவான்கள் பெற்றதாகக் கண்டுபிடிக்கப்பட்டனர். தியன்ஸ்டீனில் கட்சித் தலைவர்களான லின்சிங்ஷாவும், சாங்கத்ஸிஷானும் மரண தண்டனை விதிக்கப்பட்டனர். துறைமுகம் கட்டுவதற்கும், அகதிகள் உதவிக்கும் வைக்கப்பட்டிருந்த நிதியிலிருந்து 15,300 கோடி யுவான்கள், கட்சிச் செயலாளராக இருந்து கொண்டே திருடிவிட்டனர். பிப்பிரவரி முதல் தேதி பீகிங்கில் பொது மக்கள் விசாரணை நடந்தது. அப்போது ஏழு முக்கிய அதிகாரிகளும், கட்சி உறுப்பினர்களும் மக்களால் விசாரணை செய்யப் பட்டனர். பொதுப் பாதுகாப்பு மத்திய இலாகாவின் நிர்வாக அதிகாரியான சுங்தெஃகுவாய், ரயில்வேத் துறையின் மருத்துவக் குழு அதிகாரி மாயென், எஃகுத் தொழில் துறையின் அதிகாரி லூதர் ஆகியோர் தண்டனை பெற்றவராவர். அவர்களுள் ஷாங்காய் முதலாளியான செங்தாய் ரப்பர்த் தொழிற்சாலையின்

அதிகாரியும் ஆவார். அவர் அரசாங்கத்திட மிருந்து கூடுதலாகப் பத்து லட்சம் யுவான்கள் வாங்கிவிட்டார்.

ஷாங்காயில் இப் பொதுமக்கள் விசாரணையைத் திரைப்படத்தில் பார்த்தேன். இந்தியத் தூதுக் குழுவினர் விரும்பியபடி ஒரு தனிக் காட்சி ஏற்பாடு செய்யப்பட் டிருந்தது. அது புரட்சியின் போது பாரிஸ் நகரின் தெருக்களில் மொட்டை வண்டிகளின் ஒலியையும், கழுவிலேற்றும் குற்றவாளிகளைக் கண்டு சிரிக்கும் மக்களின் ஆரவாரத்தையும் நினைவூட்டியது. மேடைமீது சர்வ தேச நீதிமானுன சீனுவின் தலைமை நீதிபதி வீற்றிருந்தார். நிதி மந்திரியான போயிபோ, மத்திய ஒழுக்கப் பரிசோதனை இலாகாத் தலைவர், மறைமுகப் போராட்ட அமைப்பாளர் ஆகியோரும் உடனிருந்தனர். ஏழு குற்றவாளிகளும் முன்னுல் மக்களை நோக்கி நின்றனர். ஆயுதம் தாங்கிய படையினர் அவர்களை அழைத்து வந்து, அவர்கள் பின்னுல் நின்றனர். குற்றவாளிகள் தலைகளைத் தாழ்த்திக் கொண்டும், கைகளைப் பின்னுல் கட்டிக் கொண்டும் நின்றனர். அவர்கள் குற்றவாளிகள், நாட்டுத் துரோகிகள் என்று காட்டுவதற்கு அவர்கள் தோள்களி லிருந்து கால்கள் வரை நாடாத்துணி தொங்கவிடப் பட்டிருந்தது. குழுமியிருந்த ஆண்களும் பெண்களும் அக் குற்றவாளிகள் மீது தங்கள் குறைகளைக் கொட்டக் காத்திருந்தனர்.

போயிபோ, 'மேற் கூறியவர்களால் அரசாங்கத்திற்கு 450 லட்சம் டாலர்கள் நஷ்டம்' என்று உறுதியாகக்கூறினுர். "அதைக் கொண்டு 180 லட்சம் கட்டிகள் உணவுதானியம் வாங்கியிருக்கலாம். அதனுல் 2,80,000 பேருக்கு ஓர் ஆண்டிற்கு உணவளித்திருக்கலாம் ; அல்லது அமெரிக்க ஏகாதிபத்தியத்திற்கு எதிராக, பாதுகாப்பின் பொருட்டு 66 போர் விமானங்கள் வாங்கியிருக்கலாம்." அத் துரோகிகளின் உடலைச் சித்திரவதை புரிய மக்கள் முழங்கினுர்கள்.

போயிபோ தொடர்ந்தார் : "இது போன்ற ஊழல் நாடு முழுவதும் பரவி மலிந்து போனுல் மக்களிடம் மூலதனம் அற்றுப் போகும். அம் மூலதனத்தால் 10 புதிய தொழிற்சாலை

கள் கட்டலாம். 2000 முதல் 3000 மக்களுக்கு வேலை கிடைக்கும். அதனுல் நாட்டின் தொழில் வளர்ச்சியுறும்.” பின்னர் அவர் சாட்சிகளைப் பற்றிப் பேசினுர்; குற்றவாளிகளது கொடுஞ்செயல் களை விளக்கினுர். இடையிடையே மக்கள் பழிவாங்கும் உணர்ச்சி யில் கத்தினுர்கள். முன்னேற்பாட்டின்படி அவர்கள் கத்துவது போல் இருந்தது. அக் குரல்கள் முதலில் ஒரு மூலையில் தொடங்கி, பின்னர், கூட்டம் முழுவதும் பரவிற்று. வானெலி, திரைப்படம், டெலிபோன் யாவும் அக் கொடுமையைப் பரவச் செய்தன. மக்கள் தங்கள் வீடுகளிலிருந்தும் குற்றவாளிகளுக்கு மரண தண்டனை விதிக்குமாறு டெலிபோன் மூலம் பேசினுர்கள்.

பொதுவுடைமைத் தத்துவத்தின்படி நீதிமன்றங்கள், மக் கள் தீர்ப்பின் கருவிகளாக இருக்கின்றன. தீர்ப்புக் கூறியதும் மக்கள் குற்றவாளிகள் மீது கடுங்கோபம் கொள்கின்றனர். இது போன்ற பொதுமக்கள் விசாரணையெல்லாம் மக்களைப் பயமுறுத் துவதற்கே. அதனுல் மக்களின் உணர்ச்சிகள் குற்றவாளிக்கு எதிராகத் திருப்பிவிடப் படுகின்றன. போயிபோ தன் பேச்சை முடித்ததும் மக்கள் குற்றவாளிகளின் இரத்தத்தைக் கொண்டு தருமாறு கூச்சலிட்டனர். மக்கள் அவர்கள் மீது முட்டைகளையும், தக்காளிப் பழங்களையும், கற்களையும் எறிந்தனர். குற்றவாளி களால் தங்கள் முகங்களை நிமிர்த்தவோ, கூட்டத்தை அல்லது நீதிபதியைப் பார்க்கவோ முடியவில்லை. குற்றவாளிகளை யாரும் மறு விசாரணை செய்யவில்லை. அவர்கள் குற்றங்களுக்குப் பதில் அளிக்கும் வாய்ப்புக் கூடக் கிடைக்கவில்லை. தலைமை நீதிபதி எழுந்து, இருவருக்கு மரண தண்டனை விதித்தார்; நால்வருக்குச் சிறைத் தண்டனை யளித்தார்; ஒருவனை விடுதலை செய்தார். அவன் உடனே கூட்டத்தில் கலந்து கொண்டு கூச்சலிட்டான். இயக்கம் இவ்வாறு துவக்கமாயிற்று. பீகிங் நகரசபைத் தலைவர் பெங்செள் அவ் வியக்கத்தை நடத்தி வந்தார். ஸான்பான் இயக் கம் ஊழல், வீணுக்குதல், காலங்கடத்தல், ‘பிரபுக்கள் மனப் பான்மை’, சரிவர வேலை செய்யாதிருத்தல், ஆடம்பர வாழ்க்கை, பொது மக்களைக் கீழாக மதித்தல் ஆகியவற்றிற்கு எதிராகத் தொடங்கப்பட்டது. குற்றங்களை ஏற்றுக் கொள்ளுதல், தன் குற்றம் தெரிதல், பொதுமக்கள் விசாரணை, பின்னர்க் குற்றம் சுமத்துதல் ஆகியவை அதன் முறைகள்.

பீகிங் விசாரணையைப் போன்று தியன்ஸ்டீனிலும், நாங்கிங்கிலும், வுகானிலும், ஷாங்காயிலும், பிற இடங்களிலும் விசாரணைகள் நடைபெற்றன. விநோதமான குற்றச்சாட்டுகள்; மக்களைப் பயமுறுத்தும் தண்டனைகள்! கியாங்ஸி மாகாணத்தில், சிங்ஸி என்ற இடத்தில், ஏழு அதிகாரிகள் 'பிற்போக்கான புரட்சிப் பகைமையுள்ள பிரபுக்களின் புதல்விகளை' மணந்து கொண்டதற்காக, அவர்கள் பதவி குறைக்கப்பட்டது. 1951 அக்டோபர் முதல் நாள் விழாவிற்கு, வெளிநாட்டுத் தூதுக் குழுவினரைக் கவரும்பொருட்டு உடையணிந்து வீண்செலவு செய்ததாக ஓர் அதிகாரி தண்டிக்கப்பட்டார். (இந்தியக் குழுவின்முன் யாரும் ஆடம்பர உடையில் வரவில்லை.) அதிகாரி ஒருவர் தமது காரில் நாட்டியம் பார்த்துவிட்டு ஒரு மாதை அழைத்துச் சென்றதாகக் காரோட்டி முறையிட்டான். கட்சியில் வேலை சரியாகச் செய்யாததற்காகப் பதினறு கட்சி அலுவலாளர்கள் வேலையினின்றும் தள்ளப்பட்டனர். கட்சியின் செயலாளர் நீந்தும் குளம் அமைந்த ஒரு பெரிய மாளிகையில் வசித்ததாகக் குற்றம் சுமத்தப்பட்டார். மற்றோர் அதிகாரி தனிப்பட்ட தோட்டங்கள் அமைப்பதாகவும், நடன சாலைகளுக்குச் செல்வதாகவும், பெண்களுடன் காம லீலை புரிவதாகவும் குற்றங் கண்டு பிடிக்கப்பட்டார். இன்னோர் அதிகாரி, தமது பேனா தொலைந்ததைப் பற்றி அலவலகத்தின் முன் அறிக்கை வெளியிட்டதாகவும், அந்த அலுவலகத்திற்கு வரும் தரகர்களிடமிருந்து ஐந்து 'பார்க்கர் 51' பேனாக்கள் பெற்றதாகவும் கூறப்பட்டது.

நான்கு மாதங்கள் சீனாவின் இளம் நிர்வாகம் உலைக்கப்பட்டது. குட்டி அதிகாரிகள் இத்தகைய தூய்மைப்படுத்தும் பணியில் ஈடுபட்டிருக்கும் போது ஒரு வேலையும் நடக்கவில்லை. இவ் ஒழுக்கப் புனரமைப்பின் விளைவுகளை நான் மறு முறை சீனா சென்றதும் கண்டேன். எந்த அதிகாரியும் தாமாக ஒரு முடிவுக்கும் வரமுடியாது. ஒவ்வொரு விஷயமும் மேலதிகாரிககளுக்கு அனுப்பப்பட்டது. அதனால் அதிகாரங்கள் மேலே குவிந்து வேலையின் தரமும் தாழ்ந்தது. எல்லாவகையிலும் தாமதம் ஏற்பட்டது. இந்தியத் தூதுக் குழுவினருக்குள்ள ஏற்பாடுகள் தாமதப்படுத்தப்பட்டுக் குழம்பிவிட்டன. பீகிங் வெளி

நாட்டு அலுவலகத்தின் ஆணைப்படியே பதில்கள் தரப்பட்டன. நான் இருமுறையும் சென்ற போதுள்ள வேறுபாடுகள் தெளிவாகத் தோன்றின.

ஸான்பான் இயக்கம் கட்சியையும், ஆட்சியையும் தூய்மைப் படுத்துவதுடன் நிற்கவில்லை. குட்டி அதிகாரிகள் மீது செலுத்தப்பட்டு வந்த வெளி ஆதிக்கம் வெளிப்படுத்தப்பட்டது. பிப்ரவரி விசாரணையின்போது தனிப்பட்ட முதலாளிகள் தண்டிக்கப்பட்டதால் இவ் வெளி ஆதிக்கம் குறைக்கப்பட்டது. கட்சியின் உள்ளே இருக்கும் போராட்டம் கட்சியின் வெளியேயுள்ள வர்க்கப் போராட்டத்தின் விளைவே என்பது கம்யூனிஸ தத்துவம்.

மெலிந்து வெளிறிய தோற்றமுடைய லியோஷவோசி, கட்சியின் தத்துவ வல்லுநர். மயோயிஸத்தையும் ஸ்டாலினிசத்தையும் ஒன்றுபடுத்தி அவற்றினிடையே வேறுபாடு இல்லை என்பதைக் காட்டுதலே அவர் வேலை. அவர் இவ் விளைவுகளை 1941-ல் அறிந்திருந்தார். அப்போது அவர் எழுதினார்: "கட்சி தோன்றிய நாள் முதல் அதற்குப் போராட்டமில்லாத நாள் இல்லை. கட்சியும் உழைக்கும் வர்க்கத்தினரும் எப்பொழுதும் பிரபுக்கள், சிறு பிரபுக்கள், உழவர்கள் ஆகிய உழைக்காத வகுப்பினரிடையே வாழ்ந்து வந்தனர். அவ் வகுப்பினர், கட்சியிலும், உழைக்கும் வர்க்கத்தினரிடையிலும் உள்ள பலவீனங்களைப் பயன்படுத்தி, அவற்றில் தலையிட்டு எல்லாவகையிலும் ஆதிக்கம் செலுத்துகின்றனர். ஆகவே, கட்சியின் உள் போராட்டம் கட்சியின் வெளியே யிருக்கும் வகுப்பினர் போராட்டமே" என அவர் முடித்தார்.

1949 ஜூலையில் பொதுவுடைமைக் கட்சியில் பேசும்பொழுது மா குறிப்பிட்டார்: "மக்கள் யார்? சீனாவின் இன்றுள்ள நிலையில் மக்களெனப்படுவது, உழைக்கும் இனம்; உழவர்கள், சிறு பிரபுக்கள், தேசியப் பிரபுக்கள் ஆகியோர். ஜனநாயக சர்வாதிகாரத்தை உருவாக்குவதற்கு இவ் வினத்தாரிடையே ஒற்றுமை வேண்டும். அது இல்லாவிடில் புரட்சி தோல்வியடையும்; மக்கள் வருந்துவர்; நாடு அழியும். இவ் வின ஒற்றுமையே மக்கள் முன்னணியென வழங்கப்பட்டது. இதனை

ஐரோப்பியர் நன்கறிவர். இப்பொழுது புரட்சி வெற்றி யடைந்தது;ஒற்றுமையின்மை பொதுவுடைமையாளர்க்குத்தடை யாக இருந்தது. பொருளாதாரத் தாழ்வை அகற்ற, பிரபுக்களின் செல்வம் தேவைப்பட்டது. நூற்றுண்டுகளாகச் சீன மக்கள் தயோயிஸத் தனியுடைமையில் நம்பிக்கை உள்ளவர்கள். அந் நம்பிக்கையை ஒழிக்கவும், சர்வாதிகாரத்தை நிலை நாட்டவும், கம்யூனிஸ்டுகள் உழைப்பாளர் புரட்சியை விரும்பினர்.

புரட்சிக்குப் பின், நிலையான அரசாங்கத்தை ஏற்படுத்து முன், கோமிண்டாங் ஆட்சியை ஒழிக்க எண்ணிய மக்களால் ஒரு தற்காலிக ஒற்றுமை ஏற்பட்டது. ஸான்பான்வுபான் இயக்கங்கள், 1949-ஆம் ஆண்டின் ஜனநாயகப் புரட்சியின் முடிவையும், பொதுவுடைமை அரசாங்க அமைப்பையும் எடுத்துக் காட்டின. இது, மென்ஷிவிக்கர்களைப் போல்ஷிவிக்கர்கள் துரத் தியது போன்றதாம்.

இவ் வியக்கத்திற்கென நாட்டின் செல்வமனைத்தும் சொரியப் பட்டது. செய்தித் தாள்கள், வானொலி, திரைப்படங்கள், பொது மக்கள் விசாரணைகள், ஊர்வலங்கள், கூட்டங்கள், முழக்கங்கள் யாவும் பயன்படுத்தப்பட்டன. வாணிகத் தொழிலாளர்கள், தொழிற்சாலை மக்கள், வீட்டு மனைவியர், செல்வர்கள், செல்வி கள், வீட்டு வேலைக்காரர்கள், மாணவர்கள் யாவரும் முதலாளி கள், பெற்றோர், கணவர்கள், ஆசிரியர்கள் ஆகியோருக்கு எதிராகச் சாட்சி கூற அழைக்கப்பட்டனர்.

பிப்ரவரி முதல் நாள் நடந்த விசாரணை தேசியப் பிரபுக் களுக்கு ஓர் எச்சரிக்கையாக அமைந்தது. முதலில் அவர்கள் ஒன்றுபட்டு எதிர்க்கத் துணிந்தனர். ஆனால், ஷாங்காய் வாணிகர்கள், தியன்ஸ்டீன் முதலாளிகள் அவ் வெதிர்ப்பால் விளையும் பயனை அறிந்திருந்தனர். ஆகவே, அவர்கள் பயந்து தாங்களாகவே வுபான் (ஐந்து எதிர்ப்பு) என ஓர் இயக்கத்தைத் தொடங்கி அவர்களிடையே யுள்ள கேடுகளைக் களைய முன் வந்தனர். பின்னால் நடந்தவை ஊழல்களைக் களையவில்லை.

வுபான் என்பது ஐந்து பாதகங்களை எதிர்க்கும் இயக்கம். அவை: (1) இலஞ்சம், (2) அரசாங்கச் சொத்தைத் திருடுதல்,

(3) அரசாங்கத்தை ஏமாற்றுதல், (4) சொந்த நன்மைக்காகப் பொருளாதாரச் செய்திகளைப் பெறுதலும், அவற்றைப் பயன் படுத்தலும், (5) வரி கொடாதிருத்தல். ஒவ்வொரு கடையும், வாணிக நிலையமும், தொழிற்சாலையும், தனது குற்றங்களை ஒப்புக்கொண்டு, தானே திருந்திக்கொள்ள வேண்டும். பல தொழில்களிலும் ஒரு குழு அமைக்கப்பட்டுத் தங்கள் இனத்த வரைப் பரிசோதனை செய்தனர். கடைகளும், வாணிக நிலையங் களும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பகுதிக்கும் ஓர் ஒழுக்கப் பரிசோதனைக் குழு அமைக்கப்பட்டது. தங்கள் குற்றங்களை இக் குழுக்களுக்கு அவர்கள் அனுப்பினார்கள். பின்னர் அங்குள்ள தொழிலாளர்கள் அழைக்கப்பட்டு, அவர்கள் முதலாளிகளின் தவறுகளைப் பரிசோதனை செய்யுமாறு கேட்கப் பட்டனர். பின்னர் முதலாளிகளின் விசாரணை நடைபெற்றது. மக்களும், மனைவிகளும், வேலையாட்களும் சாட்சி கூற வர வழைக்கப்பட்டனர். அவர்கள் உண்மையும் கற்பனையும் கலந்த குற்றங்களைத் தலைகுனிந்து நிற்கும் குற்றவாளிகள் மீது சுமத்தினர்.

தியன்ஸ்டினில் ஒரு வியன்பொருள் வாணிகனுடைய வழக்கை நான் கேள்விப்பட்டேன். அவனது கடை பெயர் பெற்றது. புரட்சிக்கு முன் அக் கடையின் கிளைகள் உலக நகரங்களில் இருந்தன. அக் கிளைக் கடைகள் யாவும் தம் மிச்சை போல் நடந்தன. முதலாளிக்கு அவற்றின் மீது ஓர் அதிகாரமும் இல்லை. எழுபது வயதிற்கு மேலான அவனுக்கு எல்லாக் கிளைக் கடைக் கணக்குகளையும் கொண்டுவருமாறு ஆணைபிறந்தது. அவன் கொடுக்கத்தவறிய வரியையும் செலுத்து மாறு கட்டளையிடப்பட்டது. அவன் தனது இயலாமை குறித்துக் கெஞ்சினான். சிறையிலடைக்கப் பெற்றான். ஒரு நாள் கைகள் பின்னால் கட்டப்பட்டுக் கழுத்தில் கயிறு மாட்டப்பட்டு வீதி களின் வழியே இழுத்துச் செல்லப்பட்டான். அவன் 'தான் குற்றவாளி' என எழுதப்பட்ட அட்டையையும் சுமந்து சென்றான். பின்னர் ஒரு மாதத்திற்குப் போலீஸ் கண்காணிப் பில் விடுதலை செய்யப்பட்டான். அப்போதும் அவனது வெளி நாட்டுக் கிளைகளின் கணக்குகளைக் கொடுக்குமாறு வற்புறுத்தப்

பட்டான். இல்லாவிடில் உயிரிழக்க நேரிடும் என பயமுறுத்தப் பட்டது. பாவம்! ஒரு மாத காலம் முடிந்ததும், அவன் தனது மரணப் படுக்கையில், தூக்கிச் செல்வாரை எதிர்நோக்கிக் கிடந்தான்! ஷாங்காயில் ஒரு சிறிய கடைக்காரன் ஒரு பொதுக் கம்பெனியில் பங்குகள் வாங்கினுன். அக் கம்பெனியில் அவன் பங்காளியானதன் துயரை அனுபவித்தான். ஏனெனில், அக் கம்பெனியின் நிர்வாக அதிகாரி அரசாங்கத்திட மிருந்து பல லட்சங்கள் அதிகமாக வாங்கிவிட்டதாகக் கூறப்பட்டது. அக் கம்பெனியிட மிருந்து பறிமுதல் செய்ய ஆணையிடப்பட்டது, அதனுல் அக் கம்பெனியின் லாபத்தில் பங்கு பெற்ற பங்காளி களின் சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டன. அக் கம்பெனிக் காகஇந்தக் கடைக்காரன் மட்டும் 2,800டாலர்கள்கொடுக்குமாறு வற்புறுத்தப்பட்டான். கொடுப்பதற்கு அவனிடம் வழியில்லை. விரைவில் அவனிடம் இருப்பதை விற்றுக் கொடுக்குமாறு வற் புறுத்தப்பட்டான். தாமதப்படுத்தும் ஒவ்வொரு நாளும் சுமை அதிகரிக்கும்.

மக்கள் தங்கள் மீது விதிக்கப்பட்ட கடுந் தீர்வையைக் கொடுப்பதற்குத் தங்களிடமுள்ள பொன்னை விற்றுர்கள். விற்ப தற்கு ஷாங்காயிலுள்ள மக்கள் வங்கியின் முன்னுல் வரிசை யாக நின்றனர். அவர்கள் நாட்கணக்கில் அங்கு நின்றனர். கடைசியில் அரசாங்கம் அவர்கள் கடனுக்குப் பதில் பொன்னை வாங்கிக் கொண்டது. இவ்வாறு பிரபுக்களின் சேமிப்பு யாவும் பறிமுதல் செய்யப்பட்டன; பலர் தங்கள் தொழிலை நடத்த முடியாது, வறுமையில் தள்ளப்பட்டனர்.

தியன்ஸ்டீனிலும், ஷாங்காயிலும், காண்டனிலும் பல தொழிலதிபர்கள் இக் கொடுமையைத் தாங்க முடியாமல், தங்கள் சொத்திலிருந்து அரசாங்கம் கேட்கும் தொகையைக் கொடுக்க முடியாமல் தற்கொலை செய்து கொண்டதாக நான் கேள்விப் பட்டேன். வீட்டின் மேலிருந்து கீழே குதித்தும், ஆற்றில் விழுந்தும் தங்கள் உயிரை மாய்த்தனர் பலர். அப் பிணங்களை எடுக்க விரையும் கார்களின் சங்கு அலறலை நாள்தோறும் எச் சமயத்திலும் கேட்கலாம். ஷாங்காயில் இறந்தவர் எண்ணிக்கை இருநூறு முதல் இரண்டாயிரம் வரை இருக்கலாம். நகரத்

தின் மற்றப் பகுதிகளில் என்ன நடந்தது என்பதைப் பற்றி யாரும் கூறுவதில்லை. காண்டனில் குறைந்தது ஐந்நூறு பேர் நாள்தோறும் தற்கொலை செய்துகொண்டனர் என அறிந்தேன்.

வுபான் இயக்கத்தின் பரிசோதனையின் பின்னர் ஒவ்வொரு நிறுவனமும் கீழ்க்காணும் பிரிவு ஒன்றில், சேர்க்கப்பட்டுப் பத்திரமும் வழங்கப்படும். (1) சட்டத்திற்குக் கட்டுப்பட்டது, (2) அடிப்படையாகச் சட்டத்திற்குக் கட்டுப்பட்டது, (3) சட்டத்திற்குப் பகுதி கட்டுப்பட்டது, (4) சட்டத்தை மீறுவது, (5) சட்டத்தைத் தீவிரமாக மீறுவது. இரண்டாவது பிரிவில் உட்பட்ட நிறுவனங்கள், 20 லட்சம் யுவான்களுக்குக் (90 டாலர்) குறைந்த லாபத்தைத் தம்முடன் வைத்துக்கொள்ள அனுமதிக்கப்படும். மூன்ருவது பிரிவினர், லாபம் முழுவதையும் அரசாங்கத்திடம் சேர்க்க வேண்டும். நான்காவது பிரிவினர், சட்டத்திற்குப் புறம்பாக ஈட்டிய லாபத்தையும் அதற்கு மேல் அரசாங்கம் விதிக்கும் தீர்வையையும் செலுத்த வேண்டும். சிறைவாசமும், மரண தண்டனையும் ஐந்தாவது பிரிவிலுட்பட்டவர்களுக்குத் தரப்படும். 1952 அக்டோபர் இரண்டாம் நாள் ஒரு கட்டளை பிறந்தது. அதன்படி தண்டனைத் தொகைக்கு ஏற்றவாறு ஓர் ஆண்டு முதல் ஆயுள் தண்டனை வரையென நிர்ணயிக்கப்பட்டுள்ளது. (1) மன்னிப்பு வேண்டல், (2) குற்றம் வெளிப்பட்ட பின் மன்னிப்பு வேண்டல், (3) மற்றவர் குற்றங்களைக் காட்டுதல், (4) இளமை ஆகியவற்றிற்கேற்பக் குற்றத்தின் தன்மை வேறுபடுத்தப்பட்டது.

ஸான்பான் இயக்கத்தின்படி தண்டனை மிகக் கடுமையாக இருந்தது. ஒரு கோடி யுவான்களுக்கு (450 டாலருக்கு) மேற்பட்டுத் திருடப்பட்டால், அதற்குச் சிறைவாசமும், மரண தண்டனையும், சொத்துப் பறிமுதலும் செய்யப்பட்டது.

தியன்ஸ்டினில் இரண்டாவது பகுதியில் நகர ஒழுக்க விசாரணைக் குழு 4000 நிறுவனங்களில் நடத்திய விசாரணை அறிக்கை என்னிடம் உள்ளது. அது தியன்ஸ்டினில் 1952 ஏப்ரல் 23-இல் வெளியிடப்பட்ட 'சீன ஆங்கில அறி'விலிருந்து எடுக்கப்பட்டது. அதன் ஒரு பகுதி பின் வருமாறு:

தொழில் வாணிப நிறுவனங்களில் குழு நடத்திய விசாரணையின் போது 4000 நிறுவனங்களுக்கு மேல் பரிசோதனை செய்யப்பட்டு அறிக்கையும் வெளியிடப்பட்டது. அதில் கண்ட புள்ளி விவரங்களின்படி சட்டத்திற்குக் கட்டுப்பட்ட 460 நிறுவனங்களும், அடிப்படையாகச் சட்டத்திற்குக் கட்டுப்பட்ட 2672 நிறுவனங்களும், சட்டத்திற்குப் பகுதி கட்டுப்பட்ட 84 நிறுவனங்களும், மொத்தம் 3216 நிறுவனங்களாக இருந்தன. மிஞ்சியுள்ள நிறுவனங்கள் பற்றி ஆழ்ந்து கவனமாக ஆராயப்படுகின்றது. இன்று வரை மேற் கூறிய மூன்று பிரிவினர் பரிசோதனை முற்றுப் பெற்றது. இன்னும் பல நிறுவனங்கள் பார்வையிடப்படவில்லை. அவை கௌரவமாக முன் வந்து தங்கள் குற்றங்களுக்கு மன்னிப்புக் கோராமல் போனால், தண்டனையடைய நேரிடும்.

சீனப் புரட்சி வெற்றி பெற ஓரளவு பாடுபட்டவர்களும், சியாங்கை அகற்ற ஒத்துழைத்தவர்களுமான, தொழில் வர்த்தக வகுப்பினரைப் பணியச் செய்த போராட்டத்தின் ஒரு மூலையைத் தான் நான் கண்டேன். வுபான் இயக்கம், ஆட்சி புரியும் கட்சியால் எல்லா வர்க்கத்தினரையும் வலிமை இழக்கச் செய்யும் முயற்சி. மக்களின் கருத்தே நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டது என அவர்கள் உணருமாறு விழிப்பூட்டப்பட்டனர். என்ன நடைபெறுகின்றது என்பது அவர்களுக்குத் தெரியாது. மக்களின் உணர்ச்சி வெள்ளம் திறந்து விடப்பட்டதும், நாட்டில் ஏற்படும் முக்கிய மாறுதல்களை அவ் வுணர்ச்சிப் பெருக்கில் செய்து விடுகின்றனர்.

அத்தகைய செய்கைகளால் தங்கள் நோக்கமும் நம்பிக்கையும் புத்துயிர் பெறுகின்றன என்று சிலர் கூறினார்கள். தனது தவறுகளைத் தன் தொழிலாளர்களுக்குக் கூறி மன்னிப்புக் கோரிய பின்னரே சிக்கலறுபட்டு, மகிழ்வுற்றதாகப் பீகிங்கிலுள்ள ஒரு பல் மருத்துவர் என்னிடம் சொன்னார். முன் செய்த தீவினை யாவும் மாய்ந்து விடுகின்றன. உலகப் புகழ் பெற்ற சீன தத்துவப் பேராசிரியர் ஒருவர் தமது முன்னாள் அறிவெல்லாம் தவறு என்றும், தமது தத்துவங்கள் உண்மை

யற்றவை, ஊறு பயப்பவை என்றும் ஒப்புக் கொண்டார். இத்தகைய தூய்மை வினை, தற்காலிகமாக மனத்திற்குத் தீவினைகளிலிருந்து விடுதலையை அளிக்கின்றது. ஆனால், பொதுமக்கள் முன்பு மன்னிப்புக் கோருவதால் உண்டாகும் பயம் தவிர வேறு நிரந்தரமான விளைவைக் கொடுக்காது. கடவுள் அல்லது மனச்சான்று நிரப்பிய இடத்தை 'மக்கள் நலன்' கைப்பற்றி எல்லா மனித உறவுகளையும் கீழ்ப்படியச் செய்கின்றது. ரயில்வே அலுவலகத்திலுள்ள ஐந்து திருட்டு அதிகாரிகளைப் பிப்பிரவரியில் அவர்கள் குடும்பத்தினரே காட்டிக் கொடுத்தனர். மனிதப் பண்பு அழிந்து விட்டது!

கட்சியைப் புனிதப்படுத்துவதற்கும், அரசாங்க ஊழல்களை அகற்றுவதற்கும் தொடங்கப்பட்ட இயக்கம், தேசியப் பிரபுக்களை எதிர்க்கும் போராட்டமாக வளர்ந்து, அவர்களை அழிக்கும் நிலையை எய்திற்று. இதனால் எத்தகைய பொருளாதார விளைவுகள் நேரும் என்பதை இனிமேல்தான் பார்க்க வேண்டும். கட்சியையும், சமூகத்தையும் தூய்மைப்படுத்துவதற்குத் தொடங்கப்பட்ட இயக்கம் அதற்கு மேலும் சென்று விட்டதைத் தலைவர்களும் உணர்ந்தார்கள். ஆகவே, அவ் வியக்கத்தை நிறுத்திவிட ஏப்பிரலில் முயற்சித்தனர். மே நாள் விழாவும், பல வெளிநாட்டு விருந்தினர்களும் வந்தமையால் அது விரைவில் ஒடுக்கப்பட்டது.

சீனப் புரட்சியின் இரக்கமற்ற இப் போராட்டத்தை அடக்குவதற்கு வேறு காரணங்களும் இருக்கலாம். அண்மையில் போர் மூளும் எனக் கம்யூனிஸ்டுகள் கருதினர். ஆகவே, முழுத் தேசிய ஒற்றுமையும் கேடுகளைக் களைதலும் அவசியம் எனச் சீனர்கள் உணர்கின்றனர். மா தேசியப் பிரபுக்களை, " நல்லொழுக்க மில்லாதவர் ; தீர்க்க தரிசனமும், அஞ்சாமையையும் அற்றவர் " எனக் குறிப்பிட்டார்.

ஸான்வுபான் இயக்கங்களுக்குச் சர்வ தேச முக்கியத்துவம் தந்தனர் சூயென்லாயும் பிற சீனர்களும். அவற்றிற்கு எத்தகைய முக்கியத்துவம் உளது என்று விளங்கவில்லை, ஆனால், இப்போதுள்ள இயக்கங்கள் 1952 பிப்ரவரி முதல் நாள்

தொடங்கப்பட்டவை என்பதைக் கவனிக்க வேண்டும். பிப்பிரவரி 22-இல் சீனு, அமெரிக்காமீது கிருமிப் போர் என்ற குற்றத்தைச் சுமத்தியது. இவ் விரண்டு இயக்கங்களுக்கும் ஒரு தொடர்பு இல்லையாயினும் அவை உள்நாட்டில் மக்களை ஒற்றுமைப்படுத்த உதவுகின்றன; உலகப்போர் மூண்டால் வெளிநாடுகளிலிருந்து பல ஆதரவாளர்களையும் ஐந்தாம் படையினரையும் தன்பால் இழுக்க உதவுகின்றன.

# 4. கிருமிப் போர்

எனது இரண்டாவது சுற்றுப் பிரயாணம் முடியும் தறு வாயில், எங்கள் குழு 'போர்க் கண்காட்சியை'க் காணப்போவ தாக அறிவிக்கப்பட்டது. அது 'கிருமிப் போர்' பற்றியதாக இருக்குமென்று நான் நினைக்கவில்லை. சீன அரசாங்கம் உலகப் பிரச்சினையாக்கத் திட்டமிட்ட ஒரு விஷயத்தை நேரில் கண்டறியப் போகிறேன் என்பதனால் மிகவும் களிப்புற்றேன். கிருமிப் போர் என்ற குற்றச்சாட்டு செய்திதான். கண்காட்சிப் பார்வையாளர்களுக்கு அது உண்மையென நிரூபிக்கும் முயற்சி.

கண்காட்சி மூன்று பகுதிகளையுடையது. முதற் பகுதி அமெரிக்கா கிருமிப் போர் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருப்பதாகக் காட்டும் முயற்சி. அமெரிக்கா அதன் தன்மைகளையும் முடிவு களையும் ஆராய்வதாகக் காட்டுதற்கு, அமெரிக்கப் படையினர், பத்திரிகைகள், விஞ்ஞான நூற்கள், செய்தி ஏடுகள் ஆகியவை காட்டப்பட்டன. ஜெனரல் ரிட்ஜ்வே இறந்த வியாதி பற்றிய பூச்சிகளை விதைப்பதற்கு முயல்கின்றார் என்பதற்கு ஆதாரமாக, 1935-36-இல் ஹார்பினில், ஜப்பான் ஆராய்ச்சித் துறையில் இருந்த ஷிரோ இஷி, ஜிரோ வாக்கநாத்ஸு என்ற இரு ஜப்பா னிய அதிகாரிகளைக் கொரியாவில் நியமிக்கப்பட்டதைப் பெரி தாகக் காட்டினார்கள்.

இரண்டாம் பகுதியில், அறைகள் உள்ள குண்டுகள், பார சூட்டிலிருந்து போடும் அட்டைப் பெட்டிகள், பீங்கான் குண்டு களின் துண்டுகள், குண்டுகளின் வெளிப்பாகங்கள் யாவும் வைக்கப்பட்டிருந்தன. இவை யாவும் தொத்துநோய் பீடித்த ஈக்கள், கொசுக்கள், பிற பூச்சிகள் ஆகியவற்றுடன் வட கொரியாவிலும் மஞ்சூரியாவிலும் போடப்பட்டதாகக் கூறினார் கள். அந்தக் குண்டுகள் போடப்பட்ட இடங்களைப் புகைப்படம் எடுத்து, அப் படங்களைச் சுவரில் மாட்டியிருந்தார்கள். வெள்ளை மேலங்கி, ரப்பர் பூட்ஸ்கள், முகமூடிகள் இவற்றை அணிந்த குழுவினர் அங்கு விசாரணை நடத்துவதையும் படம் எடுத்து

வைத்திருந்தனர். அக் குண்டுகள் வீசப்பட்ட தேதி, விசாரணை நடத்திய தேதி யாவும் அப் படங்களில் இருந்தன. ஒரு படம் என் கவனத்தை ஈர்த்தது. அது பூஷன் பந்தய மைதானத்தின் படம். அங்கு 1952 பிப்பிரவரியில் குண்டு எறியப்பட்டதாகக் கூறப்பட்டது. அதை விசாரணைக் குழுவினர் மார்ச்சு 24-ஆம் தேதி முகமூடி, அங்கி ஆகியவற்றுடன் விசாரணை செய்யச் சென்றதாகச் சொன்னார்கள்.

அவ் வறையின் மூலையில், இரு அமெரிக்க விமானிகள் தங்கள் குற்றங்களை ஒப்புக்கொண்டதை மின் நாடாவில் பதிய வைத்து, அதனை ஒலிபெருக்கி மூலம் பரப்பினார்கள். அவர்களது விமானம் கொரியாவில் வீழ்த்தப்பட்டபோது, அவர்கள் கைதிகளாக்கப்பட்டனர். கென்னத் ஈனக், ஜான் குயின் என்ற இரு விமானிகளும் அந்த மின் நாடாவில் கொடுத்த வாக்குமூலம் இதுதான்: அவர்கள் ஜனவரி 4-ஆம் தேதி முதல் ஜனவரி 13-ஆம் தேதி வரை பல தடவை வடகொரியாவின் மேல் பறந்து பல குண்டுகளை வீசினார்கள். அக் குண்டுகளில் நச்சுக் கிருமிகள் இருந்ததாகக் கூறப்பட்டது. இத் தேதிகளுக்கு முன்னால் அவர்களுக்குக் கிருமிப் போர் பற்றிச் சொற்பொழிவுகளும், பயிற்சியும் கொடுக்கப்பட்டது. அமெரிக்கர்கள் இக் கிருமிப் போருக்கு இசைவார்கள் என்று நினைக்கவில்லை. அவர்களுக்கு உண்மை தெரியாது. அதன் பக்கத்தில் ஒரு கண்ணாடிக் கூட்டில் அவ் விருவர்களால் எழுதப்பட்ட வாக்கு மூலங்கள் வைக்கப்பட்டிருந்தன. கொரியாவிலுள்ள அமெரிக்கப் படையினர் மீது சுமத்தப்பட்ட குற்றங்களை இந்த உண்மைகள் நிரூபித்தன.

மூன்றாவது பகுதியில் வரிசையாக உருப்பெருக்கிகள் வைக்கப்பட்டிருந்தன. அவற்றில் பல நச்சுக் கிருமிகள் வைக்கப் பட்டிருந்தன. அந் நச்சுக் கிருமிகள் அது வரையிலும் கொரியா வில் கண்டிராத கரப்பான் பூச்சிகள், மூட்டைப் பூச்சிகள், ஈக்கள், கொசுக்கள், சிலந்திகள், வண்டுகள், இன்னும் பல பூச்சிகள் ஆகியவற்றிலிருந்து எடுக்கப்பட்டதாகக் கூறப் பட்டது. அக் கிருமிகளின் படங்களும் உருவங்களும் செய்து வைக்கப்பட்டிருந்தன. அத்துடன் 'பிளேக்' நோயால் பீடிக்கப்

பட்ட மூவரின் படங்கள் வைக்கப்பட்டிருந்தன. அமெரிக்க விமானங்களிலிருந்து வீசப்பட்ட ஈக்கள் மூலமாக அந் நோய் தொத்திக் கொண்டது என்று கூறப்பட்டது. பின்னர் அக் கிருமிப் போராட்டத்தை எதிர்ப்பது பற்றிய விளம்பரங்கள் சுவரில் ஒட்டப்பட் டிருந்தன.

கடைசியாக ஒரு பெரிய சுவரொட்டியில், 1952 மார்ச்சு 28-க்கும் 31-க்கும் இடையில், கொரியா வட சீனு நாடுகளின் 70 நகரங்களில் 804 கிருமி விமானங்கள் படையெடுத்ததாகக் காட்டப்பட் டிருந்தது. ஒவ்வொரு படத்திலும், சுவரொட்டியிலும் சீன மொழி, ருஷ்ய மொழி, ஆங்கிலம் ஆகிய மூன்று மொழி களில் விளக்கம் தரப்பட்டிருந்தது. இந்தியத் தூதுக் குழுவினர் கண்காட்சியின் எல்லாப் பகுதிகளுக்கும் அழைத்துச் செல்லப் பட்டனர். விளக்கம் படித்துக் காட்டப்பட்டது. அதைச் சுற்றி வர மூன்று மணி நேரத்திற்கு மேல் ஆயிற்று. திருமதி பண்டிட் டுக்கு ஒவ்வொரு விளக்கத்தையும் பொறுமையுடன் கேட்க வேண்டியிருந்தது. அவர் எந்த விஷயத்தையும் விட்டுவிடக் கூடாது எனச் சீனர்கள் கவனமாக இருந்தனர். கண்காட்சிக்குப் பின் நாங்கள் அருகிருந்த ஓர் அறைக்கு அழைத்துச் செல்லப் பட்டோம். அங்குச் சீன வழக்கப்படி பழங்களும், கேக்குகளும், தேநீரும் வழங்கப்பட்டன. அப்போது சுகாதார மந்திரியான திருமதி லிதேச்சுவான் கண்காட்சியைப் பற்றி எங்களது அபிப் பிராயத்தைக் கேட்டார். அவர்தான் திருமதி பண்டிட்டைக் கண்காட்சிக்கு அழைத்துச் சென்றவர். ஒவ்வொரு மொழி பெயர்ப்பாளருக்கும் உறுப்பினர் தங்களுக்குள் என்ன அபிப் பிராயம் கூறிக் கொள்கின்றனர் என்பதைத் தெரிந்து கொள்ளு மாறு ஆணையிடப்பட்டிருந்தது. என்றாலும், திருமதி பண்டிட் சுகாதார மந்திரிக்கு நன்றி செலுத்தினர்.

அன்று மாலை வெளிநாட்டு அலுவலகத்திலிருந்து, அந்தக் கண்காட்சியை நான் பார்க்க வேண்டுமென்று வற்புறுத்தி டெலி போன் மூலம் கூறினார்கள். அதன் பின்னரே பொது மக்களுக் குக் கண்காட்சி திறந்து விடப்படும் என்றார்கள். நான் காலையில் நான்கு மணி நேரம் கண்காட்சியைப் பார்த்துவிட்டேன். அந்த அதிகாரி ஒப்புக் கொள்ளவில்லை. அங்கு ஒரு பத்திரிகை நிருபர்

கூட்டம் நடைபெறு மென்றும், அதில் நான் கேள்விகள் கேட் கலா மென்றும் அவர் கூறினர். சீனர்கள் தூதுக் குழுவின் அபிப் பிராயத்தைத் தெரிந்துகொள்ள விரும்பினர்கள் என்பதை நான் அறிவேன். அவர்களைப் பற்றி நாங்கள் என்ன எண்ணினேம் என்பதை என் மூலம் அறியலாம் என அவர்கள் கருதினர்கள். அதனல் வற்புறுத்தினர்கள். போவதைத் தவிர வேறு வழியில்லை.

அது என்ன நிருபர் கூட்டம்! நான் இந்தியத் தூதுக் குழு வின் எண்ணங்களை வெளியிடுவேன் என்றெண்ணி என்னை யழைத்தார்கள் என்பது உறுதி. குண்டு விழுந்த இடத்தில் சென்று விசாரணை நடத்திய குழு உறுப்பினர் அங்கு வந்திருந் தனர். அக் குழுவில் உடல்நூல் வல்லுநர், கிருமிநூல் வல்லுநர், நோய் மருத்துவர் ஆகியோர் இருந்தனர். சீன சமாதானக் குழுவின் துணைத் தலைவரான சூஷீதுங் அக் குழுவின் தலைவர். 'தாஸ்', 'பிராவ்டா' பத்திரிகை நிருபர்களும், சீனப் பத்திரிகை நிருபர்களும், வெளிநாட்டு மந்திரி அலுவலகத்தின் ஆராய்ச்சி - செய்தித் துறைத் தலைவரான திருமதி குங்பெங்கும் இருந்தனர்.

யாவரும் வந்ததும், பத்திரிகை நிருபர்கள் அக் கண்காட்சி யைக் காணுமாறு அழைக்கப்பட்டனர். நான் மீண்டும் செல்வ தற்குத் தயங்கினேன். ஆனல், அதிகாரி என்னைக் கண்காட்சி சாலைக்கு வருமாறு வற்புறுத்தினர். வெளிநாட்டுப் பத்திரிகை யாளர்கள் அங்கு வருவதைப் படமெடுக்கப் பல நிழற்படக் கருவி களும், ஒளி விளக்குகளும் பொருத்தப்பட் டிருந்தன. பிற நிருபர் களுடன் படம் பிடிப்பதில் தடையில்லையே யெனக் கேட்டார் கள். அவர்கள் வேண்டுகோளை மறுக்க முடியவில்லை. நான் அக் கண்காட்சியைப் பார்த்ததை அவர்கள் வெளியிடுகின்றார் கள்; அதை நான் எப்படி மறுக்க முடியும்? நான் நிழற்படம் பிடித்துக் கொள்வதில் தடையில்லை யென்றும், கண்காட்சியை மீண்டும் பார்க்க விரும்பவில்லை யென்றும் கூறினேன்.

சீனர்கள் என்னை விட்டுவிட்டார்கள். அவர்கள் படம் பிடித்துக் கொண்டபோது நான் கண்காட்சியில் சில பொருட் களைப் பார்த்துக் கொண்டு நின்றேன். அங்கிருந்த பொருட்கள் கீழ்நாட்டிற்கும் மேல் நாட்டிற்கும் உள்ள தொடர்பைப்

பல தலைமுறைகளுக்கு இல்லாமல் செய்து விடுமென நான் அறிந்தேன். ஹிரோஷிமா, ஆசியர்களின் மனத்தில் வெறுப்பைத் தந்திருக்கின்றது. ஆசியாவில் இன்னும் அது போன்ற முயற்சி எடுக்கப்பட்டால், மேல் நாட்டினருக்கு, கீழ்நாட்டு மக்களின் வாழ்க்கையில் கருணையில்லை யென்ற சந்தேகத்தைக் கிளறிவிடும்.அந்தக்கண்காட்சியால் பயனென்றில்லையென நான் காலையிலேயே கண்டு கொண்டேன். அங்கு வைக்கப்பட்டிருந்த கிருமிகளை ஆய்வுக் கூடத்திலும் தயாரிக்கலாம். விசாரணை மேலெழுந்தவாரியாக நடத்தப்பட்டுள்ளது. அதுவும் நடுநிலைமையற்றவர்களால் நடத்தப்பட்டது. விமானப் படையெடுப்பு, அமெரிக்கருக்கு அளிக்கப்பட்ட பயிற்சிகள், பாடங்கள் ஆகியவை பற்றி ஈனுக்கும், குயினும் கொடுத்த விபரங்கள் சந்தேகத்திற்குரியன. ஜெனரல் ரிட்ஜ்வேயும், அமெரிக்காவும், மனித இரக்கம் ஒரு புறமிருக்க, அம் முயற்சியின் மடமையை உணர்ந்திருந்தார்கள் என்பது என் எண்ணம்.

நான் அங்கு உலவிக்கொண் டிருந்தபொழுது, திருமதி குங் பெங் என்னிடம் வந்தார். அவர் பொதுவுடைமைக் கட்சியிலுள்ள பெண் உறுப்பினர்களில் ஒருவர்; வெளிநாட்டு இலாகாவின் செய்திப் பகுதித் தலைவராக இருந்தார்; மிகவும் அமைதியானவர் என்று பெயர் பெற்றவர்; சாதாரண சீனப் பெண்களை விட உயரமானவர். வெண்மையான முகம். அதற்கு வரம்பு கட்டுவது போல் வாரி விடப்பட்ட கருமயிர். அம் முகத்தில் ஒரு கம்பீரம். போர்க் காலத்தில் இந்தியாவுக்கு வந்திருந்தார் என நினைக்கின்றேன். பிற நாடுகளையும் நன்கு தெரிந்தவர். ஆங்கிலம் சரளமாகப் பேசினார். அதிகமாகப் பேசுவதில்லை. மொழிபெயர்ப்பாளரே மொழிபெயர்த்துக் கூறினார். நான் அவரைத் தேடுவதற்குப் பதில் அவர் என்னிடம் வந்தாரே என நான் வியப்புற்றேன். எனக்கு ஒரு பரிசோதனை நடக்கப் போகின்றது என்று தெரிந்தது. அவர் என்னுடன் அப்போது ஆங்கிலத்தில் பேசினார்: "நான் உங்களைப் பார்க்க விரும்பினேன். எனது வேலை காரணமாக முடியவில்லை. இக் கண்காட்சியைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கின்றீர்கள்?" என்றார். இத்தனை நேரடியாகக் கேட்பார் என நான் எண்ணவில்லை.

நான் நடுநிலைமை வகிக்கும் ஆசிய நாடுகளின் ஆதரவைச் சீனு பெறுவது பற்றிப் பேசினேன். அதனை இரண்டு வழிகளில் பெறலாம் என்றேன். அதாவது, வடகொரியாவிலும் சீனுவிலும் கிருமிப் போர் அளித்த பிணியும் தொத்து நோய்களும் எத்துணை துயரத்தில் மக்களை ஆழ்த்தியுள்ளன என்பதை ஆசிய நாடுகளுக்குச் சீனு சொல்ல வேண்டும்; அல்லது ஒரு தனிப்பட்ட நடுநிலைமைக் குழுவின் அறிக்கையை அவர்களுக்கு அளிக்க வேண்டும். வேறு மூன்றாவது வழி இல்லை.

ஆனால், திருமதி குங் அடுத்த கேள்விக்குத் தயாராக இருந்தார். "ஈனுக், குயின் என்ற அமெரிக்கரது வாக்குமூலம் உண்மையை வெளிப்படுத்த வில்லையா?" என்று கேட்டார்.

நான் மிக எச்சரிக்கையுடன், "இல்லை; போர்க் கைதி காவலில் இருக்கின்றான். அதனால், அவனது வாக்குமூலம் அவன் சுதந்தரமாகக் கூறியது என ஏற்றுக் கொள்ள முடியாது" என்றேன்.

அவர் கூறினார்: "நாங்கள் போர்க் கைதிகளை நல்ல முறையில் நடத்துகின்றோம். ஈனுக்கும், குயினும் அவர்களாகவே தான் தங்கள் வாக்குமூலங்களைக் கொடுத்தனர். ஏனெனில் தாங்கள் நேர்மையற்ற போர் புரிகின்றோம் என அவர்கள் உணர்ந்தார்கள்."

நான் கூறினேன்: "இருக்கலாம் திருமதி குங். இந்திய விடுதலைப் போராட்ட காலத்தில் நானும் ஓர் அரசியல் கைதியாக இருந்தேன். எவ்வளவுதான் நல்ல முறையில் நடத்தப் பட்டாலும், சிறை யென்றால் என்ன என்பது எனக்குத் தெரியும்."

உடனே திருமதி குங் விறைப்பும் அதிகார முறைப்பும் காட்டினார். 'பின்னர் நடக்கப் போகும் நிருபர் கூட்டத்தில் நான் என்ன கேள்வி கேட்க விரும்புகின்றேனோ, அக் கேள்விகளை முன்னரே தெரிவித்தல் நலம்' என அவர் கேட்டார். எனது கேள்விகளைப் பற்றி நான் சிந்தனை செய்யவில்லை. சீனுவில் நான் சென்ற முதல் நிருபர் கூட்டம் அதுதான். அதற்குள்ள முறை பற்றி எனக்குத் தெரியாது. அக் கூட்டத்தில் எதைப்

பற்றியேனும் அவர்கள் பேசுவார்கள்; எனக்கு அதிலிருந்து கேள்விகள் கேட்க வாய்ப்பு ஏற்படும் என நான் நம்பினேன். ஆனால், திருமதி குங்கின் வேண்டுகோளிலிருந்து நான் எனது கேள்விகளை முன்னரே சொல்லிவிட வேண்டு மென்பது தெளிவாயிற்று. இல்லாவிடில், நான் வந்தே இருக்க மாட்டேன். நான் ஒரு செய்தி நிருபர் என்றும், எனது கேள்வி களுக்கும் நான் நம்புவதற்கும் ஒரு தொடர்புமில்லை யென்றும் நான் அவரிடம் கூறினேன். எனது நாட்டிலுள்ள மக்கள் என்ன தெரிந்து கொள்ள விரும்புகின்றனர் என்பதை அறிவது தான் எனது வேலை. ஆகவே, நான் கேட்டேன்: "விசாரணைக் குழு 'அந்த இடத்தில்' விசாரணை நடத்தியது என்பதன் பொருளைத் தெரிவிக்குமா? அக் கிருமிப் போரால் சீனாவில் ஏற்பட்ட விளைவுகள் என்ன? ஒரு தனிப்பட்ட குழுவினால் நடத்தப்பட்ட விசாரணையைச் சீனா ஏற்றுக் கொள்ளுமா?" எனது இரண்டா வது கேள்விக்குப் பதில் தர மறுக்கலாம். ஏனெனில், அது படை ரகசியம் என்று கூறலாம் என்றும் நான் தெரிவித்தேன்.

திருமதி குங் வணங்கிவிட்டுச் சென்றார். அவர் நிருபர் கூட்டத்திற்கெனக் காத்துக்கொண்டிருக்கும் குழு உறுப்பினர்கள் இருக்கும் அறைக்குச் சென்றார். இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு நிருபர்கள் வந்தனர்; அன்று மாலை நிகழ்ச்சி தொடக்க மாயிற்று. நடுப்பகல் நான் சாப்பிடவில்லை யாதலால், எனக்குப் பசித்தது. ஆனால், அப் புயலிலிருந்து தப்புவதற்கு வழியில்லை. எனது மொழிபெயர்ப்பாளருடன் ஒரு மூலையில் அமர்ந்து கேக்கைச் சாப்பிட்டு, தேநீரையும் பருகினேன். கூட்ட அறைக் குள், நிழற்படக் கருவிகளும், ஒளி விளக்குகளும் பின்தொடர நிருபர் நுழைந்தனர். அங்குள்ள நிகழ்ச்சிகளைப் படம் எடுக்க ஏற்பாடு செய்திருந்தனர். என்னைத் தலைவர் சூஷீதுங் அருகில் அமருமாறு கேட்டுக் கொண்டனர். மற்றவர்கள் தங்கள் விருப் பப்படி உட்கார்ந்தனர்.

சூ சிறு சொற்பொழிவாற்றினார். அமெரிக்கா அதன் மேல் சுமத்தப்பட்டுள்ள குற்றங்களை மறுத்தாலும், அவர்கள் முன் வைக்கப்பட்டுள்ள காட்சிப் பொருட்கள், அக் குற்றச்சாட்டுகள் உண்மை யென்பதைக் காண்பவருக்குத் தெளிவிக்கும் என்று

அவர் கூறினுர். பின் என்னை யழைத்து, குழுவினரிடமிருந்து வேண்டிய செய்திகளைப் பெறலாம் எனச் சொன்னுர். எனது கேள்விகளை நேரடியாகக் கேட்டால் அது தவருகக் கருதப்பட்டு நான் பல இன்னல்களுக்கு ஆளாவேன் என்பது எனக்குத் தெரியும். ஆகவே, நான் ஏன் அக் கேள்விகளைக் கேட்டேன் என்பதை விளக்கிப் பேசினேன்: "நான் எனது பணியை இயன்றவரையில் திறம்படச் செய்ய விரும்புகின்றேன். அதனுல் எனது கேள்விகள் எனது கருத்தைத் தெரிவிப்பன அல்ல." பின்னர், திருமதி குங்கிடம் கொடுத்த மூன்று கேள்விக்கும் பதில் தேவையில்லை என்று கூறினேன்.

எனது கேள்விகள் முடிந்ததும் 'டாஸ்' பத்திரிகை நிருபர் எழுந்து கேட்டார்: "அங்குக் காணப்பட்ட பூச்சிகள் சீனுவில் இல்லாதவை யெனில், அவை எங்கிருந்து வந்தன?" வியட்மின் நிருபர் அமெரிக்க ஏகாதிபத்தியத்திற்கு எதிராகச் சீனர் நடத்தும் போராட்டத்தில் தமக்குள்ள நம்பிக்கையைத் தெரிவித்து விட்டு உட்கார்ந்தார். பிற சீன நிருபர்கள், 'அங்குக் காணப்பட்ட பூச்சிகள் பயிரையும், விலங்குகளையும், செடி கொடிகளையும் அழித்தனவா?' என்று கேட்டனர். எல்லாக் கேள்விகளும் குறிக்கப்பட்டதும் கூட்டம் கலைந்தது.

அரைமணி நேரத்திற்குப் பின் குழு மீண்டும் வந்தது. பின்னர் ஒவ்வொரு உறுப்பினர்களும் மிகுந்த சீற்றத்துடன் பேசினுர்கள். 'அந்த இடத்தில் விசாரணை' யென்பதன் பொருளை நான் கேட்டதால் என் மீது ஆத்திரம் கொண்டு பேசினுர்கள். நான் அவர்களது நல்லெண்ணத்தைச் சந்தேகப்படுவதாகவும், கண்காட்சியில் வைக்கப்பட்டிருந்த உண்மைகளை நம்ப மறுத்ததாகவும் அவர்களுக்குத் தோன்றியது. 'நான் நம்புகின்றேன்' என்ற வாசகமே எப்பொழுதும் ஒலித்துக்கொண் டிருந்த பொதுவுடைமைச் சீனுவில் இது போன்ற கேள்விகள் எழுந்ததில்லை. கூட்டத்தில் கனன்று எழுந்த சீற்றத்தில் ருஷ்யமொழியில் மொழி பெயர்க்க மறந்துவிட்டனர். நான்தான் அவர்களுக்குக் குறி. அதனுல், ஆங்கிலத்தில் மட்டுமே சொற்பொழிவுகள் மொழி பெயர்க்கப்பட்டன.

குழுவின் துணைத் தலைவர் லியுஷவோசி, சுகாதார மந்திரியும், செஞ்சிலுவைச் சங்கத் தலைவருமான திருமதி லி, உயிர் நூல் வல்லார் டாக்டர் லியு, வெப்பநாட்டு மருத்துவ வல்லுநர் டாக்டர் ஜங், உடற்பிணிப் பேராசிரியர் டாக்டர் பென்சியு முதலியோர் பேசினார்கள். குண்டு வீசப்பட்ட இடங்களுக்கு நேரிற் சென்றும், அங்குள்ள மக்களோடு கலந்தும், பல பொருட்களைக் கண்டெடுத்தும் தாங்கள் விசாரணை நடத்தியதாக அவர்கள் யாவரும் கூறினார்கள்.

"விசாரணை செய்யும் குழுவினர் மீது கிருமிகள் வீசப் பட்டதை நிரூபிக்க வேண்டுமானால் அதற்கும் ஒரு நிகழ்ச்சி உண்டு. ஏப்ரல் 2-இல் பேராசிரியர் வேஷியும், 'தினசரித் தொழிலாளி' என்ற செய்தித்தாளின் நிருபரும் அந்தப் பகுதியைச் சுற்றிவரும்போது, அவர்கள்மீது கிருமிகள் எறியப் பட்டன." 'தினசரித் தொழிலாளி'யின் நிருபர் பெயரைக் குறிப்பிட்டதும் நான் சிரித்தேன். விசாரணை எவ்வாறு நடைபெற்றது என்பதற்கும், எனது கேள்விக்கும் ஒரு தொடர்புமில்லை. குண்டு வீசப்பட்ட ஒரு மாதத்தின் பின்னர், வெள்ளையங்கியும் ரப்பர் பூட்ஸ்களும் அணிந்து, கிருமிகளைக் கண்டு பிடிக்கச் செல்லும் மனிதர்களின் படத்தைப் பற்றியதுதான், எனது கேள்வி.

குழுவின் உறுப்பினர்கள் கோபத்துடன் கிருமிப் போராட்டத்தால் வடகொரியாவிலும், வடகிழக்குச் சீனாவிலும் ஏற்பட்ட விளைவை வெளியிட முடியாது என்றனர். அதைத்தான் அமெரிக்கர்கள் அறிந்து கொள்ள ஆவல் கொண்டுள்ளனர் என்றும் குறிப்பிட்டார்கள். அமெரிக்கர்கள் ஜனவரி முதல் ஜூன் வரையிலும் விடாது கிருமிப் போரை நடத்தியதாக அவர்கள் கூறினார்கள். ஒரு வேளை அமெரிக்கப் படையினர் தவறான கட்டளையால் அத்தகைய பரிசோதனையை நடத்தினாலும், அவர்கள் சீனர்கள் கூறியதுபோல் தொடர்ந்து நடத்தியிருக்கமாட்டார்கள் என நான் நம்பினேன். அமெரிக்காவிலும், ஆசியாவிலும் உள்ள மக்களின் கருத்துக்கள் அலட்சியப் படுத்தப்பட்டன. அதன் வளர்ச்சியை ஜனநாயகம் ஆதரிக்காது. சீனாவின் குற்றச் சாட்டு மிகையாகவும் கொடூரமாகவும் பரவவில்லையெனில், ஆசிய மக்களுக்கு உண்மையை எடுத்துக் கூற முடிந்திருக்கும். சீனாவின் புனைந்துரை காதை பிரச்சாரமே தவிர வேறில்லை.

எனது முக்கியமான கேள்வி, ஒரு நடுநிலைக் குழுவின் விசாரணையைச் சீனு ஏற்றுக் கொள்ளுமா என்பதே. ஒரு நடுநிலைக் குழு தேவை யென்பதைச் சீன சமாதானக் குழுவினரும் முன்னே கூறியுள்ளனர் என்று விசாரணைக் குழுவினர் கூறினர். அத்தகைய ஒரு குழு 'சர்வதேச ஜனநாயக வழக்கறிஞர்களால் ஏற்படுத்தப்பட்டது. சமாதானக் குழு சர்வதேச விஞ்ஞானிகளடங்கிய ஒரு குழுவினரையும் அனுப்பும் என எதிர்ப்பார்க்கப் பட்டது. ஒரு நடுநிலைமைக் குழுவை அனுப்புவதைச் சீனு வரவேற்கும் எனத் துணைத் தலைவர் உறுதி கூறினுர்: "இந்தக் குழு எத்தகையதாயினும் அது நேர்மையும், நீதியும், நடுநிலைமையும் உடையதாக இருக்க வேண்டும். அது எல்லா உண்மைகளையும் ஆராய வேண்டும்." சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கத்தின் நடுநிலைமை பற்றிச் சீனர்களின் தவருன எண்ணத்தை நான் எனது கேள்வியில் குறிப்பிட்டிருந்தேன். என்ருலும் சமாதானக் குழு அல்லது அது போன்ற கழகங்கள் நடத்திய விசாரணைகளும் நிடுநிலைமை மக்களால் சந்தேகப்பட நேரிடும் என்றும் நான் கூறினேன்.

நிருபர் கூட்டம் நள்ளிரவு வரையில் நடைபெற்றது. என்னைப் பசியும் களைப்பும் வாட்டின. அதனுல் ஒரு பயனும் உண்டாகவில்லை. குழுவின் உறுப்பினர்களுக்குத் தங்களது முழு பக்தியைக் காட்ட ஒரு வாய்ப்பு கிடைத்தது. அந்த அதிகாரி அருள் கூர்ந்து என்னைக் காரில் ஏற்றி யனுப்பினுர். அதற்கு என் நன்றி.

சில நாட்கள் சென்ற பின், சமாதானக் கழகத்தின் தலைவரும், சீனுவின் துணைத் தலைவருமான குவோமோஜோ என்னைச் சந்திக்க விருப்பதாக எனக்கு அறிவிக்கப்பட்டது. குறிப்பிட்ட நாளுக்கு இரு வாரங்களுக்கு முன்னரே நான் கேள்விகளை அனுப்பியிருந்தேன். நிருபர் கூட்டத்தின்போது கேட்டிருந்த எனது கேள்விகள் தாம் இச் சந்திப்பை ஏற்படுத்தி யிருக்கும் என நான் ஐயுற்றேன்.

"கிருமிப் போரைப்பற்றி விசாரணை செய்ய ஒரு நடுநிலைக் குழு ஏற்படுத்துவதைச் சீன சமாதானக் கழகம் ஒப்புக்

கொள்ளுமா?' என நான் கேட்டிருந்தேன். 'அந்த நடுநிலைமைக் குழு நேர்மை உடையதாக இருக்க வேண்டும். மனிதர் களின் நேர்மையைக் கண்டறிவது எளிதன்று; ஆகவே, இரு தரப்பினராலும் ஒப்புக் கொள்ளப் பட்டவர்களை நியமிக்க வேண்டும்' என்று நான் யோசனை கூறியிருந்தேன்.

குவோமோஜோ தனது வீட்டில் என்னை வரவேற்ருர். அமரும் அறையில் சிபெய்ஷியால் வரையப்பட்ட பல வண்ணப் பூக்கள் கொண்ட ஒரு சித்திரம் இருந்தது. அது குவோமோஜோ வின் கலைப்பண்பைக் காட்டிற்று. அவர் ஒரு கவிஞர் மட்டுமல்லர்; சீனுவின் வரலாற்றுப் பேராசிரியரு மாவார். அவரது நாவன்மையும் பண்பட்ட பேச்சும் புகழ் பெற்றவை. இந்திய - சீன நட்புச் சங்கத்தின் துவக்க விழாவன்று பேசும்போது நான் அவரது நாநயம் கண்டேன். என்னல் ஒன்றையும் புரிந்து கொள்ள முடியவில்லை யென்ருலும், அவரது இனிமையான குரலும், இசை மிளிரும் சொற்களும், உயர்ந்த பண்புகளும் என்னை மிகவும் கவர்ந்தன.

நான் கேட்டிருந்த நடுநிலைமைக் குழுபற்றி அவர் பேசினர்: "சான்ருக ஒரு தனிப்பட்ட நபர், அல்லது விஞ்ஞானி, அல்லது வழக்கறிஞர் அப்பம் ஒன்றைப் பார்த்து, அவர் கருத்தைத் தெரிவித்தால், அது அவருடைய நடுநிலைமைக் கருத்து எனக் கொள்ளலாம். கருமையைக் கருமையென அறிந்த விஞ்ஞானி, அதை அங்ஙனம் அஞ்சாது கூறுவாராஞல், அவரை நாம் விசாரணை செய்ய வரவேற்கின்ருேம். இன்று பல மக்கள் கருப்பைப் பார்த்துவிட்டு, சாம்பல் நிறம் எனக் கூறுகின்றனர். என்ருலும், பல விஞ்ஞானிகள், அறிஞர்கள், யாத்ரீகர்கள் பளிங்கு போன்ற மனத்தினராய் உண்மையை வெளியிடு கின்றனர் என நாங்கள் நம்புகின்ருேம். அவர்கள்தாம் குழுவை அமைக்க வேண்டும் என நாங்கள் எண்ணுகின்ருேம். ஆனல், அவர்கள் நடுநிலையாளரல்லர். அவர்கள் ஒழுக்கத்தின் பாற்பட்டவர்கள். ஒரு மனிதன் நடுநிலையாள னல்லன். ஏனெனில், ஒரு சிலர் அவனை அங்ஙனம் அழைக்கின்றனர். உலக மக்கள் அவனை மதிப்பிடல் வேண்டும். உலக மக்கள் எனப்படுவது,உலகத்திலுள்ள பெரும்பான்மையான மக்களையே யாகும்."

உலக மக்கள் கருத்தையறிதல் எளிதல்லவே என்று நான் இடைமறித்துக் கூறினேன். இருசாராரும் ஒப்புக் கொள்ளும் உறுப்பினர்களைக் கொண்டு குழு ஏற்படுத்துவதுதான் முறை என்றேன்.

குவோ மோஜோ நான் இடைமறித்துக் கூறியதைப் பொருட்படுத்தவில்லை. அவர் சொன்னார்: "இரு நாடுகளாலும் ஏற்றுக் கொள்ளப்படும் மக்களைத் தேர்தல் அரிது. நாங்கள் ஏற்கும் விஞ்ஞானிகளை அமெரிக்கர் ஒரு போதும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். அவ் விஞ்ஞானக் குழுவினர் நேர்மையுடனும், உண்மையுடனும் பேசினால் அதனை ஜனாதிபதி ஏற்றுக் கொள்ள மாட்டார்."

மீண்டும் நான் இடைமறித்து, "ஆசிய மக்களால் ஆசியாக்காரர்களைக் கொண்டு நியமிக்கப்பட்ட ஒரு குழுவைச் சீனா அங்கீகரிக்குமா?" என வினவினேன்.

"உலக சமாதானக் கழகத்தாரால் ஒரு விஞ்ஞானக் குழு நியமிக்கப்பட்டு வருகின்றது. இந்தியாவும் அதன் பணியில் பங்கெடுக்க வேண்டுமென நாங்கள் விரும்புகின்றோம்."

ஆகவே, எதைக் கருமையென்று அழைக்கின்றோமோ அது கருமையாகவே இருக்க வேண்டும்; அல்லது அதைக் கரு கருமையாகக் காண வேண்டும். கருமையையும் வெண்மையையும் பல வண்ணங்களில் கண்ட சீனா, இப்பொழுது கண்களை மூடிக்கொண்டு, வெறுப்பென்னும் நீதியை உபதேசம் செய்ய எண்ணியது. நாங்கள் முக்டன் சென்றபோது கிருமிப் போர் நடைபெற்ற இடத்திற்குச் செல்வேன் என்பதை நான் உணரவில்லை. பூஷன் நிலக்கரிச் சுரங்கத்தைப் பார்க்கச் செல்லும் போது, விசாரணைக் குழுவின் கோபத்தைத் தூண்டிய பந்தய மைதானம் என் கண்முன் தோன்றியது. நான் உடனே அதைத் தெரிந்து கொண்டேன். அப் பந்தய மைதானம் பயன்படுத்தப் படாமல் அதில் புல் வளர்ந்திருந்தது. ஒரு சில ஆடு மாடுகள் குப்பைமேட்டில் மேய்ந்துகொண் டிருந்தன. அங்கே விசாரணைக் குழுவை ஈர்த்த கிருமிக் குண்டின் அறிகுறி ஒன்றும் காணப்படவில்லை. அங்கு நின்ற சிமின்ட் தூண்மீது மொழிபெயர்ப்பாளரின் கவனத்தைத் திருப்பினேன். அந்தப்

பகுதியை நான் அறிந்து கொண்டது தொல்லையாக மாறிற்று. அன்று மாலை, முக்டனிலிருந்து தியன்ஸ்டீனுக்குப் போகும் வழியில், திடீரென அதிகாரிகள் எங்களுடைய உடல் நலப் பத்திரத்தைக் கேட்டார்கள். நாங்கள் எங்கள் ரயிலில் எங்கள் பைகளிலிருந்து பத்திரங்களை எடுத்து அவர்களிடம் கொடுத்தோம். நள்ளிரவில் என்னை யெழுப்பி, 'என்னிடம் பிளேக் தடுப்பு பத்திரம் இல்லை; அதனால் நெடு மதிலிலிருக்கும் ஷாங் காய்குவானில் என்னைத் தடை செய்வார்கள்' என்று அதிகாரிகள் கூறினார்கள். 'மஞ்சூரியாவிலிருந்து சீனாவிற்குள் அப் பத்திரமின்றி நான் நுழைய முடியாது' என்றும் சொன்னார்கள்.

அவசியமின்றிச் சேற்றில் காலை விட்டேனே என எண்ணிக் கொண்டு இரவு முழுவதும் விழித்திருந்தேன். எனது மொழி பெயர்ப்பாளரின் கண்காணிப்பையும் தப்பி, எல்லையைக் கடந்து குவாரன்டைனில் காத்திருந்தேன். ஒரு வேளை ரயில் நிலையத்தில் எனக்கு பிளேக் தடுப்பு ஊசி குத்தப்பட்டு, நான் பிரயாணம் செய்ய அனுமதிக்கப்படுவேன் என்று காலை மூன்று மணிக்குக் கூறினார்கள். பின்னும் இரண்டு மணி நேரம் கண் விழித்த பிறகு, இரு டாக்டர்கள் கையில் ஊசியுடன் வந்தார்கள். அவர்கள் இருவரும் உடம்பை உடையால் மறைத்திருந்தனர்; முகங்களிலும் முக மூடி அணிந்திருந்தனர். ஒருவர் கையினால் ஊசியைத் தட்டிக்கொண் டிருந்தார்; சிறிது நேரம் அதனைச் சரி செய்துகொண் டிருந்தார்; பின் என் கையில் குத்தினார்; ஊசியின் குழாயைச் சிறிது தள்ளினார். ஒரு சொட்டு மருந்து கூட என் உடலினுள் செல்லவில்லை. கிருமிப் போர் சிகிச்சை முடிந்தது. நான் கடைசியாகத் தூங்கினேன்.

சில நாட்களுக்குப் பின், நாங்கள் சீனாவை விட்டுப் புறப்படும்போது பேசிக்கொண் டிருந்தோம். அப்போது ஒருவர், "பயனற்ற ஊசியால் 'குளுக்கோஸை'க் குத்தி வைக்கும் நாடகம் ஏன் ?" என்று வியப்புடன் கேட்டார். சீனர்கள் பதிலளித்தார்கள் : "தடுப்பு மருந்தின் விளைவு பத்து நாட்களுக்குப் பின்னரே தெரியும்; ஆனால், ஹத்தீசிங் ஷாங்காய்குவானில் இருந்ததைவிட எங்களுடன் இருந்திருந்தால் நோயின் அறிகுறிகளைக் கவனிக்க முடியும் என எண்ணினோம். அது 'குளுக்கோஸ்' அன்று."

# 5. சர்வாதிகாரம்

மிகுந்த வணக்கத்துடன் பீகிங்கிலிருந்து புறப்பட்டேன். நடுப்பூங்காவில் வண்ணமலர் பூத்து மணம் கமழ்ந்தது. ஆனால், அங்கு வேறு பணி யொன்றுமில்லை. பீகிங்கின் வதனம் ஆழங் காண முடியாதது. அதிகார பீடத்திலுள்ள மக்கள் விடுதலை பெற்ற சீனுவின் புகழ் பாடினர். அவர்கள் கூறியதன் உண் மையை நாடெங்கும் சென்று காணுமாறு எங்களைக் கேட்டுக் கொண்டனர். படுக்கைகள் கொண்ட மூன்று ரயில் பெட்டிகளில் ஒரு சிற்றுண்டி வண்டி உடன்வரப் பீகிங்கிலிருந்து கிளம்பி னோம்.

கடற்கரை யோரமிருந்த ஆறு நகரங்களுக்குச் சென்றோம். எங்களுக்குத் தெரியாதது அங்கு அதிகமாக ஒன்றுமில்லை. எங் களால் அங்குள்ள மக்களைச் சந்தித்து அவர்களுடன் பேச முடியவில்லை. கதவுகள் பூட்டப்பட்டிருந்த வண்டிகளில் பிர யாணம் செய்தோம். கேட்டுப் புளித்தவற்றை மறக்க அடிக்கடி சாராயம் அருந்தினோம். அவ் வண்டியின் ஜன்னல் வழியாக உழவனும் அவன் இளமகனும் குறுகிய நிலத்தில் சலியாது உழைப்பதைப் பார்த்தோம். மூட்டைகள் கட்டப்பட்டிருந்த மூங்கில் கொம்பைத் தோள்மீது வைத்துச் சுமந்து செல்லும் பெண்ணைக் கண்டோம். அவர்களது எளிய நீல ஆடை காற் றில் ஆடுவதைப் பார்த்தோம். கோடி மக்களுக்கு உணவளித்து, கோபத்தால் அவர்களுக்கு அல்லலும் அளித்த வயல் வெளி எங்கள்முன் பரந்து கிடந்தது.

ஒரு நாள் மாலை ஒரு நிலையத்தில் வண்டி நின்றது. அந்தி மயங்கும் நேரம். அடிவானத்தின் அருகே மக்களின் சாயல் தென்பட்டது. அது ஓர் உழவர் குடும்பம். அவர்தம் முகங்களில் அந்தி வான் செக்கரழகு பொன்னொளி பரப்பிற்று. நிலத்தில் வண்டிகளின் தடம் தோய்ந்திருந்தது. அவ் வுழவர் குடும்பம் சாலையருகில் நின்றுகொண் டிருந்தது. அவர்களது நீல ஆடை யும், கதிரவன் பொன்னொளியும், நிலத்தின் கருமண்ணும் வண்ண விருந்தளித்தன. கலப்பையுடன் பிணைக்கப்பட்ட ஒரு

கழுதை மருங்கு நின்றது. நிலமென்னும் நல்லாளுடன் அன்பு கொண்டு அவளை யணைத்தபடி மனிதன் இருப்பதை நான் அப்போது உணர்ந்தேன்.

பீகிங்கிலிருந்து தாதுங் சென்றோம். இந்தியாவிற்கும் சீனாவிற்கும் உள்ள பழங்காலக் கலைப் பண்பாட்டுத் தொடர்பைக் கண்டோம். இங்கே, ஐந்தாம் நூற்றாண்டில் 'கேகெயன்'என்னும் இந்திய முனிவர், மங்கோலிய வம்சத் தலைவனை பெய்வெய் என்பவனுடைய அவைக்கு வந்தார். தாதுங் பண்பாடு நிறைந்த நகரம்; ஆயிரம் ஆண்டுகளாக அரசியல் ஆதிக்கம் ஓங்கிய நகரம் ; பீகிங்கிற்கு இணையான நகரம். இந் நகரிலிருந்து சிறிது தொலைவிலுள்ள யுங்காங்:குகையைக் கேகெயனும், அவர் சீடர்களும் அகழ்ந்தனர். அதற்கு ஐம்பது ஆண்டுகள் பிடித்தன. அங்கிருந்து அவர் குப்தா பாணியில், ஒரே கல்லில் ஒரு பெரிய புத்தர் சிலையைச் செதுக்கினார்.

இந்தியர்கள் ஆப்கானிஸ்தானத்திலும், மத்திய ஆசியாவிலும் பிரயாணம் செய்தனர். அங்கிருந்து பெர்சியக் கலைகளையும், கிரேக்கக் கலைகளையும் கொண்டு வந்தனர். மத்திய இந்தியாவின் அஜந்தாவிலிருந்து பாமியனுக்கும் (ஆப்கானிஸ்தானம்), சிங்கியாங்குக்கும், துன்ஹுவாங்குக்கும், யுங்காங்குக்கும் பௌத்தக் குகைகள் பரந்து கிடப்பதை நாம் காண்கின்றோம். பௌத்தம் சீனாவிற்குச் சென்ற வழியை அவை காட்டுகின்றன.

அக் குகைகள் நகரத்திலிருந்து பத்து மைல் தொலைவிலுள்ள ஷான்ஸி மலைக் குன்றுகளில் அமைந்துள்ளன. அவற்றின் அருகே ஆறு ஓடுகின்றது. நான் அவ் வழியாகச் செல்லும் போது ஐம்பதடி உயரமுள்ள புத்தரின் அமைதி நிறைந்த கண்களைப் பார்த்தேன். இங்கும் மைத்திரேய புத்தர், வருங்கால இராட்சச சிம்மாசனத்தின்மீது அமர்ந்திருந்தார். ஆனால், அவர் கண்ட வருங்காலம் வெறுப்பிலும் பயத்திலும், கொடுமையிலும் வெறியிலும் மூழ்கி யிருந்தது. வாழ்க்கைக் கலையைப் பேணி, சீனாவும் இந்தியாவும் இரண்டாயிரம் ஆண்டுகளாக அமைதியுடனும், நட்புடனும் இணைந்து வாழ்ந்துள்ளன. இன்று பாமர மனிதன் என்ற பெயரால் இவையாவும் அழிக்கப்பட்டு, வாழ்க்கை சிறையாக வேண்டுமா? பல்லாயிரம் உயிர்களைத் தியாகம்

செய்து, ஒரு சிலர் தம் தன்னலப் பேராசையால் ஆட்சியை அபகரித்துக் கொண்டனர். அறிவும் பொறுமையும் நிலவிய சீனு, இன்று பொறுமையின்மைக்கு ஆட்பட வேண்டும். நமக்குப் பல்கலை நல்கிய சீனவைப் பற்றி நான் கனவு கண்டுகொண் டிருந்தேன். ஆனல், இன்று யாவும் மறைந்தன.

பழைய சிலைகள் உடைக்கப்பட்டன. பல ஜப்பானியப் படைகளால் எடுத்துச் செல்லப்பட்டன. அவை இருந்த இடங் களில் இன்று சீனவின் 'காப்பு நட்சத்திரம்' இடம் பெற்றுள் ளது. தாதுங் ஒரு நிலக்கரி நகரம். பெயர் பெற்ற நிலக்கரிச் சுரங்கங்களிலிருந்து ஆயிரமாயிரம் டன் கரி எடுக்கப்பட்டுள்ளது. இன்று கழுதைகள்மீது நிலக்கரி மூட்டைகள் ஏற்றிச் செல்லப் படுகின்றன. அன்று மாலை நடைபெற்ற நகர சபை விருந்தில் நான் புதிய சீனவின் முழக்கத்தைக் கேட்டேன். 'நிர்வாணு'வி லிருந்து அமெரிக்க எதிர்ப்பு வரை, ஒரே கூச்சலாகக் கேட்டது. சீனவின் பாமர மனிதன் இப் புதிய வேதத்தை ஏற்றுக் கொண் டானு என்பது எனக்குச் சந்தேகமாக இருக்கின்றது.

தாதுங்கிலிருந்து விண்மதிலுக்குச் செல்லும் பிரயாணம், மனித வரலாற்றில் பின்னே செல்வது போன்று இருந்தது. பல் லாயிர மக்கள் தம் உயிரீந்து இப் பாதுகாப்பு அரணை உலகம் வியக்கக் கட்டி முடித்தனர். ஆனல், அதனல் பயனில்லை. பலர் படையெடுத்துத் தங்கள் ஆட்சியை நிலை நாட்டினர். இன்று படையெடுத்தவர் உள்நாட்டவரே. அங்கு மக்களுக்குச் சுதந்தர மில்லை; விடுதலைப் படையின் காவற்காரன் ஒருவன் மஞ்சூரிய நிலவெளியைப் பார்த்து நின்று காவல் புரிகின்றுன். புதிய சீனு வின் சின்னமாக அவன் தோன்றினன். அச்சீனு இன்று அம் மதி லுக்குள் மட்டும் இல்லை; ஆசியாவையும் உலகையும் இணைக்க அணிவகுத்துக்கொண் டிருந்தது. ஏகாதிபத்திய அடிமைத் தளையிலிருந்து விடுபட்ட சீனு இன்று அத் தளையால் பிறரைப் பிணைக்க முயல்கின்றது.

பிற நாடுகளிலிருந்தும் வந்திருந்த விருந்தினருடன் அம் மதில் மேல் அமர்ந்து கொண்டு, அச் சுவரை எழுப்புதற்குச் செலவழிக்கப்பட்ட மனித உழைப்பு வீணனதைப் பற்றிப் பேசிக் கொண் டிருந்தோம். நாங்கள் அவரவர் நாட்டின் பாடல்களை— சுதந்தரப் பாடல்களை, சமாதானப் பாடல்களை, விடுதலைப் பாடல்

களைப்—பாடினோம். மனத்தில் சுதந்தரம் இல்லையெனில், வாழ்விலும் சுதந்தரமில்லை; அச் சுதந்தரம் பேண மக்கள் எதையும் உவந்து கொடுப்பர் என்பதற்கு அம் மாமதில் சான்றாக நின்றது. பல மிக்க படைகளாலும் அச் சுதந்தரத்தை வெல்ல முடியாது. ஆனால், அழிக்க முடியும். அம் மதிலருகே காலக் கடலின் ஆழத்தில் அது படிந்து கிடந்தது.

முக்டன் சென்ற பின்னர் சிதைந்த கோட்டைகளைக் கண்டோம். அவை அப் பகுதிக்காக நடைபெற்ற போர்களை நினைவூட்டின. சீனாவின் பொருளாதார வாழ்க்கைக்குத் தேவையான இப் பகுதியை ஜப்பானியர், ருஷ்யர், கோமிண்டாங் யாவரும் சுரண்ட முயன்றனர். ஒரு தடவை மஞ்சுக்கள் தெற்கே பீகிங் வரை பல நூற்றாண்டுகள் ஆண்டு வந்தனர். இப்பொழுது தென்னாட்டினர் முக்டனுக்கு வந்து சீனாவின் செல்வத்தை உயர்த்தினர். ஆனால், மஞ்சூரியா முழுவதும் ருஷ்யச் சின்னங்கள் காணப்படுகின்றன. விடுதிகள், வீதிகள், பல கடைகள் யாவும் ருஷ்ய மொழியில் தங்கள் பெயர்களைப் பொறித்துள்ளன. ஸ்டாலின் - மா இருவர் படங்களும் ஒன்றாகத் தொங்கவிடப்பட்டுள்ளன. பார்ப்பவர்களுக்கு, ருஷ்யாவின் உதவியின்றிச் சீனாவால் முன்னேற முடியாது என்பதை அவை நினைவூட்டின.

முக்டன் ஒரு ஜப்பானிய நகரம்; உயரமான கட்டடங்கள்; அகன்ற வீதிகள். மேடு பள்ளமாக இருந்த சாலையில் முக்கியமான பொருட்களை ஏற்றிச் செல்லும் கழுதை வண்டிகளின் சத்தம் ஒலித்துக்கொண்டிருந்தது. சில சமயங்களில் தொழிலாளர்களைத் தொழிற்சாலைக்கு ஏற்றிச் செல்லும் ‘டிரக்’ வண்டி ஒடிந்து வழியில் கிடந்தது. விருந்தினர்களுக்குப் புது மாதிரியான அமெரிக்கக் கார்கள் விடப்பட்டிருந்தன. அவை அங்குத் திருட்டுத்தனமாகக் கொண்டு வரப்பட்டவை.

தியன்ஸ்டின் மேற்கேயுள்ள நகரம். பிரிட்டிஷாரும், பிரெஞ்சுக்காரரும், பிறரும் அதனைச் சீனாவிலிருந்து வேறுபடுத்தியிருந்தனர். இன்று அது சீன நகரமாகக் காட்சியளித்தது; மிகவும் அமைதியாகக் காணப்பட்டது. அதன் அழகான கடைகளில் வாங்குவோரில்லை. அங்கிருந்த வெளிநாட்டினரும், நகராண்மை விடுதியில் ஒன்றாகக் கூடி, தேநீர் அருந்தி, ஊர் விட்டுச் செல்லும் அனுமதியை எதிர்நோக்கி இருந்தனர்.

நாங்கிங், புதிய சாலைகளுடனும், மாளிகைகளுடனும் தோற்றமளித்தாலும்அது பழைய நகரமே. சியாங் இங்கு நெடுங் காலம் வசித்தார். மக்களின் நலனுக்காக ஆட்சி நடத்த முடியாத—திறமையின்மையும் பேராசையும் கொண்ட சமூகத்தின் வீழ்ச்சியைக் காண—அவர் மறுத்தார். நாங்கிங்கிலுள்ள சியாங்கின் மாளிகை பல முற்றங்களும், தேயிலைத் தோட்டங்களும், செவ்விணைப்புப் பாலங்களும் கொண்ட அரண்மனை. அது இப்போது வெறும் என இருந்தது. இனியும் வசிப்பாரின்றியே இருக்கும். 1911-இல் சன்யாட்ஸன் நடத்திய போராட்டம் பிரபுக்களிட மிருந்தும், மேல்நாட்டு ஏகாதிபத்தியத்திடமிருந்தும், விடுதலை பெற முயன்றது. ஆனால், கோமிண்டாங் தேசியவாதிகளால் அதைப் பெற முடியவில்லை. ஏனெனில், அவர்கள் கிராமப் பிரபுக்களை முற்றிலும் அழிக்கவில்லை. அவர்களுடன் சமாதானம் செய்து கொண்டனர். மேல் நாட்டு ஏகாதிபத்தியத்தையும் முற்றிலும் முறியடிக்கவில்லை ; அதைச் சார்ந்து நின்றனர். ஆகவே, சியாங் விரட்டப்பட்டார். அவர் இனிச் சீனு திரும்ப மாட்டார். சன்யாட்ஸன் நினைவுக் கோபுரத்தின்மீது அவர்கள் கொடி பறக்கவில்லை. அந்த இடத்தில் இப்பொழுது செங்கொடி பறக்கின்றது. ஒரு புதிய பரம்பரை உதயமாகி இருக்கின்றது. நாங்கிங்கின் அழகான பூங்காக்கள் வறிதே கிடக்கின்றன ; தெருக்கள் பொலிவிழந்து காணப்படுகின்றன. நாங்கிங் இறந்து விட்டது !

நினைவுச் சின்னம் அழகாக இருக்கின்றது. அதைச் சுற்றிலுமுள்ள பள்ளத்தாக்குகள் எழில் மிகுந்த தோற்றமளிக்கின்றன. நினைவுச் சின்னத்தின் எளிமையான அமைப்பு, மலையடிவாரத்திலிருந்து மேலே செல்லும் அகன்ற படிகள், வாயிலின் நீல நிற ஓடுகள், அதைச் சுற்றிலுமுள்ள சோலையின் சாலைகள் யாவும், மூன்று கொள்கைகளுக்குத் தேசம் அஞ்சலி செய்வதுபோல் தோன்றியது. அம் மூன்று கொள்கைகளும் அவற்றைக் கண்டு பிடித்தவருடனே மாய்ந்தன. வருங்கால சர்வாதிகாரத்திற்கு அவை பழங்கதைகளாகி விட்டன. 1951 அக்டோபரில் நான் சென்றிருந்தபோது இந்தியர் ஒருவர், மக்கள் ஜனநாயகம் டாக்டர் சன்யாட்ஸன்மீது இத்துணை பற்றுதல் வைத்துள்ளதெனத் தவருக எண்ணி வருந்தினர். நாங்கிங்

கில் நடைபெற்ற பல வரவேற்புக்களின்போது சன்யாட்ஸனின் பெருமையைக் கூறினர். பொதுவுடைமைக்காரர்களுக்கு அந்தப் புகழ் மாலை மிகையாக்கப்பட்டது. அவரிடம் அது பற்றி மீண்டும் பேச வேண்டாம் எனக் கேட்டுக் கொண்டனர். அவர்கள் சொன்னார்கள் : " நாங்கள் சன்யாட் ஸன்னுக்கு மதிப்பு அளிக்கிறோம். ஆனால், அவருடைய பெயரைப் பொது இடங்களிலே மிகுதியாகக் கூறுவதை விரும்பவில்லை."

நாங்கள் சென்றபோது, ஷாங்காய், இறப்பின் துன்பத்தை அனுபவித்துக்கொண் டிருந்தது. ஒரு காலத்தில் அது நாட்டினின்றும் தனிப்பட்டுப் பேரரசாக விளங்கியது. அதன் பொலிவை வெளிநாட்டு லட்சாதிபதிகளும், கொள்ளைக்காரர்களும் ஒருவருக்கொருவர் போரிட்டு ஆண்டு வந்தனர். நகர்ப்புறத்தில் ஏகாதிபத்தியத்தின் பேராசைக் குவியல் கிடக்கின்றது. பழைய 'கூலிகளை'ச் சுரண்டி வாழ்ந்ததை இன்றைய நினைவுச் சின்னங்கள் காட்டுகின்றன. பிரெஞ்சுப் பகுதியில், நாங்கிங் வீதியில் ஒரு சில வெளிநாட்டினருக்காக நாகரிகமான கடைகளில் பழைய அழகுப் பொருட்கள் வைக்கப்பட்டுள்ளன. அங்கு வாணிபம் இல்லை. அதன் பழைய பண்டகசாலைகளும், வங்கி மாளிகைகளும் மக்களுக்கு உறைவிடமாயுள்ளன. அவர்களை அங்கிருந்து அகற்ற முடியவில்லை. நிர்வகிக்க முடியாத அதன் போக்குவரத்து இப்போது சிறு வண்டிகளாகக் குறைக்கப்பட்டு வருகின்றது.

ஷாங்காய்க்கு நல்ல வருங்காலம் இல்லை. அதன் பல தொழில்கள் உள்நாட்டிற்கு மாற்றப்பட்டன என்று கூறினர். அங்கு வாழும் மக்கள் வேலையின்றி வருந்துகின்றனர். பல்லாயிர மக்கள், ஆண்களும் பெண்களுமாக நீல உடைக்குப் பதில் வெளிநாட்டு உடையணிந்து, செவ்வாய்க்கிழமை காலைச் செய்தித்தாளுக்காகக் காத்துக் கிடந்தனர். அச் செய்தித்தாளில் அவர்கள் நாடுவிட்டுச் செல்ல அனுமதிச் சீட்டு வழங்கும் இன்பச் செய்தி வாராதா என ஏங்கி நின்றனர். பீகிங்கில் ஒரே மாதிரி உடைகளைக் கண்டு புளித்துப் போன கண்களுக்கு, தந்த நிற மேனியில் மலர்வண்ண உடையணிந்து, கூந்தலை அழகு விரிய வாரிவிட்டு, கோவை இதழ்களுக்குச் சாயம் பூசி, பெண்கள் உலவியது இனிய காட்சியா யமைந்தது. அவர்கள் கண்களில்

மருட்சி தேங்கி நின்றது. வாழும் உரிமைக்கு ஏங்கி நின்றனர். அது போன்று பயந்த முகங்களை நான் பார்த்ததில்லை.

ஷாங்காய் பெரிய சிறைச்சாலை. என்றால் அங்கு இருக்க முடியவில்லை. அங்குள்ள கம்யூனிஸ்டுகள் யாவரும் உழவர்களே. தங்களுக்குத் தோல்வி ஏற்படும் என்ற கலக்கத்தால் அங்கு இருந்தனர். இந் நகரங்களில் புரட்சிப் பகைவர்கள் உலவு வார்கள்; அவர்கள் தங்கள் நெடுங்கால அனுபவத்தாலும், அதி காரத்தாலும் உழவர்மீது ஆதிக்கம் செலுத்தி அவர்களைக் கெடுத்து விடுவார்கள் என்று பயந்தார்கள். அதிகாரத் தாலும், ஒரு குவிந்த மத்திய நிர்வாகத்தாலும் ஊழல்களைக் களைய முடியாது என்று ஸான்பான் இயக்கத்தினர் கண்டு கொண்டனர். ஆகவே, அவர்கள் இந் நகரங்களை அழித்துவிட எண்ணினர். புதிய ஜனநாயகத்தில் இருந்த பற்றுதல் பொது வுடைமை வாதத்தால் ஒதுக்கப்பட்டது. ஆகவே, அவர்கள் இளைஞர்களுக்குத் தத்துவ போதனை, முதியோருக்கு மதியை மயக்குதல், உளவறிதல், மன்னிப்புக் கோரல், தம் குறை காணல், அழித்தல் ஆகிய முறைகளைக் கையாளத் தொடங் கினர்.

சீனாவின் பெரு நகரங்களிடையே பிரயாணம் செய்வது, செங்கல் மதிலமைந்த அமைதியான தெருக்களில் செல்வது போல் இருந்தது. கண்ணாடிக் கதவுகளுக்குப் பின்னால் நாங்கள் மனித முகங்களைக் கண்டோம். அவர்களுக்கு என்ன நேர்ந்த தென்று எங்களுக்குத் தெரியவில்லை. ஏனெனில், செய்தித் தாள்கள், பத்திரிகைகள், புத்தகங்கள் எவையும் அவர்களது வாழ்க்கையைப்பற்றி—அவர்களது இன்பதுன்பங்களைப் பற்றி— ஒன்றும் கூறவில்லை. பீகிங் என்ன ஆணையிட்டிருந்ததோ அதையே செய்து வந்தனர். 'ஷாங்காய்' ஆங்கிலத் தினசரி, 'பீகிங் மக்கள் தினசரி' வெளியிடும் தலையங்கங்களை வெளியிட்டு வந்தது. மக்கள் அயலானிடம் பேசுவதோ, நெருங்குவதோ இல்லை. பொது வரவேற்புகள், அரசாங்க விருந்துகள் யாவும் இருந்தன. என்றாலும், அன்பும் மனித உறவும் காணப்பட வில்லை. பீகிங்கிலிருந்து காண்டன் வரையிலும் ஒரே மாதிரி யான வரவேற்புரை, சமாதானம், ஆசிய ஒற்றுமை, அமெரிக்க ஏகாதிபத்தியம், இரண்டாயிரம் ஆண்டுகளாகவுள்ள கலாசாரத்

தொடர்பு இவைதான். சில நாட்களுக்குப் பின் அவ் வுரைகளை மொழிபெயர்க்க வேண்டிய அவசியமே இல்லை. ஏனெனில், ஒவ்வொரு சொல்லின் பொருளும் எங்களுக்குத் தெரிந்திருந்தது.

கிராமங்களுக்கும் நகரங்களுக்கும் ஒரு வேற்றுமையு மில்லை. பொதுவுடைமைப் புரட்சி நாட்டுப்புறங்களில் துவக்கப்பட்டாலும், கிராம மக்களுக்குப் புது நம்பிக்கையை நிலச் சீர்திருத்தம் ஊட்டினாலும், அதனால் ஒரு நிலையான விவசாயப் பொருளாதாரத்தை ஏற்படுத்த முடியவில்லை. அது அவர்களுக்குப் புதிய அதிகார உணர்ச்சியைக் கொடுத்தது. அவ் வதிகாரத்தை அவர்கள் விவசாயிகள் சங்கங்களின் மூலம் செயற்படுத்தினர். பெண்கள் விடுதலை பெற்றனர். கிராமங்களில் புதிய வாழ்க்கை மலர்ந்தது. இப்பொழுது உழவர்கள் பிறர் தலையீடின்றித் தங்கள் நிலங்களைப் பயிர் செய்ய விரும்பினர்; பணக்காரராக ஆசை கொண்டனர். ஆனால், பொதுவுடைமையாளர்கள் அவர்களைத் தனியே விடவில்லை. பிரச்சாரத்தாலும், தத்துவங்கள் கற்பித்ததாலும், விலைக் கட்டுப்பாட்டாலும் உழவன் பிணிக்கப்பட்டான். மஞ்சூரியாவிலுள்ள கவோகாங் கிராம உழவர்கள் கூட்டுப் பண்ணை உணர்ச்சியை எதிர்த்து வருகின்றனர்.

நாங்கள் கன்பூசியஸின் சின்னம் எழுப்பப்பட்ட குபௌ கிராமத்திற்குச் சென்றோம். 'பொது நலம்' அக் கிராமத்தில் காலத்தால் படிந்த மாசைத் துடைத்ததாகத் தெரியவில்லை. வயல்களில் தானியம் விளைந்து கிடந்தது. ஆனால், கிராமத்தில் தூசியும், வறுமையும் நிறைந்திருந்தன. தெருக்களில் குடிசைகள் இடிந்து கிடந்தன. கனமான சுமையை முதுகில் தாங்கி, உழவன் வயல்களின் குறுக்கே கூனி நடந்தான். ஆகவே, இக் கிராமம் காட்சிக் கிராமமாக இல்லை.

பீகிங் பல்கலைக் கழக நூல் நிலையத்தில் துன்பமான நாட்களைக் கழித்துவிட்டு அலையும்போது, மாவும் இக் கிராமத்திற்கும், கன்பூசியஸ் ஆலயத்திற்கும் வந்திருக்கின்றார். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் கன்பூசியஸ் இங்கு வாழ்ந்து தமது இலக்கியத்தைக் கற்பித்தார். அங்குள்ள மக்களின் வாழ்க்கையில் தமது உபதேச மொழிகளைக் கலந்துவிட்டு மறைந்தார். பெற்றோரிடம் பக்தி, மூதாதையரைத் தொழுதல், கன்பூசிய நல்லொழுக்கங்களில் பயிற்சி, அறிவைப் போற்றுதல், அனு

பவத்தை மதித்தல், புனிவான செயல் ஆகியவை அந் நாட்டின் வாழ்க்கையோடு ஒட்டிக்கொண்டன. சமூகப் பழக்கங்களை மக்கள் ஏற்றுக்கொண்டனர். ஆனால், தங்கள் தனிப்பட்ட வாழ்க்கை முறையை விட்டுவிடவில்லை. சமூகக் கடமைகளை ஆற்றும்போது தனியாக இருந்தே நிறைவேற்றினர். ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த போசூயி போன்ற சுதந்தர மகனால் தான் இவ்வாறு எழுத முடியும்:

நோய்வாய்ப் பட்டு நொந்தமுன் ஆண்டில்
ஒருதுளி மதுவும் உயிருள வரையும்
அருந்தேன் என்று ஆணையு மிட்டேன்.
அடுத்த ஆண்டில் நடப்பதை யெல்லாம்
எடுத்துச் சொல்ல யாரே வல்லார்?
நன்மலர் பெய்த நறவம் மாந்தி
என்மதி மயங்கி யான்கிடந் தனனே.

பழைய பிரபுக்கள் ஆட்சி அகற்றப்பட்டது. அதற்குப் பதில், மக்கள் பெயரால் சர்வாதிகார ஆட்சி நடைபெறுகிறது. புதிய சீனா ஜனநாயகம் பற்றிப் பேசுகின்றது. ஆனால், பொதுவுடைமையின் கீழ் தனி மனிதனுக்குச் சுதந்தரம் இல்லை. தனி மனிதத் தன்மையால் ஊழலும், லஞ்சமும், அதிகார ஆசையும் உண்டாகின்றன என்று கம்யூனிஸ்டுகள் கருதுகின்றனர். பொதுத் திட்டத்தில் குறிப்பிட்டுள்ள சுதந்தரங்கள்—பேச்சுச் சுதந்தரம், சிந்தனைச் சுதந்தரம், பிரசுரச் சுதந்தரம், கூடும் சுதந்தரம், எழுத்துச் சுதந்தரம், மனித சுதந்தரம், வாழும் சுதந்தரம், சமயச் சுதந்தரம், மேடைச் சுதந்தரம்—யாவும் சர்வாதிகாரிக்கே உள்ளன. சுதந்தரம் என்பதற்குப் பதில், பொது நலம் என்றும், தனி யுரிமை என்பதற்குப் பதில், மக்கள் கடமை என்றும் பேசப்படுகின்றன. மக்கள் யாவரும் பொதுவுடைமையாளர்களால் நடத்தப்படுகின்றனர். அங்குச் சட்டம் ஆளவில்லை; அதனால், தனி மனித சுதந்தர மில்லை.

'மக்கள் சர்க்காரின் சட்டங்களை மீறவோ, புதிய குடியரசுக்கு ஊறு விளைக்கும் பிரச்சாரத்தில் ஈடுபடவோ கூடாது' என்று செய்தித் தாள்களுக்கும், வெளியீடுகளுக்கும் ஆணை பிறப்பிக்கப் பட்டுள்ளது. ஆகவே, பேச்சுச் சுதந்தரமோ, கூடும் சுதந்தரமோ அங்கு நிலவ முடியாது. பொதுவுடைமைக் கட்சித் தலைமையை

எதிர்ப்பதோ, பொதுத் திட்டத்தை மறுப்பதோ தேசத் துரோக மாகும். அரசாங்கத்தைத் தவிர வேறு நிலையங்கள் மூலம் செய்திகளை அறிந்து கொள்ள முடியாது. அரசாங்கக் கருத்துக் களே செய்தித் தாள்களில் இடம்பெற வேண்டும். அரசாங்கம் வெளியிடும் வரையிலும், அயல்நாட்டுச் செய்திகளை வெளி யிடுதல் கூடாது. 1951 அக்டோபரில், தூதர் கிர்க்கிற்கு ஸ்டாலின் அளித்த பதிலைக் கூடப் பல நாட்களுக்குப் பின்னரே வெளியிட்டனர். பாகிஸ்தானின் முன்னாள் பிரதம மந்திரி லியாகத் அலிகான் கொலை செய்யப்பட்ட பொழுது நான் நாங்கிங்கி லிருந்தேன். சீனச் செய்தித் தாள்களில் அது பற்றி எதுவுமே வரவில்லை. இந்தியத் தூதராலயத்தின் மூலமாகவே நாங்கள் அதனைக் கேள்வியுற்றோம். இந்திய வானொலி ஒலி பரப்புதலைக் கேட்க விரும்பினோம். ஆனால், 'வெளிநாட்டு ஒலி பரப்புதலைக் கேட்கக் கூடாது' என்று கூறப்பட்டது.

அரசியலுக்கு முதலிடம் தரப்பட்டு, இலக்கியம், கலை, சினிமா, நாடகம் யாவும் ஒதுக்கப்பட்டன. புரட்சிக்காகவே யாவரும் ஈடுபட வேண்டும். ஒரு தடவை சீனப் பொதுவுடைமை யாளர் வெளிநாட்டு நிருபர்களை வரவேற்றனர். அப்போது யாவும் மக்கள் முன் வைக்கப்பட்டன. இன்று யாரையும் எளிதில் சந்திக்க முடியாது; எதையும் எளிதில் பார்க்க முடியாது. மக்கள் தொடர்பால் வன்மை பெற்ற மா கூட, 'காக்கும் நட்சத்திரம்' என்ற பெயருள் மறைந்து வாழ்கின்றார். நான் பல நாடுகளுக்குச் சென்றுள்ளேன். அங்கு மொழி தெரியா திருந்துங்கூட நான் தனிமையை உணரவில்லை.

சீனாவில் போக்குவரத்து சுதந்தரமோ, வசிக்கும் சுதந்தரமோ இல்லை. போலீஸ் அனுமதியின்றி மக்கள் ஒரு ஜில்லாவை விட்டு மற்றொரு ஜில்லாவுக்குச் செல்லமுடியாது. அனுமதிச் சீட்டுப் பெறுதற்குக் காத்திருக்கவேண்டும்; விளக்கம் கூறவேண்டும்; பரி சோதனைக்கு உட்பட வேண்டும். சீனாவைவிட்டுச் செல்வதென்றா லும் அதே தொல்லைதான். வெளியேறும் அனுமதிச் சீட்டிற்கு மாதக் கணக்கில் காத்திருக்க வேண்டும். அதிருஷ்டவசமாக ஒருவருக்கு அனுமதிச்சீட்டுக் கிடைத்தால் ஷாங்காய் நண்பர்கள் அதனை விழாவாகக் கொண்டாடுவார்கள். ஒரு நாளுக்கு மேல்

வேஞ்ரோர் இடத்தில் தங்கக்கூடாது. ஒரு நாள் தங்கினுலும் அதனை அன்றே போலீசுக்குத் தெரிவிக்க வேண்டும்.

மக்கள் போலீஸ் அமைப்பதைப் புரட்சியின் முக்கிய வேலையாக மா கருதினுர். மக்களை ஒன்றுபடுத்த அவர் அப் பயங்கரக் கருவியை விரும்பினுர். கல்வியாலும், பிரச்சாரத்தாலும், மாவட்டத் தெருச் சங்கங்களாலும் மக்கள் சிந்தனை கட்டுப்படுத்தப்பட்டு, அவர்தம் குறை எடுத்துக் காட்டப்பட்டு, அவர் மதியும் மயக்கப்பட்டது. தெருச் சங்கங்களில் மனைவிகள் கணவர்களுக் கெதிராகப் பேச அழைக்கப்பட்டனர்; பெற்ருேருக் கெதிராகப் பேசுதலைக் குழந்தைகள் தம் கடமையாகக் கொண்டனர். ஐந்து பேர் கொண்ட குழு அமைக்கப்பட்டு ஒருவரை யொருவர் கண்காணித்து வந்தனர். ஒவ்வொரு மகனின் நாட்டுப் பற்றும் மேற்பார்வை செய்யப்பட்டு வந்தது.

ஒருங்கே குவிந்த அதிகாரம் அவ்வப்போது மக்களைப் பரிசோதனை செய்து வந்தது. சிறைக்கூடத்தையும், தற்கொலைகளையும் காட்டி மக்களைப் பயமுறுத்தி அடக்கி யாண்டு வந்தது, சர்வாதிகாரம். சீனுவின் பல நண்பர்கள் இப்புதிய வளர்ச்சியைக் கவனிப்பதில்லை. ஏனெனில், புரட்சிக்காகத் தியாகம் செய்ய வேண்டுமென்று அவர்கள் கருதுகின்றனர். 'சீன மக்கள் பட்டினியிலிருந்து விடுதலை பெற்றுவிட்டனர்; பெண்கள் சுதந்தரம் பெற்றனர்' என அவர்கள் கூறுகின்ருர்கள். 'உழவனின் அரிசிப் பானை நிறைந்துவிட்டது; பெண்கள் குரல் ஒலிக்கின்றது' என்பனவெல்லாம் உண்மையே. ஆனுல், வாழ்க்கை சர்வாதிகாரத்திற்கு அடிமைப்படுத்தப் படும்போது, அவை எத்துணைக் காலம் மக்களைத் திருப்தி செய்யும் ?

சீனுவைப் பொதுவுடைமையாளர்கள் 'புதிய ஜனநாயகம்' என்றழைக்கின்றனர். அதில் தொழிலாளர்கள், உழவர்கள், சிறு பிரபுக்கள், தேசிய பிரபுக்கள் ஆகிய நான்கு நண்பர்களும், பொதுவுடைமைக் கட்சித் தலைமையின் கீழ் ஜனநாயக சுதந்தரத்துடன் வாழ்கின்றனர் என்று அவர்கள் சொல்கின்ருர்கள். பல ஆண்டுகளுக்கு முன் 'புதிய ஜனநாயகம்' என்ற பத்திரிகையில் மா எழுதினுர்: "ஒன்றுபட்ட ஜனநாயக வர்க்கத்தினரின் புதிய குடியரசு, தத்துவரீதியில், சமதர்ம இராஜ்யத்தினின்று வேறுபட்ட தொழிலாளர் சர்வாதிகாரமாகும். சீனு, ஜனநாயக அரசியலமைப்

பில் இருக்கும் காலத்தில், ஒரு தனிப்பட்ட வகுப்பினரின் சர்வாதிகார ஆட்சியின் கீழோ, அல்லது ஒரு கட்சியின் தனியுரிமை ஆட்சியின் கீழோ இருக்க முடியாது; இருக்கக் கூடாது.''

இக் கருத்தை நிரூபிக்கவே, சீனாவில் கோமிண்டாங் ஆட்சியை யெதிர்த்த எல்லாக் கட்சிகளும் சேர்ந்து அமைத்த கூட்டு அரசாங்கம் நடைபெறுகின்றது என்று கூறுகின்றனர். அக் கட்சிகளின் உறுப்பினர்களும் கம்யூனிஸ்டுக் கட்சி உறுப்பினர்களாகவே கருதப்படுகின்றனர் என்றும் சொல்கின்றார்கள்.

நான் பீகிங்கிலிருந்தபோது பல இளைஞர்களின் கட்டுரைகள் செய்தித் தாள்களில் வெளியாயின. அவ் விளைஞர்கள் பொதுவுடைமைக் கட்சியில் சேர விரும்புவதாகவும், அதற்குப் பதிலாக அவர்களை வேறு கட்சிகளில் சேருமாறு அறிவிக்கப்பட்டதாகவும் அக் கட்டுரைகளில் காணப்பட்டன. பொதுவுடைமைக் கட்சியில் இன்று ஐம்பது லட்சம் உறுப்பினருக்கு மேல் இருக்கின்றனர். ஆனால், நாட்டில் இருபது லட்சம் தொழிலாளர்கள்தாம் இருக்கின்றனர். உழவர்களால் கட்சி உறுப்பினர் எண்ணிக்கை உயர்ந்துள்ளது. தற்காப்பிற்காகவே இளைஞர்கள் பிறகட்சிகளில் சேருமாறு தூண்டப்படுகின்றனர். கட்சி உறுப்பினர் ஒருவர் கூறினார்: ''பிற கட்சிகளின் அமைப்பை வலுப்படுத்துவதற்கே நாங்கள் புதிய உறுப்பினர்களை அக் கட்சிகளுக்கு அனுப்புகின்றோம்.''

''சீன மக்களுக்கு உண்மையுடனும் ஆர்வத்துடனும் பணி செய்வதும், அவர்களை ஒருபொழுதும் கைவிடாதிருத்தலுமே எங்கள் தலையாய பணி'' என்று மா பல தடவை கூறியுள்ளார். ஆனால், கம்யூனிஸ்டுகள் மக்களின் கருத்தை யறிய முயன்றதில்லை. பொதுத்திட்டம், கூட்டு அரசாட்சி, புதிய குடியரசு யாவும் கம்யூனிஸ்டுக் கட்சித் தலைமையிலேயே அமைக்கப்பட்டிருக்கின்றன. யாவும் தொழிலாளர் ஆணைக்குக் கட்டுப்பட்டிருப்பவை. கூட்டாட்சியில் இருக்கும் குழுக்கள் கட்சியின் சொல் வழியே நிற்றல் வேண்டும்.

'உலகை நடுக்கும் சீனா' என்ற நூலில் ஜாக்பெல்டன் எழுதுகின்றார்: '' 'உன்னுடைய லட்சியத்தையடைய மற்றவனுடைய வழியில் செல்' என்பது லயோலாவின் தத்துவம். அதனைத் திரித்

துக் கூறப்பட்டதே, 'மக்களிடமிருந்து கற்றுக்கொள்; பின் அவர் களுக்குக் கற்றுக்கொடு' என்ற மாவின் தத்துவம். முன்னுளில் பொதுவுடைமைவாதிகள் மிதிவாதிகளை ஆதரித்தனர்; மாணவர் களுக்கு ஊக்கமளித்தனர்; பேச்சுச் சுதந்தரம் வேண்டுமென முழங்கினர்; கொடுமை ஒழிய வேண்டுமெனக் குரல் எழுப்பி னர்.'' இன்றும் அவற்றிற்காகவே முழங்குகின்றனர். அவர்கள் லட்சியத்தை அடைந்துவிட்டனர். 'மக்களுக்குச் சுதந்தரம் அளிக்கப்பட வேண்டும்; பிற்போக்காளர்களுக்கன்று.' எவன் கம்யூனிஸ்டுக் கட்சியின் சர்வாதிகாரத்தை எதிர்க்கின்ருனே, அவனே பிற்போக்காளன்.

''ஓ! நீதான் எங்கள் ஒளிமிகு சின்னம்; வெற்றிக்கொடி!
எங்கள் மதிப்பிற்குரிய மாசேதுங் வாழ்க!
உனது காலத்தில் வாழ்ந்து, உனது வழியைப் பின்பற்றும்
நாங்கள் பெரும்பேறுடையவர்கள்;
உன்னைப் பின்பற்றிப் புது உலகம் செல்வோம்!''

துவக்கத்தில் புரட்சி உணர்ச்சி அரசாங்கத்திற்குப் பலமளித் தது. பின்னர், பிற கட்சி மக்களும், வேறு அரசியல் கொள்கை உடையவர்களும், பல நிலையிலுள்ளவர்களும் ஒன்றுபட்டு ஆதரித்தனர். அவ் வுணர்ச்சியைப் பயன்படுத்தியதால்தான், கம்யூனிஸ்டுகள் சியாங் ஆட்சியை வென்றனர். இப்போது அவ் வுணர்ச்சி கட்டுப்படுத்தப்பட்டது. அவர்கள் அதிகாரத்திற் கும் புதிய வரம்பு கட்டியிருக்கின்றனர்.

மக்களுக்கும் கட்சிகளுக்குமிடையே அங்கு இடைவெளி பெருகிக்கொண்டே வருகிறது. இதுவரை கம்யூனிஸ்டுகள் கிராமங்களிலும் கிராமப் புறங்களிலும் ஏற்பட்ட அனுபவத்தை நம்பியிருந்தனர். இன்று மா ·தமது ரகசியக் கோவிலில் வசிக் கின்ருர். லியுஷவோசி மாயிசத்தின் தத்துவத்தை ஆய்ந்து வரு கிருர். லெனினிசம், ஸ்டாலினிஸம் என்பவற்றின் இயற்கை யான வளர்ச்சியே மாயிஸம் என்று நிரூபிக்கச் செய்யப்படும் முயற்சியில் சீன தன்னுடைய பிரச்னைகளை அணுகுவதற்குத் தத்துவ முறைப்படியே செல்ல வேண்டியதாகிறது. அரசியலி லும் பொருளாதாரத்திலுமுள்ள பற்றுதலும், பழமையிலேற்பட்ட வெறுப்பும் சீனவைப் பொருளாதாரத் துறையில் தனிமையில் தள்ளிவிட்டன.

கூட்டு ஆட்சி உண்மையில் கம்யூனிஸ்டுகளின் ஆட்சியே. கடந்தகாலச் சரித்திரத்தின் நிகழ்ச்சியினுலேயே பிற கட்சிகளும் தொடர்ந்து இருக்கின்றன. இவைகள் எவ்வளவு சீக்கிரத்தில் அழிந்துவிடும் என்பது உள்நாட்டு நிலைமைகளைவிடச் சர்வதேச நிலைமைகளில் ஏற்படும் மாறுதலைப் பொறுத்தே இருக்கின்றன. 'நம்முடன் இருப்பவர்கள் நம்முடனேயே இருப்பார்கள்' என்று மா சொல்லியிருக்கிருர். தன் கொள்கைகளை விட்டுக் கொடுத்துக் கம்யூனிஸ்டுகளின் கைதி போலவே இருக்கும் திருமதி சன் இன்னும் அங்கிருப்பது, அவர் சன்யாட்சனின் மனைவி என்பதனுல்தான்!

கம்யூனிஸ்டுக் கட்சிக்கும் ராணுவத்திற்கு மிடையே பிளவு ஏற்படலாமென ஒரு சிலர் கருதினுர்கள். பிரபுக்களது தனி மாகாண ஆசையால் நாடு சிதறிவிட்டது என்ற சரித்திர ஆதாரங்களை அவர்கள் காட்டுகின்றனர். ஆனுல், பழைய செஞ்சேனை சூடேயிடம் பணிவும் பற்றுதலும் கொண்டது. சூடே மாவிடம் பக்தியுள்ளவர். எந்தப் பிரதேசத்தில் ராணுவத் தலைவனுக்குச் செல்வாக்கு இல்லையோ, அங்கேதான் அவன் நியமிக்கப்பட வேண்டுமென்பது மாவின் கட்டளை.

புதிய ஜனநாயகம் பெயரளவில்தான் ஜனநாயகம். கூட்டு ஆட்சி வெறும் மேல்பூச்சுத்தான். கொள்கைகளைப் பொறுத்த வரை சீனமக்களுக்கு ஒன்றும் பேச முடியாது. தலைவரின் குரலோடு சேர்ந்து மக்களும் முழங்குவார்கள். இம் முறையில்தான் அவர்கள் கொள்கையைச்செயல்படுத்துகின்றனர். ஆனுல், தனி மனிதன் இன்றும் உரிமையின்றி இருக்கின்ருன். அவன் குரல் எழுப்பிப் பணி செய்கின்ருன். சீனுவில் எல்லா அதிகாரங்களும் ஒன்றுபட்ட சர்வாதிகார ஆட்சியால் நடைபெறுகின்றன; பொதுவுடைமை வாதிகளே அவற்றை ஆட்டி வைப்பவர்கள். பழங் காலத் தெய்வங்களைப் பணிய வைத்து வாழ்க்கை லட்சியங்களை நிறைவேற்ற முடியுமென அவர்கள் காட்டுகின்றனர்.

இந்தப் புதிய எதேச்சாதிகாரம் மக்களின் அன்ருட வாழ்க்கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண் டிருக்கிறது. சீனம் அமைதியாக இருக்கிறது. உள் நாட்டில் சட்டமும் ஒழுங்கும் நிலவுகின்றன. இந் நாட்டிலுள்ள பல லட்சக்கணக்கான மக்க

ளுக்கு இது ஒரு பெரிய அமைதிதான். இந்த அமைதியிலே தங்கள் சொந்த நிலத்தை அவர்களே உழலாம். நாள்தோறும் சாப்பிடவும் முடியும். ஆனால், விரைவில் பயிரிடுவோரின் தொகை பெருகும்போது நிலச் சீர்திருத்தத்தின் பெருமை வெறும் மயக்கமே என்பது தெரிந்துவிடும். சீனாவின் வெளிநாட்டுக் கொள்கை அந் நாட்டை, மனிதர்களின் வாழ்வை மட்டுமன்றி அவர்களின் எண்ணத்தையே அடிமைப்படுத்த முயலும் ஒரு புதிய ஏகாதிபத்தியத்துடன் கட்டிப் போட்டுவிட்டது. இந்த முறையில் லட்சக்கணக்கான மக்கள் மீது புதிய அடிமைத்தனம் விதிக்கப்பட்டிருக்கிறது. 'நவீன ஜனநாயகம்' என்று அழைக்கப்படுகிற இந்தச் சீன ஜனநாயகம், விதியின் விளைவால் தன் சொந்த அழிவிற்கே வித்தூன்றிக்கொண் டிருக்கிறது. அது தவிர்க்க முடியாது.

சீன வரலாற்றை உள்ளடக்கிய பாட்டு ஒன்றை மா இயற்றினார்:

வாடை மிகுந்த வடதிசை நாட்டில்
ஆயிரம் வேலி அமிழ்ந்தது பனிக்கீழ் ;
பைம்பயிர் முளையாப் பாழ்வெளி தன்னை
மாஅரண் துலங்கும் மதிற்புறம் காணீர் !

சீனா வருங்காலத்திற்கு நம்பிக்கை யூட்டவில்லை. மா தமது வெற்றியை அறிந்த தீர்க்கதரிசி. அவருடைய தவறுக்கு அவரே அழிவாரோ ?

———

பிற் சேர்க்கை

# பொதுத் திட்டம்

**1949** அக்டோபர் முதல் நாள், பீகிங்கிலுள்ள தியன்ஆன்மான் சதுக்கத்தில் மாசேதுங், சீன மக்கள் குடியரசு அமைக்கப்பட்டதை அறிவித்தார்: "இன்று, சீனுவின் நாற்பத்தேழரைக் கோடி மக்களும் எழுச்சி பெற்றுள்ளோம். நமது நாட்டின் வருங்காலம் அளப்பரிய பொலிவுற்று விளங்கும். இன்று அமைக்கப்பட்ட அரசாங்கம், பொதுத் திட்டப்படி, சீனு முழுதும், மக்கள் ஜனநாயக சர்வாதிகாரமாக ஆட்சி செலுத்துகின்றது."

பொதுத் திட்டம் என்னும் சட்டம் அறுபது பிரிவுகளைக் கொண்டது. அத்துடன் சீன மக்களின் அரசியல் ஆலோசனை மாநாடு, மக்கள் மத்திய அரசாங்கத்தின் அடிப்படைச் சட்டங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. 1949 செப்டம்பர் 21 முதல் 30 வரை பீகிங்கில் நடைபெற்ற மக்கள் அரசியல் ஆலோசனை மாநாட்டின் முதற் கூட்டத்தில் அத் திட்டம் நிறைவேற்றப்பட்டது. அக் கூட்டத்திற்குத் தொழிலாளர், உழவர் சங்கங்களின் பிரதிநிதிகளும், பல்வேறு அரசியல் கட்சிகளின் பிரதிநிதிகளுமாக மொத்தம் 662 பேர் அழைப்பின்பேரில் வந்திருந்தனர். கொள்கைப்படி, கம்யூனிஸ்டுக் கட்சியிலிருந்தும், பிற பத்துக் கட்சிகளைப்

போன்று அதே எண்ணிக்கைப் பிரதிநிதிகளே வந்திருந்தனர். ஆனால், மக்கள் விடுதலைப் படையினர்; விடுதலை பெற்ற கம்யூனிஸ்டுப் பகுதிகள் ; மாணவர்கள், மாதர்கள், இளைஞர்கள் ஆகியோரின் ஜனநாயகச் சங்கங்கள்; தொழிலாளர் - உழவர் சங்கங்கள் நீங்கலாக உள்ள பிற தொழில்கள் ஆகியவற்றின் பிரதிநிதிகளும் வந்திருந்தனர். கொள்கைப்படி, கம்யூனிஸ்டுகளுக்கு மூன்றில் ஒரு பகுதியினரே இருந்தனர். இக் குழுக்கள் சேர்க்கப்பட்டமையால் அவர்கள் எண்ணிக்கை மூன்றில் இரண்டு எண்ணிக்கைக்கும் மேம்பட்டுவிட்டது.

சீன மக்கள் அரசியல் ஆலோசனை மாநாடு (CPPCC) அந்நாட்டின் சட்டசபையாக இருக்கின்றது. அடிப்படைச் சட்டங்களையும், பொதுத் திட்டத்தையும் திருத்துவதற்கும், அகில சீன மக்கள் சபையைக் கூட்டுவிப்பது வரையிலும் தேசியக் குழுவைத் தேர்ந்தெடுக்கவும், அம் மாநாட்டிற்கு அதிகாரம் உண்டு. சீ. ம. அ. ஆ. மாநாடு மூன்றாண்டுகளுக்கு ஒரு முறை கூடுகின்றது. அதற்கிடையில் சீ. ம. அ. ஆ. மாநாட்டின் தேசியக் குழு அதன் பணிகளை நிறைவேற்றுகின்றது.

சீ. ம. அ.ஆ. மாநாட்டினால் தேர்ந்தெடுக்கப்பட்ட 198 உறுப்பினரைக் கொண்டது தேசியக் குழு. அது ஆறு மாதங்களுக்கொருமுறை செயற் குழுவின் தலைமையின்கீழ்க் கூடுகின்றது. தேசியக் குழுவின் முடிவுகள் நிறைவேற்றப்படுவதை செயற் குழு மேற்பார்வை செய்கின்றது. சீ. ம. அ. ஆ. மாநாட்டிற்கு மக்கள் மத்திய அரசாங்கமும், நிர்வாகக் குழுவும் இருக்கின்றன. நிர்வாகக் குழுவில் ஒரு தலைவரும், ஆறு துணைத் தலைவர்களும், ஐம்பத்தாறு உறுப்பினர்களும் உள்ளனர். இக் குழுவின்கீழும் ஐந்து சிறு குழுக்களும், இருபத்தொரு துறைகளும், மூன்று சங்கங்களும், நான்கு நிர்வாகங்களும், மக்கள் வங்கியும் இருக்கின்றன.

மாசேதுங் அரசாங்கத்தின் தலைவர். அவரின் கீழ் ஆறு துணைத் தலைவர்கள் இருக்கின்றனர். சூடே, லியுஷவோசி, திருமதி சன், கவோகாங், இன்னும் இருவர் துணைத் தலைவர்களாவார்கள். நிர்வாகக் குழுவில் பிரதமர் சூயென்லாயும், நான்கு துணைத் தலைவர்களும், பதினாறு உறுப்பினர்களும் இருக்

கின்றனர். சூயென்லாய்தாம் வெளிநாட்டு விவகாரத் துறையையும் பார்த்து வருகின்ருர்.

நிர்வாகக் குழுவின் கீழுள்ள ஐந்து துணைக் குழுக்கள் பல இலாகாக்களின் பணியை இணைக்கின்றன. எடுத்துக்காட்டாக நிதி - பொருளாதாரக் குழு, நிதி வாணிபம் தொழில் விவசாயம் போக்குவரவு ஆகியவற்றை இணைக்கின்றது.

சீ. ம. அ. ஆ. மாநாடு ராணுவக் குழுவையும், உயர் நீதி மன்றத்தையும், தலைமைப் பாதுகாப்பாளர் அலுவலகத்தையும் தேர்ந்தெடுக்கின்றது. மா ராணுவக் குழுவின் தலைவ ராவார். சூடே, சூயென்லாய், லியுஷவோசி, கவோகாங் இன்னும் இரு தளபதிகள் அதன் துணைத் தலைவ ராவார்கள்.

நாடு ஆறு நிர்வாகப் பிரதேசங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவற்றுள் நான்கு, ராணுவ நிர்வாகக் குழுவால் ஆட்சி செய்யப்பட்டு வருகின்றன. வடக்கு, வடகிழக்குப் பகுதிகளில் மக்கள் அரசாங்கம் அமைந்துள்ளது.

"ஜனநாயக சர்வாதிகாரம் என்பது, தொழிலாளர்கள், உழவர்கள், சிறு பிரபுக்கள், தேசியப் பிரபுக்கள் ஆகியோரின் ஜனநாயக ஐக்கிய முன்னணியின் அரசாங்க அதிகாரம்" என்று பொதுத் திட்டத்தின் முன்னுரையில் கூறப்பட்டுள்ளது. இவைதாம் 'நான்கு நண்பர்கள்.' பழைய அரசுரிமைகளை அழிக்கவும், அதிகார மூலதனங்களைக் கைப்பற்றவும், நிலச் சீர்திருத்தம் ஏற்படுத்தவும் வேண்டுமெனப் பொதுத் திட்டம் அரசாங்கத்தைக் கேட்டுள்ளது. 'விவசாய நாட்டைத் தொழில் நாடாக மாற்ற வேண்டும்' என, இராஜ்யத்தின் நோக்கத்தை அது குறிப்பிட்டுள்ளது.

ஆருவது பிரிவில் சீனமக்களுக்குச் சிந்தனைச் சுதந்தரம், பேச்சுச் சுதந்தரம் முதலியன உண்டு எனக் கூறப்பட்டுள்ளது.

நாட்டின் ஒவ்வொரு பிரஜையும் நாட்டைக் காப்பதற்கும், சட்டத்திற்குக் கட்டுப்படுவதற்கும், ஒழுங்காக நடப்பதற்கும், பொதுச் சொத்தைப் பேணுதற்கும், பொதுச் சேவையும் ராணுவ சேவையும் செய்யவும், வரிகளைக் கொடுக்கவும் கடமைப்பட்டவன் என 8- வது பிரிவில் சொல்லப்பட்டுள்ளது.

11-வது பிரிவில் வெளிநாட்டுக் கொள்கை தரப்பட்டுள்ளது: "சீனு, விடுதலையையும் சமாதானத்தையும் விரும்பும் எல்லா நாடுகளுடனும் ஒன்றுபடும். முதலில் சோவியத் ருஷ்யா..."

பொதுத் திட்டத்தின் ஏனைய பிரிவுகள் அரசாங்க அதிகார அமைப்பைப் பற்றிக் கூறுகின்றன. பொருளாதாரக் கொள்கையும் விளக்கப்பட்டுள்ளது. கோமிண்டாங் சட்டங்கள் யாவும் ஒழிக்கப்பட்டன.

26-வது பிரிவு கூறுகின்றது: "உழைப்பிற்கும் மூலதனத்திற்கும் நலம் விளைக்கும் கொள்கைகளால், பொதுச் சொத்துக்களையும் தனிப்பட்டோர் சொத்துக்களையும் சேர்த்து, உற்பத்தியைப் பெருகச்செய்வதே மக்கள் குடியரசின் அடிப்படை நோக்கமாகும்" பொருளாதாரத்தின் பல பிரிவுகளை ஒன்றுபடுத்தி, தொழிற்சாலை நிர்வாகக் குழுக்களை அமைத்து, நாட்டைத் தொழில் மயமாக்கிச் சமதர்மத்திற்கு அடிகோலுமாறு அரசாங்கம் வேண்டிக் கொள்ளப் படுகின்றது. சீனுவில் வசிக்கும் பிற தேசத்தாரின் கலைக்கும் மொழிக்கும் பாதுகாப்பும், பிரதேச சுயாட்சி உரிமையும் நல்கத் திட்டம் உறுதியளிக்கின்றது.

"மக்கள் நலனை ஆதரித்ததற்காகவும், சமாதானத்திற்கும் ஜனநாயகத்திற்கும் போராடும் கிளர்ச்சியில் பங்கு கொண்டதற்காகவும், அங்குள்ள அரசாங்கத்தால் கொடுமைப்படுத்தப்பட்டு, சீனுவில் அடைக்கலம் புகும் வெளிநாட்டவர்க்குச் சீனு, புக லிடம் கொடுக்கும்" என்பது கடைசிப் பிரிவு.



